# புதுவூர்ச்சக்கரவர்த்தி அம்மானை

பதிப்பாசிரியர்

## மொ. மருதமுத்து



# புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை

பதிப்பாசிரியர்

**மொ. மருதமுத்து**




**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**

சி.ஐ.டி. வளாகம், தரமணி

சென்னை-600 113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title of the book | : | **Puduvoor Chakkaravarthy Ammanai** |
| Editor | : | **M. Marudhamuthu** |
| Published by | : | **International Institute of Tamil Studies,** C.I.T. Campus, Tharamani Madras-600 113 |
| Price | : | Rs. 27.00 |
| Publication No. | : | 205 |
| Language | : | Tamil |
| Edition | : | First Edition |
| Date of Publication | : | March, 1995 |
| Number of Pages | : | vi + 126 |
| Paper used | : | 16 kg. S.S. Map Litho |
| Size of the book | : | Demy 1/8 octav |
| Printing types used | : | 10 point |
| Number of copies | : | 1000 |
| Photo-typesetting and Offset Printing by | : | **Pavai Printers Pvt. Ltd.,** 142, Jani Jan Khan Road, Royapettah, Madras-600 014. Phone: 83 24 41 |

Published with the financial assistance from the Directorate of Tamil Development, Govt. of Tamil Nadu.

# அணிந்துரை

**ச. சு. இராமர் இளங்கோ**
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்.

நமக்கினிமை தரும்படியாக வாய்த்த நல் அமுதாகிய தமிழ் தொன்மையது. முன்னைப் பழைமைக்கும் முன்னைப் பழையதாக விளங்குகின்ற அதே வேளையில் பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியதாக இலங்குகிறது.

இவ்வாறு சீரிளமைத் திறத்துடன் தமிழ் இலங்குவதற்குக் காரணம் காலந்தோறும் பல்வேறு சங்கங்களும், இயக்கங்களும் நிறுவனங்களும் ஆற்றி வருகின்ற பணிகளே.

இவ்வகையில் தற்காலத்தில் தமிழுக்குத் தொண்டுசெய்யும் பல்வேறு அமைப்புகளில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் பங்கு கணிசமானது. நுட்பமான புலமைமிக்க பல்வேறு ஆய்வுகளில் ஈடுபட்டு பல்வேறு நூல்களை வெளியிட்டு இந்நிறுவனம் தமிழ்ப்பணியாற்றி வருகிறது.

குறிப்பாக இந்நிறுவனத்தின், தொன்மை வாய்ந்த ஆயிரக்கணக்கான ஓலைச்சுவடிகளைப் பாதுகாத்து வரும் சுவடியியல் துறையின் செயல்பாடு பாராட்டத்தக்க ஒன்று. இத்துறையின்வழி அச்சில் வெளிவராத அழியும் நிலையிலுள்ள பல சுவடிகள் வெளியிடப்பட்டு வருகின்றன. 1979-ஆம் ஆண்டிலிருந்து இத்துறை சுவடியியல் பட்டய வகுப்பினைத் தொடர்ந்து நடத்தி வருகின்றது. ஆண்டுதோறும் ஐந்து மாணாக்கர்களுக்கு மாதம் 300 ரூபாய் உதவித்தொகையும் வழங்கி, சுவடியியலில் பயிற்சியளித்து வருகின்றது. வெறும் ஏட்டுக்கல்வியாகப் பயிலாமல் செயல் முறையிலும் சிறந்து விளங்கும் இப்பயிற்சியில் பங்குபெறுகின்ற ஒவ்வொருவரும் ஆண்டிறுதியில் நிறுவனத்திலுள்ள யாதானுமோர் சுவடியினைப் பதிப்பிக்கின்ற ஆற்றலினைப் பெறுகின்றனர். அவர்களுள் பலர் நல்ல வேலை வாய்ப்புகளைப் பெற்றுள்ளனர். எதிர் காலத்தில் இத்தகு சுவடியியல் அறிவு படைத்தோர் பலர் பல்வேறு பகுதிகளிலும் பரந்து தமிழுக்குத் தொண்டு செய்வார்கள் எனில் அந்தப் பெருமை முழுவதும் இந்நிறுவனத்தையே சாரும். இத்தகு சுவடியியல் பட்டயவகுப்பினை இந்நிறுவனம் ஒன்றே இதுகாறும் நடத்தி வருகின்றது.

மேலும் இந்நிறுவனம் இதுவரை இரு சுவடியியல் குறுங்காலப் பயிலரங்கினை நடத்தியுள்ளது. அவ்வகையில் அண்மையில் நடைபெற்ற பயிலரங்கில் எண்பது மாணவர்கள் கலந்து சுவடியியல் பயிற்சியை முடித்துச் சென்றனர். இன்னும் இதுபோன்ற பல பயிலரங்குகளை இந்நிறுவனம் நடத்தவுள்ளது.

இங்ஙனம் சுவடியியல் துறை தமிழுக்குத் தொண்டாற்றிவரும் இவ்வேளையில் சுவடிகளில் புதைந்துள்ள மாணிக்கங்களைத் தமி ழன்னையின் முடியில் பதித்து அழகு பார்க்கும் முகமாகப் பல்வேறு சுவடிகள் நூல்வடிவம் பெற்றுள்ளன.

சித்தமருத்துவம் பெருவழக்காகி வரும் இந்நாளில், கணக் கின்றிக் காணப்படும் சித்த மருத்துவச் சுவடிகளில் சிலவற்றையும், அம்மானை, சதகம் போன்ற சிற்றிலக்கியங்களையும், கதைப்பாடல் கள் சிலவற்றையும் பதிப்பிக்க வேண்டுமென்ற வேணவாவோடு தெரிந்தெடுத்த சில நூல்கள் தற்போது அச்சேறுகின்றன.

அம்மானை இலக்கிய வகைக்கு மேலும் ஒரு படைப்பைச் சேர்க்கும் வகையில் 'புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை' என்ற இந்நூல் வெளிவருகிறது. கதைப் பாடல்களின் கூறுகளைத் தன்னுள் கொண்டுள்ள இந்நூல் உயர்ந்த மனிதப் பண்புகளைப் போற்றுவதாக சமூகச் சீர்கேடுகளைச் சுட்டுவதாக அமைகிறது.

இந்நூல் வாயிலாக ஏற்படும் தமிழ்ச் சிறப்பினை எண்ணி இறும்பூதெய்துகின்ற இவ்வேளையில், நிறுவன மேம்பாட்டிற்கு உறுதுணை புரிகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு கல்வி யமைச்சர் க. பொன்னுசாமி அவர்களுக்கு நன்றிகூற இந்நிறுவனம் கடமைப்பட்டுள்ளது.

தமிழ் வளர்ச்சித் துறையின் நிதி உதவி பெற்று வெளிவரும் ஆறு நூல்களுள் இதுவுமொன்று. எங்கள் நிறுவனத்தின்பால் பேரன்பு காட்டுகின்ற தமிழ் வளர்ச்சிப் பண்பாட்டுத் துறைச் செயலாளர் திரு. சா. பா. இளங்கோவன், இ.ஆ.ப. அவர்களை யும், இச்சுவடி வெளியீட்டுக்கு நிதிவுதவி நல்கிய தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் இயக்குநர் முனைவர் சி. செல்வராசு அவர்களையும் இவ்வேளையில் நன்றியுடன் நினைவுகூர்கிறேன்.

நூல்களின் அச்சேற்றும் பணிகளை முனைப்புடன் செய்த முனைவர் டி. மகாலட்சுமி அவர்களையும், தமிழுலகம் பயன் பெறும் வகையில் இந்நூலைச் சிறப்பாகப் பதிப்பித்துத் தந்த சிறப்பாகப் பதிப்பித்துத் தந்த மொ. மருதமுத்து பி.எஸ்ஸி., எம்.ஏ., அவர்களையும் பாராட்டுகிறேன். குறித்த காலத்தில் சிறந்த முறை யில் அச்சிட்டுத் தந்த பாவை அச்சகத்தார்க்கும் நன்றி.

சுவடிகளை வைத்திருப்போர் எங்களது நிறுவன நூலகத்திற்கு அதனை நல்கினால் தமிழில் பல அரிய நூல்கள் வெளிவர உறுதுணை புரிந்த பெருமைக்கும் சிறப்புக்கும் உரியவர்களாவர்.

**இயக்குநர்**

# பொருளடக்கம்


அணிந்துரை .................................. iii

பதிப்புரை ...................................... 1

புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை......... 47

பின்னிணைப்புகள்

சொல்லடைவு.............................. 119

துணைநூற்பட்டியல்....................... 125

# பதிப்புரை

## நுழைவாயில்

அச்சுக்கலை ஏறத்தாழ கி.பி. 16-ஆம் நூற்றாண்டளவில் தமிழகத்துக்கு வந்தது. அதற்கு முன்னர் ஓலைச்சுவடிகளே நூல்களாக விளங்கின. அச்சுக்கலை தமிழகத்திற்கு நுழைந்ததன் வாயிலாகச் சுவடிகள் பல அச்சு வடிவம் பெற்று நூலாகி வருகின்றன. இருப்பினும் எண்ணற்ற இலக்கியங்கள் இன்னும் சுவடிகளாகவே உள்ளன.

## நூலைத் தேர்ந்தெடுக்கக் காரணம்

அச்சில் வெளிவராது சுவடிகளிலேயே இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கும் இலக்கியங்களுள் மருத்துவத்திற்கு அடுத்து மிகுதியாக விளங்குவது சிற்றிலக்கியங்களும், கதைப்பாடல்களுமாகும். அவ்வகையில் அம்மானையும் ஒன்று. அந்நெறியிலேயே ‘புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை’ என்ற இச்சுவடி இதுவரை அச்சில் வெளிவராததாக விளங்குவதோடு நாட்டுப்புறச் சாயல் அமைந்த கதைப்பாடலாகவும் ‘அம்மானை’ என்ற அமைப்பிலும் விளங்குகிறது. உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகத்தில் 13-ஆம் எண்ணிட்ட இச்சுவடி நூல் அம்மானை இலக்கிய வரிசையில் கூடுதலாக, புதிதாக அச்சுலகிற்கு நுழைகின்றது.

இவ்வம்மானையின் கதைத் தன்மையையும், கதைக் கருவையும் ஒட்டியே தென்னாற்காடு மாவட்டம், திட்டக்குடி வட்டத்திலுள்ள செவ்வேரி, கீரனூர், நெடுங்குளம், நிராமணி மற்றுமுள்ள ஊர்களிலும், திருச்சி மாவட்டம் பெரம்பலூர், அரியலூர் வட்டங்களிலும், ‘நொண்டிச் சக்கரவர்த்தி நாடகம் அல்லது சனீஸ்வரன் நாடகம்’ என்ற பெயரில் அமைந்த நாடகம் தெருக்கூத்தாகக் கோவில் விழாக் காலங்களில் நடித்துக் காட்டப்பட்டு வருகின்றது. எனவே இரண்டின் தன்மைகளைப் பற்றி அறியும் ஆவலுடனும், இச்சிறப்பு மிக்க சுவடி நூலைப் பதிப்பாய்வு செய்ய வேண்டும் என்ற நோக்கில் இந்நூல் தேர்ந்தெடுக்கப் பட்டது.

## புற அமைப்பு

புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை என்ற இச்சுவடியானது 62 ஏடுகளைக் கொண்டுள்ளது. இதன் நீளம் 39.5 செ.மீ அகலம் 3 செ.மீ. ஆகும். சுவடியின் தொடக்கத்திலும் முடிவிலும் நரம்பு கிழிக்காத

வெற்று ஏடுகள் இரண்டு வைத்துக் கயிற்றால் கட்டப்பெற்றிருக்கிறது. சுவடி பழைய ஏடாதலால் ஒரு சில ஏடுகள் தேய்வுற்றும், சிதைந்தும் காணப்படுகின்றன.

## அக அமைப்பு

ஏட்டின் அக அமைப்பில் தொடக்கம், நூல் பகுதி, முடிவு என்ற மூன்று பகுதிகள் அடங்கியிருக்கும். இவ்வமைப்பே இச்சுவடியிலும் காணப்படுகின்றது. சுவடியின் முன்னருள்ள வெற்று ஓலையை அடுத்து, நூல் தொடங்குகிறது. நூல் தொடங்கும் ஏட்டின் முதற்பக்கத் தின் இடது ஓரத்தில் 'புதுவூர் சக்கரவர்த்தியம்மானை' என்று நூலின் பெயர் எழுதப்பெற்றுள்ளது.

## தொடக்கம்

சுவடியின் தொடக்கமாக, முதல் ஏட்டின் இடது ஓரத்தில் 'ஹரிஓம் நன்றாக, குருவே துணை, தேவி சகாயம்' என்ற தொடர்கள் அமைந் துள்ளன. தொடர்ந்து அவ்வேட்டில் 'நூற்பயன்' பற்றிய பாடல் இடம் பெற்றுள்ளது. நூற்பயன் பாடலுக்கு அடுத்து 'குமரன் துணை' என்று கூறப்பட்டுள்ளது.

1. தேடிய பொருள் கைக்கூடும்
2. சிவகதி ஆகிய பலன்கிட்டும்
3. பாவம் ஓடிப்போகும்
4. கலியும் வாங்கும்

ஆகிய இப்பயன்கள் புதுவூராசன் கதையைக் கேட்டவர்க்கும் பாடி யோர்க்கும் உண்டாகும்.

## நூல்

நூலின் கண் நூற்பயன் பாடலோடு சேர்த்து 2201 வரிகள் இடம்பெற்றுள்ளன. கதை முழுமையாக உள்ளது. ஒரு பக்கத்திற்கு இரண்டு பத்திகள் வீதம் (columns) இரு பக்கங்களிலும் ஒவ்வோரேடும் எழுதப்பட்டுள்ளன. பக்கத்திற்கு 18-20 வரிகள் காணப்படுகின்றன. வரியின் இறுதியைக் குறிக்கும் வகையில் ஈற்றெழுத்து சற்று இடம் விட்டு எழுதப்பட்டுள்ளது. இந்நூல் ஒரே தொடர்ச்சியாகக் கதையைக் கூறிச் செல்லும் போக்கினையுடையது. இதன் அடிகள் பாடல் வரை யறை செய்து கொள்வதற்கு ஏற்றவாறு அமைந்துள்ளன. அடிகளின்

எண்ணோ பாடல்களின் எண்ணோ குறிக்கப்படவில்லை. ஏடுகளின் இடப்புற ஓரத்தில் ஏட்டு வரிசை எண் தமிழ் எண்களால் தரப்பட்டுள்ளது. நூலில் நிறுத்தக்குறிகள் எங்குமில்லை.

## பாட்டமைப்பு

கதை கூறும் வகையில் இதன் பாட்டு அமைப்பு உள்ளது. தொடர் நிலைச் செய்யுள் வடிவினது. ஒரு குறிப்பிட்ட கருத்தினை வெளிப் படுத்தக் கவிஞன் ஒரு புற அமைப்பினை எடுத்துக் கொள்கிறான். அவ்வாறு வெளிப்படுத்தும் பா அமைப்பினை வெண்பா, ஆசிரியப்பா, வஞ்சிப்பா, கலிப்பா, மருப்பா என ஐந்து வகைப்படுத்துவர் இலக்கண நூலார் (யாப்பருங்கலக்காரிகை-22). அம்மானைப் பாடல் கதைப் பாடல் நிலை என்னும் வகையில் சந்தப்பாடல் அமைப்பில் பாடப் பெறுவதாகும். நாட்டுப்புற மக்களுடைய உள்ளங்களை இப்பாடல்கள் கவர்வதற்கு இவர்கள் தேர்ந்தெடுக்கும் இவ்விசைப்பாங்கும் ஒரு காரணமாகும். யாப்பிலக்கண நூலைக் கற்றுப் பயின்ற புலவர்களே இவ்வம்மானைகளைப் பாடினார்கள் என்பதுமில்லை. இலக்கண அறிவு அதிகம் பெறாத நாட்டுப்புறக் கவிஞர்களும் சந்த அமைப்பினை மையமாகக் கொண்டு இயல்பாகவே, சற்றும் முயற்சி வருத்தங்களின்றி இயற்றிய பாடல்கள் இவை.

இவ்வம்மானையின் ஆசிரியரும் பொது மக்கள் விரும்பும் சந்தப் பாடல் அமைப்பிலேயே பாடியுள்ளார். பாடலின் இடையிடையே 13 அறுசீர் விருத்தப் பாடல்களும் (நூற்பயன் பாடல் அல்லாமல்) ஒரு வெண்பாவும் இடம்பெற்றுள்ளன. இவ்விருத்தப் பாடலும், வெண் பாவும் பின்னர் நடக்கும் கதையைக் கூற, ஆசிரியர் அமைத்துக் கொண்ட பா வடிவங்களாகும். விருத்தம் முடிந்து சந்தப்பாடல் தொடரும் அமைப்பை 'நடை' என்ற சொல்லால் குறித்துள்ளார்.

## எழுத்தமைப்பு

எழுத்துகள் ஓரளவு படிக்கக் கூடியனவாக உள்ளன. ஏடெழுதி யோர்க்குப் போதிய மொழியறிவு இன்மையால் எழுத்துப் பிழை மிகுதியாக உள்ளது. ஒற்றெழுத்துகள் புள்ளிடப்பெறவில்லை. எகர, ஒகர உயிர்மெய், உயிரெழுத்துகளில் குறில்நெடில் வேறுபாடு இல்லை. ஏனைய உயிர், உயிர்மெய்களில் குறில்நெடில் வேறுபாடு பேணப் பட்டுள்ளது.

அ. 'ஈ' என்ற உயிர்நெடில் 'இ' என்று குறிலைச் சுழித்து எழுதப்பட்டுள்ளது.

சான்று:

ஈந்தார் — இீயந்தார் (1867)

ஈசுரனார் — இீசுரனார் (1410)

'ஊ' என்ற நெடில், 'உள' என ஈரெழுத்தாகப் பிரித்து எழுதப் பட்டுப் படிப்போர்க்கு மயக்கம் தரும் வகையில் காணப்படுகின்றது.

ஊருமில்லை — உளருமில்லை (231)

3. ஐகார உயிரின் வடிவம் 'அய்' என்றே எழுதப்பட்டுள்ளது. அதன் மொழிமுதல் உயிர்மெய் வடிவம் இடம்பெறும் நிலையில் ஐகாரத்தோடு 'யகர' ஒற்றும் இணைந்து காணப்படுகிறது.

ஐயா — அய்யா (1229)

ஐயோ — அய்யோ (1299)

வையகம் — வைய்யகம் (1459, 1461)

ஐங்கரா — அய்ங்கரா (1808)

ஆ. 1. ஒற்று மிகக்கூடாத இடங்களிலெல்லாம் ஒற்றுகள் மிகுந் துள்ளன. குறிப்பாக 'லகர' ஒற்றையடுத்து வருமொழி வல்லொற்று மிகுகின்றது. சான்று:

தப்பாமல்ச் சோர்வொன்றும் (133)

வையகத்தில்ச் சும்மா (536)

தலைமீதில்க் கட்டெடுக்க (603)

2. ஓரொற்று வரவேண்டிய இடத்தில் பிறிதோரொற்று வந்து மயங்கும் நிலை காணப்படுகின்றது. சான்று:

சர்ப்பம் — சற்பம் (288)

அமுர்தங் — அமுற்தங் (318)

3. ஒற்றுகள் வரவேண்டிய இடங்களில் விடுபட்டுள்ளன. சான்று:

திருப்பாதம் — திருபாதம் (35)

பார்த்து — பாத்து (227)

வளர்த்தோமே — வளத்தோமே (316)

இ. நூல் முழுவதும் 'ரகர' உயிர்மெய்க்கும் 'ா' என்ற துணை எழுத்திற்குமிடையே வரிவடிவில் வேறுபாடு பேணப்படவில்லை.

ஈ. ழ-ள; ள-ழ; ந-ண-ன; த்த-ற்ற; ற்ற-த்த ஆகிய இன எழுத்து களுக்கு இடையே வேறுபாடுகள் சரிவரப் பேணப்படவில்லை. ஓரெ ழுத்து வரவேண்டிய இடத்தில் பிறிதோர் ஒற்று மயங்கி நிற்கின்றது.

உ. வல்லின உயிர்மெய்கள் தம்மொற்றுகளுடன் கூடி வருங்கால் அவ்விரண்டையும் இணைத்துக் கூட்டெழுத்தாக எழுதுதல் தமிழ் மரபு. அவ்வாறே இச்சுவடியில் 'ட்ட' என்ற இரண்டு எழுத்துகளும் ஒன் றிணைக்கப்பெற்று கூட்டெழுத்தாக ஓரிடத்தில் எழுதப்பட்டுள்ளது.

ஊ. சுவடியில் காணப்பெறும் பிழைகளும் திருத்தங்களும்

எழுத்துப் பிழைகளேயன்றி வேறுசில பிழைகளும் ஏடெழுதுவோ ரால் நிகழ்ந்துள்ளன. அவர்தம் பிழைதிருத்த முறைகள் இருவகையின.

1. பிழையாக எழுதப்பட்ட எழுத்துகளும் தொடர்களும் அடிக்கப் பட்டுள்ளன. மேலும் சிலவரிகள் இடமாற்றி எழுதப்பட்டு, அவ்வரிகள் அடிக்கப்பட்டு, அவை வேண்டாதனவாகக் காட்ட 'புபு' என்ற குறிகளால் அடைப்பு இட்டுக் காண்பிக்கப் பட்டுள்ளது. விடுபட்ட எழுத்துகளை அவ்வவ்விடங்களுக்கு நேர்க்கீழேயும், மேலேயும் எழுதியிருத்தல்.

எ. வடமொழிச் சொற்களும் இந்நூலில் கையாளப்பட்டுள்ளன. சான்று:

வங்கிஷத்தான் (41)

மகாரிஷிகள் (1432)

## முடிவு

கதை முடிவில் ஆசிரியர் வாழிப்பாடலைப் பாடி முடித்து இருக்கி றார். மேலும் வாழிப்பாடலுக்கு அடுத்து முடிவில்,

> "புதுவூர் சக்கரவர்த்தி யம்மானை எழுதி முடிந்தது முற்றும் குத்தாலலிங்கம் புதுவூர் சக்கரவர்த்தியம்மானை எழுதினே(ன்). எடுத்தவர் படித்துக் கொண்டு கொடுத்து விடவும். நன்றாக குருவே துணை"

என்ற தொடர்கள் இடம்பெற்றுள்ளன.

## பதிப்பாய்வின் போது செய்யப்பட்ட ஒழுங்குகள்

1. **பாடல்:** செய்யுட்களின் அடிகளும் சீர்களும் பிரிக்கப்பெற்று உரிய வடிவில் தரப்பட்டுள்ளன.

2. அடிகளும் சீர்களும் விடுபட்ட இடங்கள் புள்ளியிட்டுக் காட்டப் பட்டுள்ளன.

3. சுவடியின்கண் விடுபட்டனவும் சிதைவுற்றனவுமாகிய எழுத்து களும் சொற்களும் ஆய்வாளரின் உய்த்துணர்வால் மீட்டுரு வாக்கம் செய்யப்பட்ட நிலையில் அவை அடைப்புக் குறிக்குள் தரப்பட்டுள்ளன.

4. **உட்தலைப்பு:** கதையோட்டத்திற்கு ஏற்பப் படிப்பவர்கள் புரிந்து கொள்ளும் வகையில் பதிப்பில், கதைத்திருப்பங்களும் வருணனை களும் வருமிடங்களில் இடையிடையே பதிப்பாசிரியரால் தலைப்புகள் தரப்பட்டுள்ளன.

5. **அடி எண்கள்:** அடிகளின் வரிசை எண்கள், தெளிவின் பொருட்டு, ஐந்தைந்தாகத் தொடர்ந்து தரப்பட்டுள்ளன.

6. **எழுத்து:** அடிகளின் முதல் எழுத்தாக அகர, இகர, உகரங்கள் இடம்பெறும் நிலையில் அவை முறையே ய, யி, யு என்றவாறு யகர ஒற்றோடு கூடிய உயிர்மெய்களாகப் பயின்று வந்துள்ளன. அவை திருத்தப்பெற்று உரிய உயிர்கள் இடம்பெற்றுள்ளன.

சான்று:

எல்லாருஞ் செல்வம் — யெல்லாருஞ் செல்வம் (138)

எனக்கு — யினக்கு (657)

இளப்பமில்லை — யிளப்பமில்லை (498)

7. எகர ஒகரக் குறில்நெடில்கள் வேறுபடுத்திக் காட்டப்பட்டுள்ளன.

8. மெய்யெழுத்துகள் புள்ளியிடப்பெற்றுள்ளன.

9. மிகக்கூடாத இடங்களில் மிகுந்திருந்த தேவையற்ற ஒற்றுகள் நீக்கப்பட்டுள்ளன.

10. ஒற்றுகள் இடம்பெறாதிருந்த, தேவையான இடங்களில் ஒற்றுகள் இடம் பெற்றுள்ளன.

11. ந-ன; ன-ண; ர-ற; ழ-ள-ல; ல-வ முதலிய எழுத்துகள் தம்முள் மயங்கி வந்துள்ள இடங்கள் உரியமுறையில் திருத்தப்பெற் றுள்ளன.

12. 'த்த-ற்ற' வாகவும், 'ற்ற-த்த' வாகவும் பொருளறிந்து மாற்றப் பட்டுள்ளன.

13. சீர்திருத்த எழுத்து முறை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

14. எதுகை, மோனைகள் பாடலின் இடம்நோக்கி ஒருசில இடங் களில் திருத்தப்பட்டுள்ளன.

15. சுவடியில் பயின்று வந்துள்ள பேச்சு வழக்குச் சொற்கள் இலக்கிய வழக்கிற்கு மாற்றப்பட்டுள்ளன.

சான்று

நேற்று — நேத்து (823)

தின்று — திண்ணு (1320)

# புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை

## கதைச்சுருக்கம்

புதுவூர் நாட்டைச் சந்திரகுல மன்னன் ஒருவன் தன் பட்டத்தரசியுடனும் இரு மைந்தர்களுடனும் ஆண்டு வருகிறான். அவன் புதுவூரைச் சிறப்பாக ஆண்டு வரும் நாளில் அவனுக்குக் கலி பற்றுதற்குரிய காலம் வருகிறது. கலியின் கட்டளையினை ஏற்று இரவிகுல மன்னன் ஒருவன், புதுவூர் மன்னனைப் போரில் தோற்கடிக்கிறான். புதுவூர் மன்னன் தனது மனைவி மக்களுடன் காட்டிற்குச் செல்ல நேருகிறது. காடு மலைகளைக் கடந்து செல்லும்போது கலிபுருடன் வேடனுருவில் வந்து அவர்களின் பொருட்களைப் பறித்துச் செல்கிறான்; நால்வரும் துயரத்துடன் நடக்கின்றார்கள்.

மைந்தர்களுக்குப் பசி ஏற்பட ஓர் அருவியில் சென்றமர்ந்து கொண்டுவந்த உணவைப் பிரிக்க, உணவில் புழு இருந்ததால் கீழே எறிந்து விட்டு நடக்கின்றார்கள். ஒரு குடிசையையும் கேணியையும் கண்டு அவ்விடத்தில் இளைப்பாற, பசி மயக்கத்தால் நால்வரும் மயங்கி விழ, அவ்வழியே வந்த வழிப்போக்கர்கள் அவர்களின் பசியை ஆற்றுகின்றனர்.

மறுநாள் காலையில் நால்வரும் ஒரு ஊரை அடைய, அவ்வூர் அருளாளன் ஒருவன் அவர்களுக்கு உணவு, இருப்பிடம் கொடுத்து ஆதரிக்கின்றான். அதிக நாள் அங்கிருந்தால் மனக் கஷ்டம் வரும் என்று கருதி விடைபெற்று வேறோர் ஊருக்கு வருகின்றார்கள்.

அவ்வாறு காட்டின் வழியே வருகிறபோது, கொடிய வேடன் ஒருவன் எதிர்ப்பட, அவன் அவர்களின் நிலையை யறிந்து தனது இல்லத்திற்கு அழைத்துச் சென்று உபசரிக்கின்றான். அங்கும் சிலநாள் தங்கியிருந்துவிட்டு, மனக் கஷ்டமாகும் என்று நினைத்து ஒரு பட்டணத்திற்குச் செல்கின்றார்கள்.

நால்வரும் பட்டணத்தின் சத்திரத்தில் வந்து தங்குகின்றனர். சத்திரத்தின் உரிமையாளன் நவகோடிச் செட்டி என்பவன் நால்வரையும் பார்க்கிறான். அவன் அரசியின் அழகினில் ஈடுபட்டு, அடைய மனதில் நினைத்து தனது இல்லத்திற்கு அவர்களை அழைத்துச் சென்று தனி இருப்பிடம் அமைத்துக் கொடுத்து ஆதரிக்கிறான்.

செட்டியின் ஆதரவில் இருந்த அவர்களுக்குப் பக்கத்து வீட்டு 'விறகுகட்டி' ஒருவன் அறிவுரை கூறித் தன்னுடன் விறகு கட்ட வந்தால்

பிழைப்பு நடத்தலாம் என்று அழைக்கின்றான். மன்னனும் சம்மதித்து அடுத்தநாள் மைந்தர்களுடன் விறகு கட்டச் செல்கின்றான். மன்னனின் மனைவி, விறகு கட்டியின் மனைவியுடன் நகரத்திற்குச் சென்று நெல் குத்தி கூலி பெற்று வருகின்றாள்.

இவ்வாறாகச் சிலநாள் வாழ்க்கை நடத்திக் கொண்டிருக்கிற காலத்தில் 'கலிபகவான்' நால்வரையும் தனித்தனியாகப் பிரிக்க எண்ணுகின்றான். மன்னன் மைந்தர்களுடன் மலையில் விறகெடுத்துக் கொண்டு வருகிற நேரத்தில், ஆற்றில் வெள்ளப் பெருக்கை ஏற்படுத்த, மன்னன் அவ்வெள்ளப் பெருக்கைக் கண்டு திகைத்து நிற்கின்றான்.

அச்சமயம், கலியன் வேற்றுருவில் அவர்கள் முன் தோன்றி, உதவி செய்வதாகக் கூறி, மன்னனிடம் ஒரு மகனை மரத்துடன் கயிற்றால் இக்கரையில் கட்டிவிட்டு, ஒரு மகனை அழைத்து வா எனக்கூற, மன்னனும் அவ்வாறே செய்ய, ஒரு மகனை அழைத்துக் கொண்டு, வந்த மனிதனுடன் மன்னன் ஆற்றைக் கடக்கின்றான். அழைத்து வந்த மகனை கரை ஓரத்தில் உள்ள மரத்தில் கட்டிவிட்டு, மற்றொரு மகனையும் அழைத்துவர வேண்டி துணைக்கு வந்தவனை அழைக்க, அவனோ வந்த வழியறிவாய்; சென்று அழைத்து வா என்று கூறிவிட்டு மறைந்து விடுகின்றான். மன்னன் ஆற்றில் இறங்கி வருகிறதுபோது வெள்ளம் அதிகரித்து அடித்துச் செல்லப்படுகிறான். இரு கரையிலும் கட்டப்பட்ட மைந்தர்கள் கதறி அழுகின்றார்கள். மறுநாள் காலையில் அவ்வழியே வந்த இடையர்கள் அவர்கள் இருவரையும் காப்பாற்றித் தமது மனையில் ஆடுகளைக் கவனித்துக் கொள்ள இருத்திக் கொண்டார்கள்.

அரசியானவள் தனது கணவன், மைந்தர்களின் வருகையைக் காணாமல் வருந்தி இறைவனை வேண்ட, கனவில் திருமகள் தோன்றி பதினான்கு ஆண்டுகள் கழித்து கணவன் மைந்தர்களுடன் சேர்ந்து நாட்டை ஆள்வீர்கள் என்று கூற, அரசியானவள் மனம் சிறிது திடமாகி இருக்கின்றாள்.

செட்டி அப்போது அரசியிடம் வந்து, காட்டிற்குச் சென்ற கணவனும் மைந்தர்களும் இறந்து பட்டிருப்பார்கள். எனவே என்னைத் திருமணம் செய்து கொள், நலமாக வாழலாம் என்கின்றான். மன்னனின் மனைவி தான் புறப்பட்ட நாளிலிருந்து பதினான்கு ஆண்டு காலம் வரை விரதம் இருப்பதாகவும், அதற்கிடையில் கணவன் வரவில்லையெனில் திருமணம் செய்து கொள்கிறேன் எனவும் கூற, செட்டி அரசியை மரக்கலத்தில் தனியாக இருத்தி அனைத்துத் தேவைகளையும் கவனிக்கப் பணியாட்களை அமர்த்திக் கெடுநாள் முடிந்ததும் ஓலையிட்டு அழைப்பேன் எனக்கூறி அனுப்புகின்றான்.

ஆற்று வெள்ளத்தில் அடித்துச் செல்லப்பட்ட மன்னன் வெகுதூரம் கடந்து ஒரு நந்தவனக் கரையோரம் ஒதுக்கப்பட்டு மயங்கிக் கிடக் கின்றான். நந்தவனத்திற்குப் பூவெடுக்க வந்த பண்டாரம் ஒருவன், மன்னனின் மயக்கத்தினைப் போக்கி, உணவளித்து நந்தவனப் பணி யாளனாக வைத்துக் கொண்டான். இவ்வாறாக வாழ்ந்து வரும்போது கலிபகவான் மேலும் மன்னனைச் சோதிக்க நினைத்து, அந்நகர மன்ன னின் அரண்மனையில் பொருள்களைத் திருடிய கள்வர்களைக் காவலர் கள் துரத்திவர, கொண்டு வந்த பொருட்களை நந்தவனத்தில் காவல் செய்துவந்த மன்னனின் பக்கத்தில் போட்டுவிட்டு மறைந்து விடுகின்ற னர். மன்னனைக் கள்வனென்று கருதி கைகாலை அறுக்கின்றனர்.

மன்னன் கைகால் அறுபட்டுக் காட்டில் கிடந்தபொழுது அவ்வழியே வந்த 'தலையாரி' ஒருவன் முடவனைத் தனது நாட்டில் சேர்த்து மருத்துவம் செய்விக்கின்றான். அவ்வூர் செக்கான் ஒருவன் முடவனைத் தனது செக்கடிக்கு அழைத்துச் சென்று செக்கு ஓட்டும் வேலை கொடுத்து உணவளிக்கிறான். மன்னன் அங்கும் இவ்வாறாக வாழ் நாளைக் கடத்திக் கொண்டு இருக்கிறான்.

மன்னனின் குடும்பத்தவர் படும் துயரத்தை மும்மூர்த்திகள் அறிந்து நீக்க நினைத்துக் கூடுகின்றனர். மும்மூர்த்திகளிடையே விதி பெரிதா மதி பெரிதா என்ற வாதம் எழ, திருமால் மதியே பெரிதென்று கூற, பிரமன் விதிதான் பெரிதென்று கூற இவ்வாதத்தின் உண்மையறிய சிவன் நாரதரைப் பூலோகம் அனுப்பி செய்தி அறிந்து வரச் செய்கிறார்.

ஆளையூர் பட்டணத்தின் மன்னன் தன் மகளைத் தனது சகோதரி யின் மகனுக்குத் திருமணம் செய்விக்க ஏற்பாடு செய்கிறான். ஆனால் மன்னனின் மனைவியோ தன் அண்ணன் மகனுக்கு மணம் செய்விக்க முனைந்து, தன் கணவனுக்குத் தெரியாமல் மகளைப் பெட்டகத்திற்குள் இருத்தி, வரிசைப் பொருள்களும் மாங்கல்யமும் வைத்து அறிவுரை கூறி, காவலர்களிடம் ஒப்படைத்துத் தன் அண்ணன் இருக்கும் பட்டணத்திற்கு அனுப்பி வைக்கின்றாள்.

இச்செய்தியை அறிந்து வந்து நாரதர் சிவனாரிடம் உரைக்கின்றார். அப்போது பிரமன், விதிப்பிடி முடவன் தான் அவளுக்குக் கணவனாக அமைவான் என்று கூறுகிறார். திருமால் திரும்பவும் மதிதான் வெல்லும் என்று வாதிடுகிறார்.

திருமால் தனது வாதம் நிறைவேற, கருடனை அழைத்து செக்கடியில் இருக்கின்ற முடவனைத் தூக்கி வந்து, யாரும் அறியாவண்ணம்

வெகுதொலைவில் மறைத்து வைத்துவிட்டு வா என்று கூற, கருடனும் அவ்வாறே செய்கின்றார். முடவன் பசியால் கதறிக் கருடனை உணவு வேண்டுகிறான். கருடன் இரை தேடுகையில் பெட்டகத்திலிருந்து வந்த வாசனையை அறிந்து, பெட்டகத்தைத் தூக்கி வந்து முடவனிடம் வைத்துவிட்டுச் சென்று விடுகிறது.

பெட்டகத்தைத் திறந்த முடவனின் கழுத்தில் இளவரசி மாலை யிடுகின்றாள்.

மன்னன் திகைத்து மறுக்க, மங்கைதன் தாயின் கட்டளையைக் கூற, இருவரும் தம்பதிகளாகி மகிழ்கின்றனர். மூன்றாம் நாள் இதை அறிந்த மும்மூர்த்திகளும் தேவர்களும் ரிசிகளும் அவ்விடத்திற்குச் சென்று பார்த்து வாழ்த்துகின்றனர். சிவன், மன்னனுக்கு கைகால் வழங்கி வரங்கள் பல தருகின்றார். இளவரசியைத் திருமகள் வாழ்த்துகின்றாள். திரும்பவும் புதுவூர் நாட்டையாளவும், பிரிந்த மனைவி மக்கள் ஒன்று சேரவும் வரங்கள் தந்துச் செல்கின்றனர். மன்னனும் இளையாளும் வணங்குகிறார்கள்.

சிவன் கட்டளைப்படி கெருடன் அவர்களைப் புதுவூர் நாட்டிற்குத் தூக்கிச் சென்று, இரவிகுல மன்னனைத் துரத்தி, மன்னனை அரசு கட்டிலில் ஏற்றி வைக்கின்றது. இளைய மனையாளின் பெற்றோர் களுக்குத் தூதுவர் மூலம் ஓலை எழுதி நலத்தைத் தெரியப்படுத்த, அவர்கள் தனது மகளையும், மருகனையும் காண, அனைத்து சீர்வரிசை களுடன் புதுவூர் வருகிறார்கள்.

ஆயரிடம் வளர்ந்த இரு மைந்தர்களும் புதிதாக அரசு ஏற்றுள்ள புதுவூர் அரசனிடம் சேவகர்களாகப் பணியில் சேர்கின்றனர். செட்டி அரசி சொன்ன கெடுநாள் முடிந்து, திருமணம் செய்ய ஓலை அனுப்பி, அரசியை வரவழைக்க, கப்பல் புயல் காற்றினால் புதுவூர் நாட்டுக் கடற்கரையில் ஒதுங்க, மன்னனின் கட்டளையை யேற்றுச் சேவர்களான மைந்தர்கள் அக்கப்பலைக் கைப்பற்றச் செல்கிறார்கள். இரவு ஆனதும் கப்பலைக் காவல் காக்கிறார்கள். தம்பி தூங்கா வண்ணம் இருக்க தங்களது சிறுவயது வரலாற்றை அண்ணன் கூறுகின்றான். இக்கதைக் கேட்டுக் கப்பலில் இருந்த அரசி தன் மக்கள் என அறிந்து தன்னைத் 'தாய்' என்று வெளிப்படுத்த, மூவரும் புதுவூர் மன்னனிடம் ஒன்றாகச் சேர்கின்றனர். மன்னன் தன் மனைவியை விரும்பிய செட்டியை, முன்செய்த உதவியை நினைத்து மன்னித்துப் பொருட்கள் பல தந்து அனுப்பி வைக்கின்றான். மன்னன் தனது இருமனையாள், மைந்தர் களுடன் கூடி மகிழ்வாகப் புதுவூர் நாட்டை ஆளுகின்றாள்.

# ஆய்வுரை

## அ. பொதுநிலை ஆய்வு

## அம்மானையும் கதைப்பாடலும்

### முகப்புரை

'சமுதாயத்தைச் சொல்லில் வடித்தளிப்பதே இலக்கியம்' என்பார் அறிஞர் டி. போனால்ட். இலக்கியம் மனிதவாழ்வோடு இணைந்தது; அது மனித வாழ்வையொட்டி வளர்ச்சியும் வீழ்ச்சியும் அடைகின்றது. மனிதன் புதிய புதிய துறைகளில் வளர்வது போன்று இலக்கியமும் புதிய புதிய வகைகளில் தோன்றி மணம் பரப்புகின்றது.

தமிழிலக்கியப் பூஞ்சோலையில் பலவகையான இலக்கிய மலர்கள் உருவாக்கப் பெற்றுப் பலவிடங்களில் சிதறிக் கிடக்கின்றன. அவற்றுள் ஒன்று அம்மானை. அம்மானை நாட்டுப்புறப் பாடல் வகைகளுள் ஒன்று.

### நாட்டுப்புறவியல் — வகைகள்

நாட்டுப்புற மக்களின் கலை, நம்பிக்கை, பண்பாடு ஆகியவற்றையும், நாட்டுப்புற இலக்கியங்களைப் பற்றியும் அறிந்து கொள்ளும் இயலே நாட்டுப்புறவியல்.

நாட்டுப்புறவியலின் வகைகளாகப் பதினைந்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம் என சு. சண்முகசுந்தரம் கூறுகின்றார். அவையாவன:[1]

> 1. பாடல்கள், 2. கதைகள், ஆடல்கள், 4. கூத்துகள், 5. பழமொழிகள், 6. விடுகதைகள், 7. கதைப்பாடல்கள், 8. விளையாட்டுகள், 9. தேவதைகள், 10. நம்பிக்கைகள், 11. பழக்கவழக்கங்கள், 12. கைவினைக் கலைகள், 13. நடைஉடை பாவனைகள், 14. சடங்குகள், 15. புராண இதிகாசங்கள்.

இவற்றில் அடங்காத சிறுவகைகளும் இருக்கலாம்.

### நாட்டுப்புற இலக்கியம்

உலக இலக்கியங்கள் அனைத்திலும் நாட்டுப்புற இலக்கியம், செவ்விலக்கியம் என்ற இரு பிரிவு உண்டு. நாட்டுப்புற இலக்கியம் என்பது இசையுடன் கூடிய வாய்மொழிப் பாடல்களைக் குறிக்கும். செவ்விலக்

கியம் இலக்கண வரையறைக்கு உட்பட்டதாகும். நாட்டுப்புற இலக்கியமே எல்லா மொழிகளிலும் முதலில் தோன்றியிருக்க வேண்டும் என்பது அறிஞர் கண்ட முடிவாகும். அதன் பின்னரே செவ்விலக்கியங்கள் தோற்றம் பெற்றன. நாட்டுப்புற இலக்கியம் செவ்விலக்கியமாக மாற்றம் பெறுவதுண்டு. நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றி ஆராய்ந்த திரு. உ. வே. சாமிநாதய்யர் ஐம்பத்திரண்டு வகை நாட்டுப்புறப் பாடல்களில் 'அம்மானை'யையும் குறிப்பர். நாட்டுப்புறப் பாடல்கள் கட்டுப் பாடற்ற கற்பனைக் கருவூலங்கள்; சமுதாயத்தின் உயிர்த்துடிப்புகள்; இசை கலந்த எழுதா ஓவியங்களாகும்.

## அம்மானை

> ''நாட்டுப்புறப் பாடல்களில் சிறப்பான இடத்தைப் பெறுவது அம்மானைப் பாட்டு என்னும் கதைப்பாடல் மேனாட்டில் அறிஞர் பலர் இதனைத் தெளிவாக ஆய்ந்து வரையறுத்துள்ளனர்''[2]

அம்மானைப் பாடல்கள் இலக்கிய வடிவில் அமைந்த நாட்டுப்புறக் கதைப் பாடலாகும். இஃது எளிமையான நடையில் அமைந்து எதுகை, மோனை சந்த நயங்களுடன் அமைந்திருக்கும். இவை ஒரு கதையையோ, வரலாற்றையோ மையமாக வைத்துத் தொடர்ந்து செய்யுள் வடிவில் அமைத்துப் பாடப்படும் கதைப்பாடலாகும்.

## அம்மானை-சொல்லாட்சி

சங்க இலக்கியத்தில் அகநானூறு, புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு போன்றவற்றில் கழங்காடல் பற்றிய செய்தி பயின்ற போதிலும் அம்மானை என்ற சொல் வழக்கு இல்லை. சிலப்பதிகாரம் அம்மானை வரிப்பாடல்களைப் பற்றிப் பேசுகிறது. ''சிலப்பதிகாரம் அம்மானை வரிப்பாடல்களைத் தருவதுடன் இச்சொல்லின் முதல் ஆட்சியையும் அளிக்கிறது''[3] என்பர் ச. வே. சுப்பிரமணியன்.

## அம்மானை - சொற்பொருள்

அம்மானை என்பதற்குத் 'தாய்' என்று அகராதி பொருள் கூறுகிறது. அம்மானை என்ற சொல்லுக்குப் பிங்கல நிகண்டு அம்மானை என்ற பொருளைத் தருகிறது. ''அம்மானை என்பது தாய் என்ற பொருளை உடையது. பெண்களைப் பொதுவாக அம்மா என்று அழைப்பது போல் 'அம்மானை' என்று அழைப்பதும் இலக்கிய மரபு'' என்று கலைக்களஞ்சியம் சுட்டுகிறது.

அம்மானை என்ற சொல் அம் + மனை என்ற இரு சொற்களாலாயது. எனவே அழகிய மனையின் கண்ணே இருந்தாடிய ஆட்டம் என்பதால் அம்மானை என்று பெயர் பெற்றிருக்க வேண்டும். அம்மானை என்ற சொல்லானது பெண்கள் விளையாடும் விளையாட்டைக் குறித்து நின்ற நிலை மாறி காலப்போக்கில் சிற்சில மாறுதல்களைப் பெற்றுப் பின்னாளில் எளிய நடையில் அமைநந்த கதைப்பாடலாக உருவெடுத்துள்ளது. எனினும் நாளடைவில் அம்மானைப் பாடல் என்பது கதைப்பாடலின் வேற்றுப் பெயராகவே நிலைத்துவிட்டதை நாம் இலக்கிய வரலாற்றில் அறிய முடிகின்றது.

## அம்மானை - இலக்கணம்

அம்மானையின் இலக்கணம் பற்றித் தொல்காப்பியத்தில் எக்குறிப்பும் இல்லை. அவர் கூறும் பண்ணத்தி, பிசி ஆகியவற்றுக்கான இலக்கணம் நாட்டுப்புறப் பாடல்களுக்கு உரியன என்று உரையாசிரியர்கள் கருதுகின்றனர். அம்மானைப் பாடல்கள் நாட்டுப்புறப் பாடல் வகையினில் வளர்ந்த இலக்கியமாக உள்ளதால் பண்ணத்தியை அம்மானைப் பாடல்களுக்கும் பொருத்திக் காட்ட முடிகிறது.

பாட்டியல் நூல்கள் அம்மானைக்கு இலக்கணம் கூறவில்லை. அறுவகை இலக்கணம் தந்த வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் அம்மானைக்கு இலக்கணம் தருகின்றார்.

''இரண்டு நாலைந் தெனுமடி ஈற்றில்
தன்பெயர் குலவு'ந் தக்க அம்மானை
ஐந்தடிக் கலிப்பா போலும், அதனிடை
சொல்லலும் மறுத்தலும் விடையும் தானே
கூறினர் பற்பலர் துவலயத் திடத்தே'' (யாப்பு-29)

அம்மானை இலக்கியத்திற்குத் தெளிவாகவும் வரையறையாகவும் இலக்கணம் கண்டவர் வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள். இவர் தம் காலத்தில் அம்மானை இலக்கியங்கள் பேரளவிற்கு அச்சிடப் பெற்று வெளிவந்தன. அவ்வளர்ச்சியைக் கண்ட தண்டபாணி சுவாமிகள், வாய்மொழி இலக்கியமான அம்மானையைக் கற்றோர் போற்றும் இலக்கிய வகையாக ஏற்றுத் தான்பாடிய இலக்கண நூலில் அதன் இயல்பை விளக்கினார்.

## அம்மானையின் தோற்றம்

தமிழிலக்கியத்தில் கிடைத்துள்ள அம்மானையின் தோற்றத்தைச் சிலப்பதிகார வரிப்பாடல் மூலம் இன்று அறிந்துகொள்ள முடிகிறது.

இதுவே இன்று கிடைத்துள்ள பழமையான அம்மானை வரிப்பாட லாகும். தமிழில் முதலில் அம்மானைப் பாடலைப் பாடியவர் புகழேந்திப் புலவர் என்று கருதுகின்றனர். 'அம்மானைப் பாடல்களின் ஆதிகளுத்தா புகழேந்திப் புலவர் ஆவர் என்பது செவிவழிச் செய்தி. விநோதரச மஞ்சரியில் அட்டாவதானம் வீராசாமிச் செட்டியார் இந்த செவிவழிச் செய்தியைத் தெரிவித்திருக்கிறார்.'[4] பழமொழியை முதலில் சொன்ன வர் யார் என்று தெரியாதது போலவே அம்மானைப் பாடல்களை முதலில் பாடியவர் யார் என்றும் அறுதியிட்டுக் கூற முடியாது.

புகழேந்திப் புலவர் கள்ளழகர் அம்மானை, கோவிலன் கதை, தேசிங்குராசன் கதை, நல்லதங்காள் கதை, அபிமன்னன் சுந்தரிமாலை, அல்லியரசாணிமாலை போன்ற அம்மானைப் பாடல்களைப் பாடி இருக்கிறார். புகழேந்திப் புலவர் காலம் கி. பி. பதின்மூன்றாம் நூற் றாண்டாகும். அம்மானைப் பாடல்களின் தோற்றம்பற்றி அறிஞர்கள் பின்வருமாறு கூறுவர்.

> ''கி.பி. 16, 17 ஆம் நூற்றாண்டில் அம்மானைப் பாடல்கள் தோன்றின.''[5]

எனவே இச்செய்தியை வைத்து நோக்கும்போது புகழேந்திப் புலவர் தான் முதன் முதலில் அம்மானைப் பாடலைப் பாடினார் என்று எண்ணவும் தோன்றுகிறது.

## வளர்ச்சி

அம்மானை என்பது, மகளிர் விளையாடல்களுள் ஒன்று. அஃது இசைத்துப்பாடி விளையாடப்பெறுவது என்பது, அடியார்க்கு நல்லார் அதனைப் பல்வரிக் கூத்தினுள் அடக்கிக் கூறுவதால் விளங்கும். *(சிலப். 3.13)*.

அம்மானை விளையாட்டுக்குப் பயன்படுத்தப் பெறும் காய் 'அம் மானை' எனப்பெற்றது. அதனை மகளிர் தம் கையில் கொண்டு தம் மனையகத்து விளையாடினர் என்றும், பாவை நீராட்டைப் போலவே, நல்ல கணவன் தமக்கு வாய்க்க வேண்டும் என்னும் விருப்பத்தால் மகளி ரால் ஆடப்பெறுவது அஃது என்றும் சிலப்பதிகாரத்தால் அறியலாம்.

> ''அம்மனை தம்கையிற் கொண்டங் கணியிழையார்
> தம்மனையிற் பாடும் தகையேலோர் அம்மானை
> தம்மனையிற் பாடும் தகையெலாம் தார்வேந்தன்
> கொம்பை வரிமுலைமேற் கூடவே அம்மானை''

என்பது சிலம்பு வரிப்பாடல் (சிலப். 29:19). பந்தடித்தல், கழங் காடல், ஊசலாடல் என்பன போலவே அம்மானையாடலும் பண்டு தொட்டே பயின்று வழங்கி வந்தது என்பதைச் சிலப்பதிகார அம் மானை வரியால் உணரலாம்.

சிலப்பதிகாரத்தில் ஏனை வரிப்பாடல்கள் போலவே ஒருபொருள் மேல் மூன்றடுக்கி அம்மானை வந்துள்ளது. மாணிக்கவாசகர் பாடிய 'திருவம்மானை' ஆறடித் தரவாகிக், குழுவாகப் பாடும் பாடலாக அமைந்துள்ளது. பிள்ளைத்தமிழ் என்னும் சிற்றிலக்கிய வகையில் பெண்பாற் பிள்ளைத்தமிழ்ப் பருவங்கள் பத்தினுள் 'அம்மானைப் பருவம்' ஒரு பருவமாகப் பாடற்பெற்றது.

அம்மானைக்காய் முத்து, பவழம், மாணிக்கம் முதலியவற்றால் செய்யப்படுவதுண்டென்றும், அக்காய் வண்டு பறந்தெழுவது போலே மேலே எழுந்து கீழே இறங்குமென்றும், ஒருவேளையிலே பல அம் மானைக் காய்கள் பறந்து கொண்டிருக்கும் வண்ணம் ஆடவல்ல தேர்ச்சி யாளர் இருந்தனர் என்றும், ஆடிக்கொண்டும் பாடிக் கொண்டும் இப் பாலும் அப்பாலும் ஓடிக் கொண்டும் கலைமணம் கமழக் கைவண்ணங் காட்டி ஆடுவர் என்றும், மாலைதொடுத்து நாற்றியது போலவும், வானவில் போலவும் அம்மானைக்காய் விளங்க நிரலே ஏவும் நேரிழை யார் விளங்கினர் என்றும், பிற்காலப் பிள்ளைத் தமிழ் நூல்களில் வரும் அம்மானைப் பாடல்களால் அறிய முடிகின்றது.

அம்மானைப் பாடல்பாடி விளையாடுவார் மூவர் என்பதை அதன் அமைப்பு முறையே நன்கு வெளிப்படுத்தும். ஒருத்தி ஒரு செய்தியைத் தொடங்கி இரண்டடிகளால் ஒரு வினாவை எழுப்புவாள். மற்றொ ருத்தி, அவ்வினாவுக்குத் தக்க விடையை அடுத்த ஈரடிகளால் தருவாள்; இன்னொருத்தி, இவ்விருவர் கூறிய செய்திகளுக்கும் இயைய ஒரு முடிப் புரையை இறுதி அடியில் வைப்பாள்; ஒவ்வொருவரும் தத்தம் உரையின் முடிவில் 'அம்மானை' என முடிப்பொலி வைப்பர். ஆக நான்கடிமேல் ஓரடிவைப்பாக அமைவது அம்மானைப் பாடல் யாப்பாகும்.

அம்மானை பிற்காலத்தில் கலம்பக உறுப்புகளில் ஒன்றாக அமைந் தது. அது சிலப்பதிகார அம்மானை யாப்பையே கொண்டாலும் சில புதிய மரபுகளைக் கண்டு வளமுற்றது. தடைவிடைகளாகவும், சிலேடை முதலிய அணிநயம் பெற்றதாகவும், சொல்லின்பம் மிக்கதாகவும் உருக் கொண்டது. வெண்டளையில் சற்றே விலக்குப் பெற்று வருதலையும் மேற்கொண்டது.

இவ்வாறு வளர்ந்து வந்த அம்மானைப்பாடல், பத்தொன்பதாம் இருபதாம் நூற்றாண்டளவில் நூலுருக் கொண்டு வளர்வதாயிற்று.

### வகைகள்

அம்மானையின் அமைப்பைக் கொண்டு அதனை ஐந்து வகையாகப் பிரிக்கலாம்.

1. சிலப்பதிகார நிலையில் அமைந்த 'வினா-விடை நிலை'.
2. திருவாசகம், கலம்பகம், உலா, பிள்ளைத்தமிழ் இவற்றில் அமைந்த அம்மானை என்னும் 'சொல் பயிலும் நிலை.'
3. நூலின் பெயரிலும், உள்ளும் அம்மானை எனும் சொல் பெற்று வரும்நிலை. (உம்: புவனேந்திரன் அம்மானை, கஞ்ச னம்மானை, சிவகங்கை அம்மானை, புதுவூர்ச் சக்கரவர்த்தி யம்மானை)
4. பெயரில் மட்டும் அம்மானை எனும் சொல்பெற்று நூல் உள்ளே சொல் அமையாது வளரும் நிலை. 'சொல்பெற்றும் பெறாதும் வரும் நிலை. (உம்: வைகுந்த அம்மானை, இராமப் பய்யன் அம்மானை).
5. நூலின் பெயரிலும் உள்ளும் அம்மானை எனும் 'சொல் பயிலாது வரும் நிலை' (உம்: அல்லியரசாணி மாலை, பவளக்கொடி மாலை, புலந்திரன் களவு மாலை).

என வகைப்படுத்துவர். அம்மானை இன்று பாடப்படுவதில்லை. இன்று திரைப்படம், தொலைக்காட்சி, கதை நூல்கள், இதழ்கள் போன்றவை பொழுதுபோக்குகளாக அமைந்துவிட்டதால் இன்று அம்மானைப் பாடல்கள் எழவில்லை.

## இலக்கியப் போக்கு

பெண்கள் ஆடும் ஆட்ட வகைகளில் ஒன்றான அம்மானை, சிலப்பதிகாரத்தில் தோற்றம் கண்டு, பின் மாணிக்கவாசகரின் திருவாச கத்தில் உள்ள திருவம்மானைப் பாடல்களாக அழகுற்று அமைந்தது. மாணிக்கவாசகர் காலத்திற்குப் பின்னர் அம்மானைப் பாடல்கள் தமிழில் பெருவழக்கினவாக இல்லை. ஒட்டக்கூத்தரும் புகழேந்தியாரும் 'அம்மானை' என்னுஞ் சொல்லைப் பயன்படுத்தினாலும் பழைய அம்மானைப் பாடல்களின் மூன்று கருத்தலகுகளையும் காண முடிய வில்லை.

அம்மானை ஆட்டத்திற்கு அழகும் பொலிவும் தந்து வளமான இலக்கிய வாழ்வை அளித்தது பிள்ளைத் தமிழ் எனலாம். கலம்பக நூல்களில் அம்மானை ஒரு மாறுதலுடன் காணப்படுகிறது. பதினேழாம் நூற்றாண்டுக்குப் பின்னர் 'அம்மானை' மகளிர் ஆடல் வகைகளில் ஒன்று என்னும் தனிநிலை மறைந்து, ஒரு கதையமைப்பினை இசையோடு இசைத்துச் சொல்வது என்னும் பொதுநிலையில் அமைந்து நின்றுவிட்டது. இதன் பயனாகச் சமயங்கள் தொடர்பான வரலாறுகள், நாட்டுப்புறக் கதைகள், அரசியல் நிகழ்ச்சிகள் முதலானவற்றைக் கருப்பொருளாகக் கொண்டு பாடும்நிலை ஏற்பட்டது எனலாம். இவற்றில் ஆங்காங்கே அம்மானை என்ற சொல் வருதல் தவிர, ஆட்டத்தின் தன்மையும் இல்லாமல் போயிற்று.

பத்தொன்பதாம் நூற்றாண்டில் எழுந்த பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் மனோன்மணியத்தில், நாடகத்தலைவி மனோன்மணியும் அவள் தோழி வாணியும் கழலாடியதாகக் குறிப்பு வருகிறது. 'அம்மானை ஆடல்' இங்குக் 'கழல் ஆடல்' என்ற பெயரில் இடம் பெற்றுள்ளது. இவ்விருபதாம் நூற்றாண்டில் சிறுமியர் ஆடும் ஐந்தாங்கல், ஏழாங்கல் முதலிய விளையாட்டுகள் அம்மானை ஆடலின் சாயலைக் கொண்டுள்ளன. எனவே, காலத்திற்குக் காலம் அம்மானை புதுப்புது வடிவு தாங்கி வந்துள்ளது எனலாம்.

இதுகாறும் ஆய்ந்த செய்திகளிலிருந்து நாம் ஒரு முடிவுக்கு வர முடிகிறது. அதாவது, சிலப்பதிகாரத்தில் மொட்டுவிடத் தொடங்கிய அம்மானைப் பாடல் திருவாசகத்தில் வெடித்துப் பூவாகிப் பின்னர் கலம்பகம் மற்றும் பிள்ளைத் தமிழ் இலக்கியங்களில் காயாக உருப்பெற்று, பின்னர் கதைப்பாடலில் கனியாக வளர்ந்து செம்மையான இலக்கிய நிலையில் இன்று காணப்படுகின்றது.

## கதைப்பாடல் பெயர் விளக்கம்

கதை என்பது எக்காலத்திலும் எல்லோராலும் விரும்பப்படுவதாகும். இனிய பொழுது போக்காகவும் எளிய இலக்கியமாகவும் கதை அமைகின்றது. கதையைப் பாடலாகக் கூறுவது அல்லது பாடலில் கதை பொதிந்து வருவது கதைப்பாடல் என்றழைக்கப்படுகிறது. இது ஒரு கதையாகவும் இருக்கலாம்; அல்லது உட்கதைகள் பலகொண்ட கூட்டுக் கதையாகவும் இருக்கலாம்.

இலக்கியத்தின் ஓர் அங்கமாகிய கதைப்பாடல், கதையினைத் தழுவிய பாடல் எனப் பொருள்படும். தாளத்தோடும் இராகத்தோடும் பாடு

தற்கு ஏற்றவாறு அமைந்திருப்பதனால் முற்காலத்தில் அப்பாடல்கள் கிராமப்புற நடனங்களோடு இணைந்து வளர்ந்துள்ளன.

இக்கதைப் பாடல்கள் எழுத்துருவம் பெறுவதற்கு முன்னர் பன்னெடுங் காலமாக மக்கள் வழக்காற்று மொழியில் தான் நிலவின. எனவே மக்களுக்கென்றே மக்களால் பாடப்பெற்று நாட்டுப்புற இலக்கியத்திலும் தனித்த இடம் பெற்றுள்ள கதைப் பாடல்கள் பலவற்றை எழுதினோர் யார் என்று அறிந்து கொள்ள முடியவில்லை.

## கதைப்பாடல் தோற்றம்

மனித இனம் தன் வாழ்வைப் பற்றி நினைக்கத் தொடங்கியபோதே கதை கூறும் வழக்கம் ஏற்பட்டிருக்க வேண்டும். மனித மனத்தை மகிழச் செய்வதற்காக மனிதனின் வாழ்வியல் அடிப்படையில் கதைகள் அமைக்கப்படுகின்றன. கற்பனைக் கலவையாகக் கதைகள் அமைந்தாலும் அவை வெறுமையில் இருந்து தோன்றுவதில்லை. மனிதனது அறிவு நிலை வளர்ச்சிப் படிகளுக்குத் தக்கவாறு கதைகூறும் திறமை வளர்ந்திருக்கும் என நம்பலாம்.

வாய்மொழிக் கதைகளும் வாய்மொழிப் பாடல்களும் இருவேறு அமைப்பாக வளர்ந்திருக்க வேண்டும். இரண்டும் இணையும் முயற்சியாகக் கதைப் பாடல்கள் தோன்றி வளர்ந்திருக்க வேண்டும். கதைப் பாடல்கள் உணர்வின் தொடர்பாக எழும் நீண்ட பாடல்களாக உள்ளன. தமிழ்மொழியில் பல கதைப் பாடல்கள் இடைக்காலத்தில் கிடைக்கின்றன. பண்டைக் காலத்தில் பல பேரிலக்கியங்கள் தோன்றி வளர்ந்துள்ள தமிழ்நாட்டில், இடைக்காலத்தில் அரசு நிலை மாற்றம் காரணமாகப் பலவிதமான சிற்றிலக்கியங்கள் தோன்றியுள்ளதை இலக்கிய வரலாற்றின் வாயிலாக அறியலாம்.

மக்களின் தரம், நம்பிக்கை, பொழுதுபோக்கு, இயல்பு, தன்மை, வாழ்க்கைமுறை ஆகியவற்றிற்குத் தக்கவாறு கதைப்பாடல்கள் புனைந்துரைக்கப் பெற்றுள்ளன. மக்களின் முக்கியமான பொழுதுபோக்குச் சாதனமாகக் கதைப்படலைக் கருதலாம். நாடறிந்த நல்ல கதைப் பாடலான அல்லியரசாணிமாலை, இப்பொழுது கிடைக்கப்படும் கதைகளில் முதலாவதாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

கதைப்பாடல்கள் தோன்றி வளர்ந்துள்ளதை அடிப்படையாகக் கொண்டு அதன் காலத்தை வரையறுத்துக் காண முயன்றால் பதினாறு, பதினேழு, பதினெட்டு, பத்தொன்பது ஆகிய நான்கு நூற்றாண்டுகளிலும் கதைப்பாடல்கள் தமிழ்நாட்டில் நன்கு வளர்ந்து செழித்துள்ளன என்று கூறலாம்.

## கதைப்பாடல்களின் வகைகள்

கதைப்பாடல்கள் மக்களின் இன்பப்பொழுது போக்குக்காக் மிகச் சுவையுடன் பாடப்பெற்றன. இக்கதைப் பாடல்களில் இசைத் தன்மையும் கலைநயமும் இணைந்து காணப்படுகின்றன. நமது மக்களிடையே வழங்கி வரும் கதைப்பாடல்கள் எண்ணற்றவை. அவற்றை நான்கு விதமாகப் பிரிக்கலாம். அவை:

1. இதிகாசத் துணுக்குகள்
2. சமூகக் கதைப் பாடல்கள்
3. வரலாற்றுக் கதைப் பாடல்கள்
4. கிராம தேவதைகளின் கதைப்பாடல்கள்[6]

என்று திரு. வானமாமலை கூறுகிறார்.

திரு. அன்னகாமு அவர்கள் 1. சரித்திர சம்பந்தமானவை, 2. புராண சம்பந்தமானவை, 3. வீரச்செயல்கள் சம்பந்தமானவை, 4. காதல் கதைகள் சம்பந்தமானவை என்று நான்கு வகையாகப் பிரிக்கிறார்.[7] திரு. சோமலே, 1. சமூகக் கதைப்பாடல், 2. காவியக் கதைப்பாடல், 3. வரலாற்றுக் கதைப்பாடல் என்று மூன்று வகையாகப் பிரிக்கின்றார்.[8]

எனவே இவற்றையெல்லாம் நோக்கும்போது கதைப்பாடலானது புராணம், வரலாறு, சமூகம் ஆகிய மூன்றின் தொடர்பு உள்ளதாகவே அமைவதை அறிய முடிகிறது.

### புராணம் தொடர்பானவை

அல்லியரசாணி மாலை, புலந்திரன் களவுமாலை, பவளக்கொடி மாலை, அபிமன்னன் சுந்தரிமாலை, வைகுந்த அம்மானை, இராமாயண நங்கைப் பாட்டு முதலியன.

### வரலாற்றுத் தொடர்பானவை

தேசிங்குராசன் கதை, கட்டபொம்மன் கதை, பூலித்தேவன் சிந்து மதுரைவீரன் அம்மானை, சிவக்ங்கை அம்மானை முதலியன.

### சமூகத் தொடர்பானவை

நல்லதங்காள், மதுரைவீரன் கதை, காத்தவராயன் கதை, தோட்டுக்காரி அம்மன் கதை முதலியன.

இக்கதைப் பாடல்களில் வரலாற்றுத் தொடர்பான கதாநாயகர் களும், சமூகத் தொடர்பான கதாநாயகர்களும் தெய்வங்களாக்கப்பட்டு நாட்டுப்புற மக்களேயன்றி நகர்ப்புற மக்களும் இவர்களை வணங்கி வருகின்றனர்.

## கதைப்பாடலின் தன்மைகள்

நாட்டுப்புறப் பாடலின் தன்மைகளுடைய எளிய பாடல்களால் ஒரு கதையை உருவாக்கிச் செவிக்கு இனிமையாகவும் மனத்துக்கு மகிழ்ச்சி யாகவும் அமையப் பாடிக் களிப்பது கதைப் பாடலாகும்.

நாடறிந்த நல்ல கதைகளே மிகுதியாகக் கதைப் பாடல்களின் பாடு பொருளாக அமையும். மக்களின் அன்றாட வாழ்வியல், பழக்க வழக்கங் கள், நம்பிக்கைகள், சிறப்புச் செயல்கள், வாழ்க்கைச் சிறப்பு நிகழ்ச்சி கள் ஆகியவை கதைப் பின்னலுக்கு ஊடகமாக அமைந்து நிற்கின்றன. பாடலில் பரவியிருக்கும் இசையும் எளிமையானது.

கதைப்பாடல்களில் கருத்து, சொல், இசை ஆகிய மூன்றும் இயல் பாக இணைந்து எளிதாகப் பிணைந்து சிறப்பதனால் அவை கேட்ட மாத்திரத்தில் மனதில் பதிந்துவிடும் தன்மை கொண்டு விளங்குகின்றன. வியப்புறு நிகழ்ச்சிகள், அதிர்ச்சியுறும் செயல்கள், இரக்கத்தை ஊட்டும் அவலங்கள் முதலியவை நாட்டுப்புற மக்களின் மனப் பதிவேட்டில் ஆழமான பாதிப்பை ஏற்படுத்தும் தன்மையுடையவை. அவை கதைப் பாடல்களின் பாடுபொருளாக அமையும். கதைப்பாடல்களில் வந்த அடிகளே திரும்பத் திரும்ப வரும் வழக்கமுடையன. இதனால் அவர் களுக்குச் சலிப்பு ஏற்படுவதில்லை. மாறாக, சொன்னதையே சொல் வதன் மூலம் அக்கருத்து வலுப்பெறுகிறது. கேட்கவும் இனிமை பயக் கின்றது. மேலும் மக்களின் பேச்சு வழக்குகள் படிந்து விளங்குகின்றது.

மக்களின் நம்பிக்கைகளான கனவுகள், சகுனங்கள், இறை நம்பிக்கை, விதி போன்ற பல்வேறு கூறுகளை எடுத்தியம்புவனவாக விளங்குகின்றன. சமுதாயத்தில் வழங்கப்படும் பழக்க வழக்கங்கள் அனைத்தும் படிந்து காணப்படுகின்றன.

## அம்மானை சிற்றிலக்கியமா? கதைப்பாடலா?

தமிழிலக்கிய வரலாறு. நீண்ட வரலாற்றை உடையது. அவ்வர லாற்றில் எண்ணற்ற இலக்கிய வடிவங்கள் எழுந்து தோன்றிய வண்ணம் இருக்கின்றன. சங்க இலக்கியத்திற்கு அடுத்து குறிப்பாக இடைக்காலத்

தில் எழுந்த சமய இலக்கியங்களான சிற்றிலக்கியங்கள் மக்களையும் சமயத்தையும் இணைக்கும் பாலமாக விளங்கியன. சிற்றிலக்கியங்கள் தொன்னூற்றாறிலிருந்து நூற்று முப்பத்திரண்டாக விரிந்து செல்கிறது. என்றாலும் பாட்டியல் நூல்கள் தரும் பெயர்ப் பட்டியலில் அம்மானை இடம் பெறவில்லை. சிலப்பதிகாரத்தில் தோற்றம் பெற்று திருவம்மானையில் தவழ்ந்து, பிள்ளைத்தமிழ், உலா, கலம்பகங்களில் வளர்ச்சியுற்று ஒரு இலக்கிய வளமை முழுவதையும் பெற்றுத் திகழ்ந்தாலும், அம்மானை சிற்றிலக்கியப் பட்டியலில் சேராமல் கதைப்பாடலாகவே தான் காட்சி தருகின்றது. கதைப் பாடலுக்குரிய அனைத்துக் கூறுகளையும் அம்மானை பெற்றுத் திகழ்வதால் கதைப்பாடலிலேதான் அம்மான்ன அடங்குகின்றது. எனவே அம்மானையானது கதைப்பாடலே எனத் தெளியலாம்.

## கதைப்பாடல் வகையுள் இவ்வம்மானை பெறுமிடம்

சமுதாயத்தில் மக்கள் வாழ்கின்ற இடம் மற்றும் சூழ்நிலைக்கேற்ப நாட்டுப்புறக் கதைகள் வேறுபடும். ஏதேனும் ஒரு கருத்தை உள்ளடக்கியதாயினும், கதை கூறும் பாங்கில் பல வேறுபாடுகள் காணப்படுவது இயல்பு ஏனெனில் மக்கள் செவிவழிச் செய்தியாய் அமைதல்தான் காரணம். இவ்வம்மானையில் நாட்டுப்புறக் கதைப்பாடலின் இயல்புகளான கதையின் தொடக்கம், முடிவு, கதை சொல்லும் உத்தி, சொல்லமைப்பு, பாவமைப்பு போன்ற இயல்புகள் அனைத்தும் பெற்று அமைந்துள்ளனவாதலால் சிறப்புற்று அமைகிறது.

ஒரு மன்னனின் வாழ்வு தாழ்வுகளைப் பற்றிப் பாடும் இவ்வம்மானையானது மக்களுக்குத் தேவையான பல அரிய கருத்துகளை உணர்த்துகின்றது. நாட்டுப்புற மக்களின் நம்பிக்கைகள், பண்பாடுகள், பழக்க வழக்கங்கள் ஆகியனவற்றை எடுத்தியம்புவதாக அமைகின்றது. விதியின் வலிமை பெரிதும் பேசப்படுகின்றது; இறைத்தன்மைக்கு வாழ வேண்டும் எனவும், இறைவனிட்ட எழுத்தைப் பொறுத்தே ஒவ்வொருவரது வாழ்வும் அமையும் என்னும் கருத்தை வெளிப்படுத்துவதாகவும் விளங்குகிறது.

இயற்கை இறந்த நிகழ்ச்சிகள் பெரிதும் பேசப்படுகின்றன. அக்கால மக்களின் பழக்க வழக்கங்களை இக்கதைப்பாடல் காட்டுகின்றது. இக்கால அறிவியல் சிந்தனையின்படி பார்க்கும்பொழுது மக்களின் அறிவை மழுங்கடிக்கச் செய்ய எழுந்த நூலோ என்றும் எண்ணத் தோன்றுகிறது

என்றாலும் ஒவ்வொரு கதைப்பாடல்களும் போற்றுகின்ற மக்கள் வழக்கப் பண்பாடுகளையே இவ்வம்மானையும் போற்றுகின்றது. எனவே நாம் குறையாக எண்ணி இவ்விலக்கியங்களை ஒதுக்கித் தள்ளி விடக்கூடாது.

## முடிப்புரை

இவ்வம்மானையைப் பதிப்பாய்வு செய்தபோது, கதைப்பாடல்களின் கூறுகள் அனைத்தும் இவ்வம்மானையிலும் படிந்து அழகுறுவதைக் காணமுடிகின்றது. ''ஒரு நாட்டில் வழங்கும் கதைப்பாடல்கள் அந்த நாட்டின் சட்டங்களைவிட முக்கியமானவை'' என்றார் ஆண்ட்ரூசு பிளெச்சர். காரணம் கதைப்பாடலின் சக்தி அத்தகையது; அதன் ஆற்றல் எதையும் மாற்றும் தன்மையது.

கதைப்பாடல்கள் வரலாறுகள் அல்ல; அவை வீரகாவியங்கள். இடையே மனிதப்பண்பின் உயர்ந்த அம்சங்களைப் போற்றுபவை; சமூகச் சீர்கேடுகளைக் கேலி செய்பவை. இவற்றின் விளக்கமாகத் தான் இவ்வம்மானை அமைந்துள்ளது.

## அடிக்குறிப்பு

1. சண்முகசுந்தரம். நாட்டுப்பறவியல் — ஓர் அறிமுகம், இலக்கிய மாணவர் வெளியீடு, சென்னை, 1975.
2. இராசாராம். த, தமிழில் அம்மானைப் பாடல்கள், ப. 11.
3. சுப்பிரமணியன். ச. வே, தமிழ் இலக்கிய வகையும் வடிவும், ப. 477.
4. சண்முகம்பிள்ளை. மு, சிற்றிலக்கிய வகைகள், பக். 148-149.
5. அருணாசலம். மு, கதைப்பாடல், பக். 53-54.
6. வானமாமலை. நா, தமிழர் நாட்டுப் பாடல்கள், ப. 5.
7. அன்னகாமு. ஏட்டில் எழுதாக் கவிதைகள், ப. 202.
8. சோமலே, தமிழ்நாட்டுப்புறவியல், ப. 129.
9. அன்னகாமு, ஏட்டில் எழுதாக் கவிதைகள், ப. 1.

# ஆ. சிறப்பு நிலை ஆய்வு

## இன்பியல் இலக்கியம்

கதை மற்றும் கதைப்பாடல்கள் இருவித முடிவுகளைப் பெற்றிலங்கு கின்றன. அவை: 1. இன்ப முடிவு பெற்றவை, 2. துன்ப முடிவு பெற் றவை. அவலம், நகை, களிப்பு போன்ற ஏதேனும் ஒரு சுவையை மிகுதி யாகக் கொண்டவையாக விளங்குகின்றன. இந்நூல் இன்பியலில் ஆரம்பமாகி, இடையில் துன்பவியலை விரித்து அமைந்தாலும் முடிவில் இன்ப முடிவைப் பெற்றே கதை முடிவுறுகின்றது.

இந்நூல் புதுவூர் என்ற ஊரை ஆண்ட மன்னனுடைய வாழ்க்கை யைப் பற்றியது. முதலில் அரசனாக இருந்து, விதி வலிமையால் காடேகி, பின் விறகு கட்டியாக மாறி, மனைவி மக்களை இழந்து, திருட்டுக் குற்றம் சுமத்தப்பட்டு கைகாலிழந்து, மீண்டும் மனைவி மக்க ளுடன் சேர்வது வரையிலான கதையைக் கூறுகின்றது. ஆகவே நூல் இன்பியல் தன்மைபெற்றே முடிவு பெறுகின்றது.

## ஆசிரியர் வரலாறு

நூல் தொடங்குமிடத்து அவையடக்கத்தில் ஆனைகாத்த பெருமாள் அடியேன் திருநாமம்' (வரி எண். 27) என்ற அகச் சான்றின் வழி இந்நூலின் ஆசிரியர் பெயர் 'ஆனை காத்த பெருமாள்' என்பது அறிய முடிகின்றது. வேறு எவ்விடத்திலும் ஆசிரியரைப் பற்றிய செய்திகள் இடம் பெறவில்லை. சுவடியின் கடைசி ஏட்டில்,

> ''புதுவூர் சக்கரவர்த்தி யம்மானை எழுதி முடிந்தது முற்றும் குத்தாலலிங்கம் புதுவூர் சக்கரவர்த்தி அம்மானை யெழுதினேன். எடுத்தவர் படித்துக் கொண்டு கொடுத்து விடவும்''

என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது. எனவே குத்தாலலிங்கம் என்ப வர் நூலை படியெடுத்து எழுதியவராகத் தெரிகிறது.

இந்நூலாசிரியரின் சமயம் 'சைவம்' என்பதை

'அனுதினமும் சிவபூசை யாகமங்கள் நிறைவேற' (96)
'தேவசிவா லயங்கள் சிறப்பாக நடந்தும்' (105)
'பட்டணமுங் காட்டி பரமனார் கோபுரமும்' (423)
'சிந்தை யுடன்செய்து சிவன்ஈர்க்குத் தொண்டுபண்ணி' (1060)

ஆகிய வரிகள் புலப்படுத்துகின்றன. மேலும் ஆனைகாத்த பெருமாள் வைணவப் பெயராக இருந்தாலும் இவர் சைவத்தைச் சார்ந்தவர் என்ப

தற்குச் சான்றாக, நூலில் கயிலையில் நடக்கின்ற விதி பற்றிய விவாதத்தில் சிவனையே தலைமையுடையவராக அமைத்துக் காட்டியிருப்பதன் மூலமாக உணர முடிகிறது. இவ் அகச் செய்திகளிலிருந்து நூலாசிரியரின் சமயம் சைவம் என்பது உறுதிப்படுகிறது. ஆசிரியரின் காலம், ஊர் பற்றி அறிய முடியவில்லை.

## கல்வித்திறன்

இந்நூலாசிரியர் சிறந்த கல்விமானாகத் திகழ்ந்திருப்பதை அவரின் நூலின் வழி அறிய முடிகின்றது. அதுவும் கதைப்பாடல் தன்மையை முழுதும் அறிந்தவராகக் காணப்படுகிறார். மேலும் இலக்கிய வழக்குச் சொற்களையும், பேச்சு வழக்குச் சொற்களையும் கலந்து நூலைப் பாடியிருக்கிறார். மக்கள் இலக்கியமே மாண்புடைய இலக்கியம் என அறிந்து தனது நூலில் மிகுதியாக மக்கள் வழக்குப் பண்பாட்டுச் சொற்களையே கையாண்டுள்ளார்.

வடமொழியையும் கற்றறிந்தவராகத் திகழ்கிறார். தனது நூலில் வடமொழிச்சொற்களையும், சில வடமொழிச் சொற்களைத் தமிழ்ப்படுத்தியும் தந்துள்ளார். மேலும் ஆசிரியர் இதிகாச, புராணக் கதைகளை நன்கு கற்றறிந்தவராகத் திகழ்கிறார். தனது நூலில் மனிதப் பாத்திரங்களோடு இதிகாசப் புராணப் பாத்திரங்களையும் (இறைவன்கள்) கலந்து நடமாடச் செய்துள்ளார். மேலும் புராணக் கதைக் கருத்தையும் இடையிடையே அமைத்துப் பாடியுள்ளார். புதிய சொற்களையும் படைத்துக் காட்டியுள்ளார்.

## மொழித்திறன்

ஆசிரியர் தமிழ் மற்றும் வடமொழி ஆகிய இருமொழிப் புலமையுடையவராகத் திகழ்கிறார். ஒரு ஆசிரியனுக்கு ஒரு மொழி மட்டும் அறிந்து இருப்பது சிறப்புடைத்தன்று; இருமொழித் திறனையும் பெற்றிருத்தலே சிறப்புடைத்தாகும்.

> ''வடசொற்கிளவி வடஎழுத்து ஒரீஇ
> எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே''

என்ற தொல்காப்பிய நூற்பாவிற்கிணங்க, ஆசிரியர் தனது நூலினும் வடமொழிச் சொற்களைக் கையாண்டுள்ளார். ரிஷிகள், பட்டாபிஷேகம், பொர்க்கிஷம், வங்கிஷபதி, பூஷணம், சத்தரிஷி போன்ற வட

மொழிச் சொற்கள் பயின்று வந்துள்ளன. சில இடங்களில் வடமொழி எழுத்துகள் தமிழ்ப்படுத்தி தந்திருப்பது அவரின் மொழிப் புலமைக்குச் சான்றாக அமைகிறது.

பாஸ்கரன் — பாற்கரன் — புஷ்பவிதானம் — புற்பவிதானம்
அவஸ்தை — அவட்சை — இஷ்டமுடன் — இட்டமுடன்
நெஷ்டூரம் — நெட்டூரம் — துஷ்டம் — துட்டம்

மேலும் ஓர் ஆசிரியரின் மொழிப்புலமை அவரின் புதிய சொல் லாக்கங்களிலும் மிளிர்ந்து காணப்படுகிறது. அவ்வழியில் இவ் ஆசிரி யரும் சிறந்து விளங்குகின்றார்.

> ஓலை எடுத்துச் செல்பவனை 'ஒட்டன்' என்றும், மேலும் அவ் வோலையை 'ஆளோலை' என்றும், வேலைக்காரரை 'சம்பளங் களாட்டி', 'காரியப்பேர்' என்றும் பணிப்பெண்ணை 'வெள் ளாட்டி' என்றும்

புதிய சொல்லாக்கங்களைத் தருகின்றார்.

## புலப்பாட்டுத்திறன்

கதைப்பாடல்கள் பாமர மக்களின் சுவைக்கும் கருத்து விளக்கத் துக்கும் ஏற்ற முறையில் பின்னப்படுதல் வேண்டும். கதைகளைக் கேட்ட வுடன் நன்கு புரியும் முறையில் படைத்துள்ளமை கதாசிரியர்களின் படைப்புக் கலைத்திறனை நன்கு விளக்கிக் காட்டும். இவ்வகையில் இக்கதைப் பாடலின் ஆசிரியரும் மக்கள் புரிந்து கொள்ளும் நிலையில் விறுவிறுப்புடன் உணர்ச்சி ததும்ப நாடகத் தன்மை முறையில் பாடி அமைத்துள்ளார். நூலாசிரியர் கதையைப் பாடுகின்றார். கதாபாத்திரங் களின் கூற்றாகவும், 'விருத்தம்' என்று அமைத்துப்பாடும் பகுதியில் ஆசிரியரே தனது கூற்றை வெளிப்படுத்துவது போலவும் அமைத் துள்ளார்.

ஒவ்வொரு கதைத் திருப்பத்தின் போதும் கதையைப் படிப்பவர் களும், கேட்பவர்களும் அடுத்து நிகழ்வது என்ன என்று அறியும் ஆவ லுடன் அமைத்துள்ளார். பாமர மக்களின் பேச்சுமொழி நடையிலேயே கதையை மக்களுக்குப் புலப்படுத்துகின்றார்.

கதையின் இடையிடையே கதைப் பொருத்தத்திற்கு ஏற்ற வகையில் மக்கள் விரும்புகிற புராணக் கதைச் செய்திகளையும் குறிப்பாகக் காட்டிச் செல்லுகின்றார். மக்களின் கதைச் சுவையை அறிந்து இவ்வாறு புராணக் கதைக் குறிப்புகளைக் குறிப்பிட்டுச் செல்வது அவரின் புலப்பாட்டுத் திறனை வெளிப்படுத்தும் திறனாக அமைகின்றது.

## நூலின் அமைப்பு

இந்நூல் கதைப்பாடலுக்கென்று இருக்கும் அமைப்புகளான கதையின் தொடக்கம், முடிவு, கதை, சொல்லும் உத்தி, சொல்லமைப்பு, பாவமைப்பு போன்ற பல அமைப்புகளைக் கொண்டு அமைந்துள்ளது.

## காப்பு

மனிதனைப் பற்றும் அறத்துக்குப் புறம்பான தீய செயல்கள், அவனை அண்டிவிடாது காக்கப் பிள்ளையார் அருள் செய்ய வேண்டும். பின்னர்தான் நூல் எழுதுவதற்கு இறையருளை வேண்டிப் பணியும் பாடல் பாடப்பெற்றது. தமிழ் இலக்கிய மரபிற்கேற்ப முதலில் காப்புப் பாடியே நூலைத் தொடங்குகின்றார் ஆசிரியர்.

'அம்மானைப் பாட அருள்கொடுப்பாய் நாயகனே' (5)
'பெம்மான் சிவனே பெரிய பெருமாளே' (6)
'அடியார்க் கெளியானே ஆதிபரமேசுவரனே' (7)
'வடகயிலை வீற்றிருக்கும் மானேந்தி முன்நடவாய்' (8)

என்று வரும் முதற்பாடலில் சிவன்பேரில் இறைக் காப்பு இனிது வேண்டப்படுகிறது. மேலும் நான்முகன், இந்திரன், திருமால், சரசுவதி, விநாயகன், முருகன் முதலியோர் மீதும் காப்புப் பாடல் பாடப் பெற்றுள்ளது. பின் அவையடக்கம் பாடப்பெற்றுள்ளது.

## அவையடக்கம்

கதைபாடும் பொழுது அவையடக்கம் சொல்லிக் கொள்வது தமிழ் மரபு. இதற்குக் காரணம் தனது கல்விமேல் தனக்கு ஆணவம் வரக் கூடாது என்பதாகும். இம்மரபைச் சீவகசிந்தாமணி முதல் கம்பராமாயணம் முதலான காப்பியங்களும் பின்பற்றிப் போற்றியுள்ளன. கதைப் பாடல்க்ள் அனைத்தும் அவையடக்கத்தைப் பெற்றே அமைந்துள்ளன.

இந்நூலிலும் அவையடக்கமாக, 'கார்கோடகன்' என்னும் பாம்பின் முன் மண்ணுழிப்பாம்பு படமெடுப்பது போலவும், மயிலுக்கு முன் நிகராக காகம் உரை செய்வது போலவும், நான் கற்றறிந்த புலவர்கள் முன் பாடவந்துள்ளேன். எனவே எனது நூலைச் சரியல்ல என்று தள்ளாமல் காத்தருள வேண்டும் என்றும், தமிழ்ப்புலவர் திருப்பாதம் போற்றி வணங்குகிறேன் என்றும் அவையடக்கம் பாடுகின்றார் (28-36).

## நுதலிப்புகுதல்

அவையடக்கம் முடிந்த பிறகு கதையின் தொடக்கமாகத் தான் பாட எடுத்துக் கொண்ட மன்னனைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

'தேசம்புகழ் புதுவூர் சீமைக்கு மன்னவனார்' (40)
'கூறுகிறேன் நானடியேன் குமரனே முன்நடவாய்' (46)

கதை தொடங்குவதற்கு முன் நாட்டுவளம் மலைவளம், நகர்வளம் கூறப்பெற்றுள்ளது. காப்பியங்களில் நாட்டு வளம், நகர் வளம், பாடு வதைப் போலச் சிற்றிலக்கியங்களிலும், கதைப் பாடல்களிலும் பாடும் வழக்கம் வந்துள்ளது.

## கதை முடிவு

பலவிதமான நோக்கங்களைக் கொண்டு கதைப் பாடல்கள் எழுதப் படுகின்றன. கதையின் நோக்கங்கள் நிறைவேறும் வகையில் முடிவுகள் அமைய வேண்டும். சுவையான முடிவையே மக்கள் விரும்புவர். இக் கதைப் பாடலாசிரியரும் இன்பியல் முடிவில் அமைத்துள்ளார். கதைப் பாடல் முடிவுகள் வாழ்த்தாக அமைவதைக் காணலாம். இக் கதைப் பாடலாசிரியரும் முதலில் இறைவனை வாழ்த்திவிட்டு, பின்பு கதை படிப்பவர், கேட்பவர். அனைவரையும் வாழ்த்தி முடிக்கின்றார் (2188-2201).

## பாவமைப்பு

இந்நூல் கதைப் பாடல்களுக்கே உரிய சந்தப்பாடல் நடையும், அம்மானை நூலுக்குரிய அம்மானை நடையும் கொண்டது. இருபத்தாறு இடங்களில் 'அம்மானை' என்ற சொல்லாட்சி காண்கிறோம். இச் சொல்லானது கதைத் திருப்பங்கள் எற்படுகிறபோது, ஆசிரியரே மொழியும் வண்ணமாக ஒரு சில இடங்களில் அமைந்துள்ளது. மேலும் கதைத் திருப்பத்திற்காக 'விருத்தம்' கையாளப் பெற்றுள்ளது. திரும்ப வும் நூல் தொடர்வதை 'நடை' என்று குறிக்கப்படுகிறது.

## சொல்லமைப்பு

ஆசிரியர் நூலில் நான்கு வகைச் சொற்களையும் கையாண் டுள்ளார். இலக்கிய வழக்குச் சொற்களையும், பாமர மக்களிடம் அன் றாடம் வழங்கப் பெறும் பேச்சு வழக்குச் சொற்கள், வட்டார வழக்குச் சொற்கள், கொச்சை வழக்குச் சொற்களையும் அமைத்து நூலை இயற்றியுள்ளார்.

## இலக்கிய நயம்

கதையை ஒழுங்காகவும் சுவையாகவும் பின்னி முடிப்பதற்குக் கதாசிரியர்கள் பல உத்தி முறைகளைக் கையாளுகின்றனர். இவ்வாசிரியரும், கதையில் சிக்கலை வளர்த்தல், இயற்கை இறந்த நிகழ்ச்சிகள், கனவு, முன் நடந்தவற்றைத் திருப்பிக் கூறல், அணி நயங்களான உவமை, உருவகம், அணிகள், அடுக்குத் தொடர், முரண்தொடை போன்ற நயங்களையும் சிறந்த உத்திமுறைகளாகப் பயன்படுத்தியுள்ளார்.

## சிக்கலை வளர்த்தல்

கதைப் பின்னலுக்குச் சிக்கல் மிகவும் முக்கியப் பகுதி. சிக்கலின்றிக் கதையைச் சுவையாகப் பின்னிக் காட்டுவது இயலாது. சிக்கல் இருந்தால் தான் வாழ்வியலை ஓரளவாவது கதைக்குள் புகுத்தி விளக்க முடியும். உண்மையான வாழ்வு சிக்கல் நிறைந்தது. அதனை அடிப்படையாகக் கொண்டு படைக்கப்படும் எந்த இலக்கியமும் வாழ்வியல் சிக்கல்களை விளக்கித் தீர்வு காண்பவையாக இருக்கும். இவ்வகையில் இந்நூலாசிரியரும் தனது நூலில் சிக்கல்களை வளர்த்துச் செல்கிறார்.

மன்னனை கலிபற்றுவதிலிருந்து, மன்னன் ஒவ்வொரு இடத்திலும் தங்கி, பின் அவ்விடத்திலிருந்து செல்வதின் வழியிலிருந்து இச்சிக்கல் நீண்டு செல்வதை நாம் பார்க்க முடிகிறது.

## இயற்கை இறந்த நிகழ்ச்சிகள்

இயற்கை இறந்த நிகழ்ச்சிகளைக் கதைப்பாடல்களில் கலத்தல் அதன் முக்கியமான கூறாகும். உலக வாழ்வில் நடக்க முடியாததை இயற்கைக்கு அப்பாற்பட்ட ஆற்றலால் நடைமுறைப்படுத்திக் காட்டுவது கதைப்பாடலாசிரியர்களின் வழக்கம். இக்கூறை இந்நூலாசிரியரும் கையாண்டுள்ளார்.

மனிதப் பாத்திரங்களோடு இறைப் பாத்திரங்களையும் படைத்து பேசச் செய்தல்; மன்னனைக் கருடன் தூக்கிச் செல்லுதல்; கருடன் பெட்டகத்தைத் தூக்கிச் செல்லுதல்; நாரதர் மண்ணுலகிற்கு வருதல்; மன்னனின் இழந்த கைகாலை மீட்கச் செய்தல் போன்ற மீவியற்கை நிகழ்ச்சிகளை தமது நூலில் படைத்துள்ளார். மன்னனைக் கலிபற்றுதல் இதை அடிப்படையாகக் கொண்டே கதையின் ஓட்டம் அமைகிறது.

கதையின் உயிர்மூச்சை இயற்கைக்கு அப்பாற்பட்ட செயலால் சாதித்துக் காட்ட ஆசிரியர் தயங்கவில்லை. கதை மாந்தர்களின் சிறப்பை

மிகைப்படுத்திக் காட்டுவதற்காகச் சில இயற்கை இறந்த நிகழ்ச்சிகளை இணைத்துக் கதைகளைப் பின்னுவது வழக்கம். எனவே ஆசிரியர் உலகியலில் நடக்க முடியாதனவற்றைக் கதைகளின் தேவை கருதி மீவியலால் நடக்க வைத்துக் கதையைப் பின்னியுள்ளார். கதையின் தேவை, மக்களின் நம்பிக்கை, நிகழ்ச்சிப் பொருத்தம், சுவைப் பயன் ஆகிய அனைத்தையும் மனத்தில் கொண்டு இயற்கை கடந்த நிகழ்ச்சிகளை அளவோடு புகுத்திக் காட்டுகிறார் ஆசிரியர்.

## கனவு

இலக்கிய உத்திகளில் ஒன்றாகக் கனவு விளங்குகிறது. கனவு காணுதல் மனித இயல்பு. மனித மனம் அடிமனவுணர்ச்சிகளைக் கனவுக் காட்சிகளாகக் காட்டுகிறது என்று கூறுவர். இவ்வுத்தியை இந்நூலாசிரியரும் படைத்துள்ளார்.

அரசியானவள் கணவன், மைந்தர்களின் வருகையைக் காணாமல் வருந்தி மெய் சோர்ந்து உறங்கியபோது கனவு காணுகின்றாள். கனவில் திருமகள் தோன்றி,

'மாதே மயங்காதே மைந்தனுட தந்திரமாய்
கோதே பிரித்தெறிந்தான் குலைமயக்கஞ் செய்யாமல்
ஈரேழு வாண்டு மியல்பாய் முடிந்தவுடன்
பாராளு மன்னவரு மைந்தர்களு மொன்றாக
சேகரித்து மொன்றாய்ச் சீமை தனையாள்வீர்
தோகையரே மலைவு தோற்றாதே யென்றகன்றாள்' (907—912)

அரசி உயிர் வாழவும் வழி செய்கிறது. பின் நடப்பதை முன்னறிவிப்பு செய்யும் வாயில்களாகக் கனவு உத்தி பயன்படுத்தப்படுகிறது. கதை படிப்பவர்களுக்கு ஒளிகாட்டும் கருவிகளாகக் கனவுகள் பயன்படுகின்றன. மக்களிடம் பொதுவாகக் காணப்படும் நம்பிக்கையின் அடிப்படையில் கனவுகள் கதைகளில் பயன்படுத்தப் பெற்றுள்ளன.

## முன் நடந்தவற்றைத் திருப்பிக் கூறல்

நெடுங்கதைகளைக் கூறிக்கொண்டு வரும்போது முன்னால் விளக்கிச் சொல்லியவற்றைப் பின்னால் சுருங்கிச் சொல்லும் போக்கைப் பல கதைப் பாடல்களில் காண முடிகிறது. முன்கதை மறந்து விடாதிருக்க அதனைத் திருப்பிச் சொல்லி நினைவுபடுத்துவதாக இவ்வுத்தியைக் கருதலாம். பாமர மக்களின் நினைவாற்றல், புரியும் திறன் ஆகியவற்றை மனத்தில் கொண்டு இம்முறையைக் கையாண்டு கதைப் பாடல்களை ஆசிரியர்கள் புனைந்துள்ளனர் என்று கருதலாம்.

இந்நூலாசிரியரும் இவ்வுத்தியை மிகச் சிறப்பாகக் கையாண்டுள் ளார். இதில் முன்கதை நிகழ்ச்சிகள் பாத்திரவுரைகளாகப் பல இடங் களில் தரப்படுகின்றன. (271, 369-373, 2055).

இவ்வாறு கதையோட்டத்திற்கு இடையில் கதாமாந்தர்கள் தங்களுக்கு ஆதரவு தருகின்றவர்களிடம் தங்களுடைய வரலாற்றைக் கூறுவது போல் ஆசிரியர் அமைத்து இருக்கிறார். இந்த முறையில் கதைப் பாடலா சிரியர் குறை நேராத வண்ணம் முன்கதைக் குறிப்புகளை (முன் னிகழ்ச்சிகளை) தொகுத்துச் சொல்லுகின்றார். இவ்வாறு முன்னிகழ்வு களைச் சுருக்கி இடைநடுவே நினைவுபடுத்தலாகக் கூறிச் செல்வதைக் கதைப் பின்னல் உத்திகளில் ஒன்றாகக் கருதலாம்.

## செய்தி ஓலைகள்

செய்தி அனுப்பும்முறை அன்றுதொட்டு இன்றுவரை மனித வாழ் வில் நடைபெற்று வருகிறது. நேரில் கூறவியலாத நிலையில் கடிதங்கள் மூலம் செய்திகளை அறிவித்தல் வழக்கம். கதைப் பாடலின் கட்டுக் கோப்பில் ஓலை அனுப்பல் மிக முக்கியமான இடத்தைப் பெறுகிறது. அறிய வேண்டியதை அறிவிக்கவும், தெரியாததைத் தெரிவிக்கவும் புலனாகாதவற்றைப் புலப்படுத்தவும் இவை உதவுகின்றன. இந்நூலா சிரியரும் ஓலை மூலம் செய்தி அனுப்புதலை இரண்டு இடங்களில் தம் நூலில் அமைத்துள்ளார்.

மன்னன் தான் ஆளையூர் இளவரசியை மணந்த செய்தியை, பெண்ணின் பெற்றோர்களுக்கு ஓலைமூலம் தெரியப்படுத்துகின்றான்.

> 'ஒட்டன்வச மாளோலை நீட்டனுப்ப வேணுமென்று' (1953)
> 'வாட்டமில்லா மன்னவனார் வகையாய் எழுதினாரே' (1951)

செட்டி அரசி சொன்ன கெடுநாள் முடிந்ததும், அரசியை வர வழைக்க ஓலை அனுப்புகின்றான்.

> 'வாட்டமுடன் கப்பல்தனை வரவழைக்க வேணுமென்று'(2022)
> 'விட்டானே யாளோலை மீகாம னுள்ளவர்க்கு' (2023)

இவ்வுறு கதைப் பாடல்களில் ஓலைகள் முதன்மைச் செய்திகளைப் புரிந்து கட்டுக் கோப்புக்கு உதவியுள்ளன என்பதை அறிய முடிகின்றது.

## உவமை

ஒரு பொருளை விளக்க உவமைகள் நன்கு உதவுகின்றன. மக்கள் நன்கு அறிந்த பொருள்கள் உவமையாக்கப்படுவது மிகவும் சிறப்பாக

அமையும். கதைப்பாடல்களில் பாமர மக்கள் எளிதாகப் புரியத்தக்க வாறு உவமைகள் அமைக்கப்பட்டுள்ளன. இக்கதைப் பாடலாசிரியரும் மக்கள் வாழ்வில் உறவாடும் சாதாரண பொருள்களையே உவமை ஆக்குவதை நாம் மிகுதியாகப் பார்க்க முடிகிறது.

மன்னன் தனது மனைவி மைந்தர்களுடன் காட்டில் துன்புறுவதை,

'சர்ப்பத்தின் வாயில் தவளைபோல் தட்டழிந்தார்' (288)
'கன்றிழந்த மாடதுபோல் கதறவே தம்பியர்கள்' . (291)
'தண்ணீரிழந்த பயிர்போல் தட்டழிந்தார் நால்பேரும்' (292)

என்றும், ஆற்று வெள்ளம் கரைபுரண்டு வருவதை,

'பசுநிரையள் போலே பரந்துவெள்ளம் வந்ததுவே
கசைகொண் டிருப்பதுபோல் கரைபுரண்ட வெள்ளமுமாய்'
(715-716)

என்றும் உவமை காட்டி விளக்குகிறார். இது மக்களுக்கு எளிமையாகப் புரியும் வகையாக அமைகிறது.

அரசி கணவன், மைந்தர்களின் வரவைக் காணாமல் துன்புறுவதை,

'உலையிலிடு மெழுகதுபோல் உலைந்து மெலிந்திடுவாள்''(894)

என்று அன்றாட வாழ்க்கையில் மக்கள் பார்க்கும் பொருளையே உவமை யாக்கிப் பாடுகின்றார். இதுபோன்று உவமைகள், தொடர்ச்சியாகவும் காணப்படுகின்றன (443-444, 450-458, 462-466).

## உருவகம்

ஆசிரியர் உவமை மட்டுமின்றி உருவகத்தையும் அமைத்துப் பாடு கின்றார். அரசியின் அழகை வருணிக்கும்போது மிகைபட உவமிக்கின் றார். உருவகத்தையே உவமையாக்குகின்றார். கொவ்வையிதழ் (67), காரிருள் (209), செம்பவளவாயார் (2093), கோவையிதழ் (1090) போன்ற உருவகச் சொற்களையும்,

'அயனார் உருப்பிடிக்க அறிந்தானோ வென்றயர்வான்' (445)
'மின்னை யொருவடிவாய் வேண்டிச் சமைத்தானோ' (447)
'திங்கள் தனையெடுத்து மங்கைமுகஞ் சேர்த்தானோ' (450)
'வில்லாளி மன்மதனை வெல்லவென்று வந்தாளோ'' (452)

என்று அரசியின் அழகை உருவகமாகப் படைத்துக் காண்பிக்கிறார்.

## தற்குறிப்பேற்றவணி

ஆசிரியர், சூரியன் மறைவதை அழகுற கதை ஓட்டத்திற்கு ஏற்ப, இயற்கைப் பொருளும் மன்னனுக்காக வருந்தி கடலில் மறைந்தான் என்று தனது கருத்தை ஏற்றிக் கூறுகின்றார். மன்னன் குடும்பத்தார் படுகின்ற துயரங்களைக் காண பொறுக்காமல், கடலில் மறைந்தான் என்று இயல்பு நிகழ்ச்சியில் தனது கருத்தை வலிந்து கூறுகின்றார்.

'பத்தியுடன் கண்டார் பாற்கரனு மப்பொழுது' (264)
'கண்டாலும் பாவமென்று கடலோடித் தான்புகுந்தான்' (265)

அவ்வாறே மன்னன் ஆற்றுவெள்ளத்தில் அடித்துச் செல்லப்படு தலைக் கண்ட சூரியன் மன்னனின் துன்பத்தைக் கண்டு சொல்ல முடியாமல் கடலில் மறைந்தான் என்று தனது கருத்தை ஏற்றிக் கூறு கின்றார்.

'அருக்கனு மிந்த அவதிகளைக் கண்டவுடன்' (771)
'உரைக்கொண் ணாதென்றுகட லோடிப் புகுந்தானே' (772)

## சொற்பொருள் பின் வருநிலையணி

இவ்வாசிரியர் இந்நூலில் ஒருசில இடங்களில் இவ்வணியை அமைத்துப் பாடுகின்றார்.

'கள்ளரிலும் கள்ளனிவன் காருடக் கள்ளனிவன்' (1177)
'முன்னறியோம் பின்னறியோம் முதுமையோர் சொல்லறியோம்
சொல்லறியோம் நாமறியோம் துயரம் அறிந்திலை நான்'
(1701-1702)

## புராணச் செய்திகள்

கதைப்பாடல்கள் பெரும்பாலும் சமயவுணர்வு மிக்க காலகட்டத்தில் எழுந்துள்ளன. மக்கள் புராணக் கதைகளை விரும்பி ஏற்கும் காலமாக அது உள்ளது. கதைகளுக்கு இடையில் அவற்றைக் கேட்பதற்கு மிகவும் விரும்பினர். ஆகையால் வாய்ப்பாக அமையும் இடங்களில் கதைக் குறிப்புகளைப் பொருத்திக் கதையை ஆசிரியர்கள் வளர்த்துள்ளனர்.

இக்கதைப் பாடலாசிரியரும் பல புராணக் கதைக் குறிப்புகளைச் சுட்டிச் சென்றுள்ளார். அக்குறிப்புகள் மும்மூர்த்திகளான சிவன், திருமால், பிரமன் இவர்களின் திருவிளையாடல்களைப் பற்றியன.

'ஆலமுண் டார்கால மமுர்தங் கடைந்ததுவும்' *(318)*, 'வையகமெல் லாம் உண்ட மாயோனே' *(335)*, வையகத்தை யோரடியாய் அளந்தார் *(1459)*, 'கங்கையைச் சடையில் வைத்த கிருபை' *(1784)*, 'நீரினில் பள்ளி கொள்ளும் நிமலன்' *(1796)*, 'இந்திரன் ஆயிரம் கண் படைத் தான்' *(1888)*, 'மாயோனுஞ் சீதையுடன் வனமுறைதல்' *(1890)*, 'அயன் சிரசை கல்லுவதால்' *(1891)*, 'ஆனைக் கருள் செய்தோன்' *(2191)*, 'சேனைக் கருள் புரிந்த திருமால்' *(2192)* கரகம் கையில் தூக்குங் கமலன் *(1800)*, கண்டங் கறுத்தோன் *(1792)*.

இவ்வாறான புராணக் கதைக் குறிப்புகளை கதையோட்டத்தி னிடையே அமைத்துச் சென்றுள்ளார்.

## நூல் காட்டும் சமுதாயம்

மனித இனத்தைப் பல்வேறு சாதிகளாகப் பிரித்து ஏற்றத் தாழ்வு களைச் சமுதாயம் கற்பித்துள்ளது. இயற்கையின் படைப்பிற்கும் சாதிப் பிரிவுகளுக்கும் எவ்விதமான தொடர்பும் இல்லை. இக்கதைப் பாடல் தான் எழுந்த காலத்து இருந்த சமுதாய நிலைகளைப் படம் பிடித்துக் காட்டுகிறது. சமுதாயப் பிரிவுகள், மக்களின் வாழ்வியல், மனவியல்பு கள், பொருளாதார நிலை, சிந்தனைப் போக்குகள், அரசியல் நிலை ஆகியவற்றைக் கொண்டு பொதுநிலையில் சமுதாய அமைப்பை ஓரளவு கண்டு கூற முடியும்.

அக்காலச் சமுதாயம் மன்னராட்சியின் கீழ் இயங்கி வந்தது. சமுதா யத்தில் பலசாதிப் பிரிவினர் வாழ்ந்து வந்தனர். அந்தணர், ஆசாரி, இடையர், செட்டி, செக்கான் ஆகிய சாதிப் பிரிவினரின் வாழ்க்கை முறைகள் சுட்டப்பெறுகின்றன.

## சமுதாய வழக்க முறைகள்

சமுதாய நடப்புகள் நல்லதாகவும் கெட்டதாகவும் இருக்கலாம். அற வாழ்வு வாழ விரும்பிய ஒரு சமுதாய இனமாகத் தமிழர்களைக் கருத லாம். பல அறக்கோட்பாடுகளை வகுத்து அவற்றின்படி வாழ விரும்பி யுள்ளனர் என்பதை அறநூல்கள் நமக்குக் காட்டுகின்றன. அவ்வகையில் கதைப் பாடல்களும் நமக்கு வற்புறுத்துகின்றன. இக்கதைப்பாடலில் காணக்கிடைக்கும் அறச் செய்திகள் :

தனக்கு நல்லது கிடைக்க வேண்டும் என்ற விருப்பில் அறச்செயல் களை நாடிச் செய்திருப்பதைக் காண முடிகிறது. அறவினைப் பயனால் பிள்ளையில்லா வினை நீங்கும் எனக் கருதியுள்ளனர். இதற்காகத் தான

தருமம் செய்தல், கோயில் அமைத்தல், குளம் வெட்டல், நன்னீராடிக் கோவிலுக்குச் சென்று இறைவனை வழிபடல், திருமணம் செய்துவித் தல், நிலம், வீடு ஆகியவற்றை வழங்கல், தவ''ற் புரிதல் முதலிய பல வற்றைச் செய்ததை இவ்வம்மானையில் விளக்கமாகக் காணலாம்.

'குழவிகள் இல்லையென்று கோவில் மடங்கட்டினதும்' (309)
நாமுந்த வசிருந்து நற்குழவி யுண்டாகி (588)

ஒழுக்கத்தை உயிருக்கு மேலாக மதித்துள்ள சமுதாய நிலையை இக் கதைப் பாடல் சிறப்பாகக் காட்டுகிறது. ஒருவன் ஒருத்தியை மணந்து அன்புடன் இணைந்து வாழ்வதில் தான் மணவாழ்வில் சிறப்பு உள்ளது. ஒருத்தியை மணந்தபின் இன்னொருத்தியை நினைப்பது தவறு. அது சமூகம் ஒப்புக்கொண்ட ஒழுக்கத்திற்கு இழுக்கை ஏற்படுத்துவதாகும். காமவுணர்வு சமூகவொழுக்கத்துக்கு முரணாகச் சிலரை மயக்கிப் பிற மாதரை நாடச் செய்வதை இக்கதைப்பாடல் 'செட்டி'யின் வாயிலாகக் காட்டுகின்றது.

செட்டி திருமணம் செய்து கொண்டு சமுதாயத்தில் நல்ல செல்வ நிலையில் வாழ்கிறான். பிறகு மன்னன் மனைவியைக் கண்டதும் மையல் கொண்டு மயங்கி விடுகிறான். இன்னொருத்தனின் மனைவியை இன்னொருத்தியின் கணவனான செட்டி விரும்பியது சமூகக் கட்டுப் பாட்டுக்குப் புறம்பானது. ஒழுக்கக் கேடானது. செட்டியின் மானத்துக்கு இழுக்காக அமைந்தது. இத்தகைய தவறொழுக்கத்தை சுட்டிக் காட்டு கிறது. பிறன்மனை நயத்தலை கேலி செய்கின்றது. சமுதாய உண்மை களை நல்லமுறையில் எடுத்துக்காட்ட ஆசிரியர் தவறவில்லை.

மனித வாழ்வில் மணப்பருவம் மிக முக்கியமானதாகக் கருதப்பட வேண்டியதாகும். காதலும் காமமும் இன்றி ஆணும் பெண்ணும் இணை யும் வாழ்வை பெற்றோரும் மற்றோரும் ஏற்படுத்திக் கொடுப்பதைச் சமுதாயம் ஏற்று ஆதரவு கொடுக்கிறது. இதை இந்நூலின் ஆளையூர் இளவரசியின் திருமண ஏற்பாடு காட்டுகின்றது. மணப் பெண்ணுக்கும், மாப்பிள்ளைக்கும் பலவகையான சீர்வரிசைகளைக் கொடுக்கும் வழக்கப் பண்பாட்டையும் இக்கதைப் பாடல் விரித்துக் கூறுகின்றது.

'மருகனார்க் குள்ளபடி வகைவகையா யாபரணம்' (1522)
உள்ளபடி யில்வகைக ளொன்றுகுறை வாராமல் (1526)

மேலும் கணவனே பெண்ணின் வாழ்வுக்கு உயிர் என்ற கருத்தும், உலகிலுள்ள எந்த உறவும் கணவனுக்கு ஈடில்லை; அவளுக்கு அவனே அனைத்துமாய் உள்ளான் என்பதை ஆளையூர் இளவரசியின் வாயி

லாக உணர்த்தப்படுகின்றது. தனது கணவன் முடவன் ஆனாலும் அவனே தனக்கு என்றும் துணையாவான் என்பதை திருமகளிடம் கூறும் கூற்றின் வழியாக நாம் உணர முடிகின்றது.

'கால்முடவன் கைமுடவன் கண்குருட னானாலும் (1839)
'மேலுடம்புப் புண்ணாய் வியாதியுள்ளான் ஆனாலும்' (1840)
'ஊமைச் செவிடனுமாய் ஒப்பனைக்குச் சீர்கேடாய்' (1841)
'பாருலகில் கற்புடையாள் பழிப்பாளோ தாயாரே' (1844)
'மனதில் குறைநினைத்தால் மங்கையர்க்குக் கற்பாமோ' (1845)

என்றும், அவ்வாறு கேடு செய்தால் நாட்டில் நல்லமழை பெய்யாது; சந்ததியிருக்கும் வரை கேடு நிகழும் என்றும் மக்கள் வழக்குப் பண்பாடு, நம்பிக்கையை எடுத்துக் கூறுகின்றது. பெண்ணுக்குக் கணவனே பெருந் துணை; அவனன்றி அவளுக்கு ஆதரவு இல்லை. இதுவே அக்கால மதிப்பீடு.

## சமயச் சிந்தனைகள்

வாழ்க்கையுடன் ஒட்டியது சமயம். கட்டுப்பாடுகள், நம்பிக்கைகள் ஆகியவற்றால் மனிதமனத்தை நெறிப்படுத்தி நல்வாழ்வு நிலவச் செய் வது சமயம். தமிழ்நாட்டில் பலவிதமான சமயங்கள் தழைத்தோங்கின. இக்கதைப் பாடலின் வழியாக அறியக் கிடைக்கும் சமயம் சைவ சமய மாகும்.

மக்கள் சிவனைப் பெரிதும் வணங்கி வந்தார்கள் என்பதை,

'தேவசி வாலயங்கள் சிறப்பாக வேநடந்தும்' (105)
'தேவசி வாலயங்கள் சிறப்பாய் நடத்தினதும்' (311)

என்னும் பாடல் வரிகளிலிருந்து அறிந்துகொள்ள முடிகிறது. அச் சமுதாயத்தில் சைவ சமயம் ஓங்கி வளர்ந்தமையை இதன்மூலம் நாம் உணர முடிகிறது.

## விதி பற்றிய நம்பிக்கை

அக்காலம் முதற்கொண்டு இக்காலம் வரை விதிபற்றிய நம்பிக்கை இன்னும் மறைந்தபாடில்லை. அறிவியல் வளர்ச்சியடைந்த இவ்விரு பதாம் நூற்றாண்டிலேயே விதிபற்றிய கருத்து மக்களிட்ம் இன்றும் வழங்கி வருகிறது.

இறைவனிட்ட எழுத்துப்படிதான் ஒவ்வொருவருடைய வாழ்க்கையும் அமையும்; அமைகிறது என்று நம்பிக்கை கொண்டு வாழ்ந்து வந்தனர். இதைத் தான் இக்கதைப்பாடலும் வலியுறுத்துகின்றது. நூல் முழுவதும் விதியின் வலிமை பெரிதும் பேசப்படுகின்றது.

இக்கதைப் பாடலில் மன்னன், அரசி, மன்னனின் இளையாள் இவர்களின் வாயிலாக விதியின் வலிமை பேசப்படுகிறது.

'ஆதிபிரமன் அயனார் விதித்த விதி' *(1835)*

'பேதிக்கப் போகாதே பிரமர் விதித்தபடி' *(1836)*

'விதியே விதித்ததல்லால் வேறொன்றுங் கண்டிலமே' *(1880)*

'மதியினுட யோசனைகள் வலுமை நாடாமல்' *(1896)*

'விதியின் படிதானே நடந்ததைக் கண்டீரே' *(1897)*

இம் மன்னனின் வாழ்க்கை விதியின் வழிப்படிதான் செல்கிறது என்று அமைகிறது. இவ்வாறு மக்களின் நம்பிக்கைப் பண்பாடுகள் இக் கதைப் பாடலில் பெரிதும் அமைந்து சிறப்புற்று விளங்குகின்றன. அக்கால மக்களின் சிந்தனையின் வெளிப்பாடாக இக்கதைப் பாடல் திகழ்கிறது.

## நூல் காட்டும் மொழிநடை

இந்நூல் இசைப்பாடல் அமைப்பில் சந்தப்பாடல் வகையில் அமைந் துள்ளது. இந்நூல் சிறப்புற அமைய அதன் மொழிநடை பெருந்துணை புரிகிறது. ''பொருள் சிறப்பு, அழகு, சுருக்கம், உணர்ச்சி, புலப்பாடு, வேகம் ஆகியவை நாடகத்தின் மொழிநடையில் இருக்க வேண்டும்.'' இக்கூறுகள் அனைத்தும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. தாலாட்டு, ஒப்பாரி அமைப்பில் பாடல்கள் அமைகின்றன. மேலும் நூலில் இலக் கிய வழக்குச் சொற்களும், பேச்சுவழக்குச் சொற்களும், வட்டார வழக்கு, கொச்சை வழக்குச் சொற்களும், வடமொழிச் சொற்களும் அமைந்து விரவி வருகின்றன. தொல்காப்பியம் கூறும்,

''இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே''

நான்கு வகையான சொற்களும் இந்நூலில் அமைந்து மொழிநடை சிறப்புறுகின்றது.

## இருமுறை வந்த வரிகள்

கதைப் பாடலுக்குரிய தன்மைகளில் முக்கியமான கூறு வந்த அடி களே மீண்டும் மீண்டும் வருவதாகும். மொழிநடை என்று பார்க்கும்

போது இந்நூலிலும் வந்த அடிகளே மீண்டும் வந்து கதைப் பாடலுக்குரிய தனித்தன்மையைப் பெற்றிலங்குகின்றன. இருமுறை வந்த அடிகள் சிலவற்றை இங்குக் காண்போம்.

'மன்னவனும் மெத்த மயங்கி யலறிடுவான்' (214, 225)
'மாங்கனியும் தேங்கனியும் வரிக்கைப் பலாச்சுளையும்' (219, 319, 781)
'பாலும் பழமும் பலகனியுந் தேன்பாகும்' (411, 1502)

## புதுமை வழக்கு

இந்நூலின் ஆசிரியர் கதை சொல்லி வருகிறபோது, 'கன்னி' என்ற சொல்லைத் திருமணமான பெண்ணிற்கு இட்டு வழங்குகிறார். 'கன்னி' என்ற சொல்லானது திருமணமாகாத பெண்ணை மட்டுமே குறிக்கும். ஆனால் ஆசிரியர் மன்னனின் மனைவியைப் பலவிடங்களில் 'கன்னி' என்றே குறிப்பிட்டுள்ளார். அவ்வாறே 'மகனை' 'தம்பி' என்று கூறுகின்றார்.

## ஒப்பாய்வு

### சனீஸ்வர நாடகம்

### புதுவூர்ச் சக்கரவர்த்தியம்மானை

'சனீஸ்வர நாடகம்' என்பது தென்னாற்காடு திருச்சி மாவட்டங்களில் நடிக்கப்பெற்று வரும் தெருக் கூத்தாகும். இந்நாடகம் 'நொண்டிச் சக்கரவர்த்தி நாடகம்' என்றும் மக்களால் வழங்கப் பெறுகிறது. இந்நாடகத்தின் கதைக் கருவானது 'புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை'யின் கதைக் கருவை ஒட்டியே அமைந்துள்ளது. எனவே இந்த இரு கதைப் பாடல்களின் ஒற்றுமை வேற்றுமைகளை இங்கு ஆய்வோமாக.

### சனீஸ்வர நாடகத்தின் கதை மாந்தர்கள்

கதைத் தலைவன் தர்மாபுரி பட்டணத்து அரசன் சகஸ்தீப சக்கரவர்த்தி. மனைவி பெயர் 'பஞ்ச லெட்சண கந்தை'. மைந்தர்கள் பெயர்கள் சூரதேவன், சுக்கிரதேவன். கேகேய தேசமன்னன் சந்திரராயன், சாமான்யபுரபட்டண அரசன் சத்துருசேனன், விந்தய நகர்பட்டண அரசன் சத்துரு சங்கார மகாராசன், அம்மன்னனின் மகள் 'அன்னவுதனை', விந்தயநகர் பட்டணத்து இடைச்சியர்கள் கங்கை, காவேரி, நந்தவன தர்மதாசர்.

## புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானையின் கதை மாந்தர்கள்

புதுவூர் நாட்டு மன்னன் புதுவூர்ச் சக்கரவர்த்தி, மனைவி, இரு மைந்தர்கள், அருளாளன், வேடன், நவகோடி செட்டி, விறகு வெட்டி, அவன் மனைவி, ஆளையூர் மன்னன், மனைவி, மகள், பண்டாரம், இடையர்கள், தலையாரி.

## ஒப்பீடு

சனீஸ்வர நாடகத்தில் கதை மாந்தர்களின் பெயர்களும், நாடுகளும் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன. ஆனால் புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானையில் பெயர் பற்றிய குறிப்பும், நாடுகள் பற்றிய குறிப்பும் குறிப்பிடப்பெறவில்லை. இரு கதைகளும் கற்பனைப் பெயர்களே; ஊர்களே தான். என்றாலும் சனீஸ்வர நாடகத்தில் கதை மாந்தர்களின் பெயர்கள் சுட்டப்பெறுவதால் சிறப்புற்று அமைகிறது.

## கதை — நாடகம் — செய்தி ஒப்பீடு

இரு கதைகளிலும் மன்னனைக் 'கலி' பற்றும் செய்தி ஒன்றாகவே கூறப்பட்டுள்ளது. மன்னன் நாட்டைவிட்டு, காட்டிற்குச் செல்லுதல் இரு கதைகளிலும் ஒன்றே என்றாலும் சனீஸ்வர நாடகத்தில் மாற்றரசனிடம் போரிடாமல் மன்னன் செல்கிறான். புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானையிலோ மன்னன் மாற்றரசனுடன் போரிட்டு, தோற்றுப் பின் காட்டிற்குச் செல்கிறான். காட்டில் சென்றுகொண்டிருக்கும்போது 'கலிபுருடன்' வேடனுருவில் வந்து பொருட்களைப் பறித்துச் செல்லுதல் ஒன்றாகவே அமைந்துள்ளது.

### நாடகம்

மன்னன் மனைவி மைந்தர்களுடன் ஓர் பட்டணம் சென்று தங்குவது இரு கதைகளிலும் ஒன்றாக அமைந்தாலும் சனீஸ்வர நாடகக் கதையில் ஆசாரி. குடும்பத்தினர் மன்னனுக்கு ஆதரவு தந்து உதவுகின்றனர். ஆனால் அம்மானைக் கதையிலோ நவகோடி செட்டி என்ற வணிகன் ஒருவன் மன்னனுக்கு ஆதரவு கொடுக்கின்றான். ஆசாரி குடும்பத்தினர் நற்குணத்தைப் பெற்றவர்கள்; ஆனால் செட்டியோ பிறன்மனை நயத்தலைப் பேணுபவன்.

சனீஸ்வர நாடகத்தில் அரசனின் மனைவியைச் சத்துருசேனன் எனும் அரசன் கவர்ந்து மனையாள முனைகின்றான். அவளோ தனது

கற்பின் வலிமையால் சொர்ணகுண்டமாக மாறி, தனது கணவன் கை பட்டால் மட்டுமே தான் வெளிவர வேண்டும் என்றும் இறைவனை வேண்டி தன்னைக் காத்துக் கொள்கின்றாள். ஆனால் புதுவூர்ச் சக்கர வர்த்தி அம்மானையிலோ ஆதரவு கொடுத்த செட்டியே மன்னனின் மனைவியை அடைய விரும்புகிறான். மன்னன் தனது மைந்தர்களைப் பிரிந்து ஆற்றில் அடித்துச் செல்லப்படுகிறான். அரசியானவள் மன்னன், மைந்தர்களின் வரவு காணாமல் வருந்த, திருமகள் கனவில் தோன்றி பதினான்கு ஆண்டுகள் கழித்து கணவனுடன் ஒன்றாக சேர்வீர்கள் என்று கூறி மறைகிறது.

அரசி செட்டியிடம் தான் பதினான்கு ஆண்டுகள் விரதம் இருப்ப தாகவும், அதற்கிடையில் கணவன் வரவில்லையெனில் உன்னை மணம் செய்து கொள்கிறேன் என்று கூறுகிறாள். இவ்வாறு இந்தப் பகுதியில் மட்டும் இரு கதைகளும் சிறிது வேறுபட்டு அமைகின்றன.

### விறகு

மேலும் மன்னன் விறகு கட்டிப் பிழைக்கும் செய்தி புதுவூர்ச் சக்கர வர்த்தி அம்மானையில் மட்டும் உள்ளது. நாடகக் கதையில் இச்செய்தி இல்லை.

### கலி

கலிபுருடன் மாற்றுருவில் வந்து மன்னனுக்கு யோசனை கூறி மைந்தர்களை இருகரையிலும் கட்டுவித்து மன்னன் ஆற்றில் அடித்துச் செல்லப்படுதல் ஆகிய செய்தி இருகதைகளிலும் ஒன்றாகவே அமைந் துள்ளன.

### மைந்தர்

மைந்தர்கள் காப்பாற்றப்படுவது உண்மைதான். ஆனால் அம்மைந் தர்களை. எடுத்துச் சென்று காப்பாற்றுபவர்கள் வேறாக அமைகிறது. சனீஸ்வர நாடகக் கதையில் மைந்தர்களைக் காவேரி, கங்கை என்ற இடைச்சியர்கள் இருவர் அழைத்துச் சென்று வளர்த்து வருகின்றனர். ஆனால் அம்மானைக் கதையிலோ இடையர்கள் அழைத்துச் சென்று வளர்ப்பதாக வருகின்றது.

### காப்பாற்றுதல்

ஆற்றில் அடித்துச் செல்லப்பட்ட மன்னன் கரையில் ஒதுக்கப்பட்டு ஒருவரால் காப்பாற்றப்படுவது ஒன்றே என்றாலும் நாடகக் கதையில்

தர்மதாசர் என்ற பெரியவரால் காப்பாற்றப்படுகிறான். அம்மானைக் கதையிலோ நந்தவனப் பூப்பறிக்கும் பண்டாரம் ஒருவரால் காப்பாற்றப் படுகின்றான். இரு கதைகளிலும் மன்னன் நந்தவனப் பணி செய்தல் பேசப்படுகின்றது.

## குற்றம்

பட்டணத்து அரசன் மாளிகையில் பொருள் களவு செய்யப்பட்டு, கள்வர்கள் பொருள்களை எடுத்துச் செல்வது இருகதைகளிலும் ஒன்றா கவே அமைந்துள்ளது. ஆனால் பொருள்களை மன்னன்மேல் போட்டு விட்டுச் செல்வதில்தான் வேறுபாடு அமைந்துள்ளது. நாடகக் கதையில், மன்னன் குளிரால் நடுங்குவதைக் கண்ட கள்வர்கள் மனம் இரக்கப் பட்டு, கொண்டு வந்த போர்வையையும், ஒரு முத்து மாலையையும் போர்த்திவிட்டுச் செல்கின்றனர். காவலாளிகள் தவறாக மன்னனைக் கள்வனென்று கருதி மாறுகால் மாறுகை வாங்குகின்றனர். ஆனால் அம்மானைக் கதையிலோ, கள்வர்கள் காவலாளிகளிடமிருந்து தப்பு வதற்காகக் கொண்டு வந்த பொருள்களை மன்னன் அருகில் போட்டு விட்டு மறைந்து விடுகின்றனர். மன்னன் கள்வனென்று எண்ணியும், பின் கள்வர்களுக்கு உதவி செய்வதன் என்னும் பொய்க் குற்றம் சாட்டப்பெற்றுக் கைகாலை இழக்கின்றான்.

## மறுமணம்

அடுத்ததாக மன்னன் முடவனானதும் ஒரு நாட்டின் இளவரசியை மணத்தல் என்ற நிகழ்ச்சி இரு கதைகளிலும் கூறப்பட்டாலும், மணம் செய்கிற முறைதான் வேறாக அமைகின்றது. நாடகக் கதையில், இள வரசியின் சுயம்வரம் நடக்கிறது. வேடிக்கை பார்க்கச் சென்ற மன்னன் கழுத்தில் இளவரசி சுழற்றி எறிந்த மாலை விழுகிறது. இருவரும் கணவன் மனைவியாகின்றனர். சிலநாள் கழித்து சனீஸ்வரனால் கை கால் வழங்கப்படுகிறது. ஆனால் அம்மானைக் கதையிலோ இச்செய்தி முற்றிலும் வேறாக அமைந்துள்ளது. அதாவது மும்மூர்த்திகளிடையே விதி பெரிதா மதி பெரிதா என்ற வாதம் எழ, திருமால் மதிதான் என்று கூற, பிரமன் விதிதான் என்று மறுத்துக் கூற, திருமால் மதி பெரி தென்று காட்ட, செக்கு ஓட்டிப் பிழைத்துக் கொண்டிருந்த முடவனை (மன்னன்) ஒருவருமறியாமல் தூக்கிச் சென்று மறைத்து வா என்று கருடனுக்கு கட்டளையிட கருடனும் அவ்வாறே செய்ய, மன்னன் பசி யால் வருந்த கருடன் ஒரு பெட்டகத்தைத் தூக்கி வந்து மன்னன் முன்

வைத்துச் செல்கிறது. மன்னன் பெட்டகத்தைத் திறக்கிறான். பெட்ட கத்தில் உள்ள இளவரசி மன்னனுக்கு மாலையிடுகிறாள். இருவரும் கணவன் மனைவியாக ஆகின்றனர். இதையறிந்து மும்மூர்த்திகளும் தேவர்களும் வந்து வாழ்த்துகின்றனர். மீண்டும் புதுவூர் நாட்டையாள வரங்கள் தந்து செல்கின்றனர். இவ்வாறு இவ்விடத்தில் கதை வேறு பட்டு அமைகின்றது.

## விதிவலி

செக்கு ஓட்டி பிழைத்தல், தேவர்கள் வருகை, கருடன் செயல், பெட்டகம் இச்செய்திகள் நாடகக் கதையில் இல்லை. விதியின் வலிமையை உணர்த்தவே அம்மானைக் கதையில் இறைப்பாத்திரங்களும் படைக்கப்பட்டுள்ளன. மக்கள் அனைவரும் இறைநம்பிக்கை மிக்கு வாழவேண்டும் என்று ஆசிரியரின் எதிர்பார்ப்பாக இருக்கிறது. இந்த அழுத்தமான எதிர்பார்ப்பு நாடகக் கதையில் அமையப்பெறவில்லை. சனீஸ்வரன் மட்டும் வந்து வரம் வழங்குவதாக மட்டுமே அமைகின்றது.

அடுத்து மன்னனையும் இளையவளையும் கருடன் தூக்கிச் சென்று புதுவூர் அரசை மீண்டும் மீட்டுத் தருகிறது. இச்செய்தி நாடகக் கதையில் வேறாகக் கூறப்பட்டுள்ளது: மன்னன் தன் இளையாளின் தகப்ப னாரின் படை உதவி கொண்டு தனது பட்டணத்திற்குச் சென்று மாற்றர சனை வென்று, துரத்தி மன்னனாகின்றான். இக்கதையில் பின்பகுதி யில் போர் பற்றிய செய்தி வருகிறது.

## சொர்ண குண்டம்

நாடகக் கதையில், தர்மாபுரி அரசன் மீண்டும் அரசு ஏற்றதை அறிந்த சத்துருசேனன் பயந்து சொர்ண குண்டத்தை ஆற்றில் விட்டு விடுகின்றான். ஆற்றில் சொர்ண குண்டம் மிதந்து வருவதைக் கண்ட, வேட்டைக்கு வந்த மைந்தர்களான சூரதேவன், சுக்கிரதேவன் இருவரும் சொர்ண குண்டத்தின் தகதகப்பைக் கண்டு கரையில் ஒதுக்குகின்றனர். இரவானதும் சொர்ண குண்டத்தின் மீது சாய்ந்து களைப்பாறுகின்ற னர். தம்பியும் தானும் உறங்காமல் இருப்பதற்காக, தங்களின் சிறுவயது நிகழ்ச்சியைக் கதையாகத் தம்பிக்கு கூறுகின்றான். சொர்ண குண்டத் தின் உள்ளே இருந்த அரசி அக்கதையைக் கேட்டு, அவ்விரு மக்களும் தனது மைந்தர்களே என்று அறிகின்றாள். விடிந்ததும் மைந்தர்கள் இருவரும் சொர்ண குண்டத்தை அரசனிடம் சேர்ப்பிக்கின்றனர். அரசன் சொர்ண குண்டத்தின் தங்க ஒளியைக் கண்டு அதன் மேல் கையை வைக்கின்றான். சொர்ண குண்டத்திலிருந்து அரசி வெளிப்படு

கின்றாள். அரசன் தனது மனைவி, மக்களை அறிந்து ஒன்றாகச் சேர்கின் றார்கள். இவ்வாறு முடிவு பெறுகின்றது.

ஆனால் அம்மானைக் கதையிலோ, செட்டியினால் கப்பலில் தனி யாக வைக்கப்பெற்ற அரசி, பதினான்காண்டுகள் கழித்து செட்டியின் ஆட்களால் அழைத்து வரப்படுகிறபோது கடலில் புயல் ஏற்பட்டு கப்பல் புதுவூர் நாட்டுக் கரையில் ஒதுங்குகிறது. புதுவூர் அரசன் சேவகர் களாகப் பணியேற்றிருந்த மைந்தர்கள் இருவரும் அரசனின் கட்டளையை யேற்று, தங்கள் நாட்டில் ஒதுக்கப்பட்டிருந்த கப்பலை மீட்டுவர செல் கின்றார்கள். இரவானதும் கப்பலிலேயே இருவரும் தங்குகின்றனர். தம்பியும் தானும் உறங்காமல் கப்பலைப் பாதுகாப்பதற்காகத் தம்பிக்கு தங்களின் சிறுவயது கதையைக் கூறுகின்றான். கப்பலுக்குள் இருந்த அரசி அவ்விரு மக்களும் தனது மைந்தர்களே என்று அறிந்து தன்னை வெளிப்படுத்துகின்றாள். மூவரும் மன்னனிடம் வந்து சேர்கின்றனர். மன்னன் தனது மனைவி மக்களுடனும், இளையாளுடனும் நாட்டை ஆளுகின்றான். இவ்வாறாக கதை முடிவு பெறுகின்றது.

## முடிவு

இரு கதைகளிலும் முடிவு ஒன்றாக அமைந்திருந்தாலும், கதையை மாற்றிச் சொல்லும் முறைதான் வேறுபட்டு அமைந்து காணப்படுகிறது. மேலும் நாடகக் கதையில், தனது மனைவியை விரும்பிய சத்துரு சேனனை மன்னன் விலங்கிட்டு அழைத்து வந்து தனது பட்டணத்தில் சிறை வைக்கின்றான். முன்பு தங்களுக்கு உதவி செய்த ஆசாரி குடும்பத் தினருக்கு நிலம் பல வழங்கி சிறப்பிக்கின்றான். தனது மைந்தர்களை வளர்த்து ஆளாக்கிய இடைச்சியர்களான கங்கை, காவேரியை அழைத்து வந்து அவர்களுக்கு தங்களது மகனால் ஈமைக்கிரியை செய்ய தங்க ளுடன் இருத்திக் கொண்டனர். இவ்வாறு தங்களுக்கு உதவிபுரிந்தவர் களுக்கு நன்றி மறவாமல் உதவி செய்கின்றான். கேடு நினைத்தவர்களை அழிக்கின்றான்.

ஆன்லால் அம்மானைக் கதையிலோ தனது மனைவியை விரும்பிய செட்டியை மன்னன் மன்னித்து, செட்டி முன்பு செய்த உதவியை மட்டும் எண்ணி, அவனுக்கு நிறைந்த செல்வங்களை வாரி வழ்ங்கி அனுப்புகின்றான். இதில் பகைவனையும் மன்னிக்கும் பேராண்மை வெளிப்படுகின்றது.

இவ்வாறு இரு கதைகளுமே கதைக் கருவில் ஒன்றாக அமைந்தாலும் ஆசிரியரால் கூறப்படுகின்ற முறைதான் வேறாக அமைந்து காணப்படு கிறது. இரு கதைகளுமே விதியின் வலிமையை வற்புறுத்துகின்றன வாகவே அமைகின்றன. இரு கதைகளுமே மீவியற்கைச் செய்திகளைப் பேசுகின்றன.

## நூல் தரும் பயன்

மனிதகுல மாணிக்கங்களின் சிறந்த எண்ணங்களின் பதிவேடுதான் இலக்கியங்களாகும். சமுதாயமின்றி இலக்கியம் அமையாது. 'சமுதா யத்தைச் சொல்லில் வடித்தளிப்பதே இலக்கியம்' என்பார் அறிஞர் டிபோனால்ட். உலகத்தில் தோன்றிய இலக்கியங்கள் அனைத்தும் தான் எழுந்த காலத்து இருந்த சமுதாய சூழ்நிலைகளைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. இலக்கியங்களும் சமயங்களும் மனிதனை நெறிப்படுத் தவே எழுந்தன.

மனிதன் தான் தோன்றியபோது இயற்கைப் பொருள்களைப் பார்க் கின்றான்; தன்னையொத்த உயிரினங்களையும் பார்க்கின்றான். தனக்கு துன்பம் ஏற்படுவதிலிருந்து தன்னைத் தற்காத்துக் கொள்ள சிந்தனை செய்கின்றான்; கற்பனை விரிகின்றது. அக் கற்பனையின் நீண்ட வளர்ச்சி தான் நாம் இன்று காணும் அறிவியல் வளர்ச்சிகள் அனைத்தும். எனவே கற்பனை, மனிதனின் செயல்பாடுகள் ஒவ்வொன்றிலும் அமைந்து விளங்குகிறது. அவ்வகையில் மனிதன் தான் படைத்த இலக் கியங்களிலும் கற்பனையைப் பதிவுசெய்யத் தவறவில்லை. மனிதன் தான் நினைப்பதைக் கற்பனையால் படைத்து அதன் வழியாக திருப்திப் பட்டுக் கொள்கிறான். கற்பனையின்றியும் இலக்கியம் சிறக்காது; எனவே இலக்கியப் படைப்பாளிகள் கற்பனைகளைத் தங்களின் படைப் புகளில் பதியச் செய்துள்ளனர்.

இந்நூலானது ஆசிரியரின் கற்பனைத் திறனால் படைக்கப்பட்டதே என்றாலும் சமுதாய சிந்தனைகளையும், செய்திகளையும் தாங்கி வந் துள்ளது என்பதை மறுக்க முடியாது. இந்நூலில் மீவியற்கைச் செய்தி கள் கூறப்பட்ட போதிலும், மக்களின் நன்மைக்காகவே படைக்கப்பட்டு உள்ளதை நாம் காண முடிகின்றது. நல்லதும் தீயதும் கலந்ததுதான் மனித வாழ்க்கை; என்றாலும் தீயதை வேண்டுமென்றே மனிதன் செய்தல் கூடாது என்றும், மனிதப் பண்பு மாண்புடையது அதை ஒவ்வொரு வரும் பேண வேண்டும் என்றும் எடுத்துரைக்கின்றது. இறைவனிட்ட எழுத்தைப் பொறுத்தே ஒவ்வொருவரின் வாழ்க்கையும் அமைகிறது;

எனவே இறை நம்பிக்கை மிக்கு மக்கள் வாழ வேண்டும் என்றும் வற்புறுத்துகின்றது.

ஆண், பெண் இரு மாந்தர்களின் ஒழுக்கங்கள் பேணப்பட வேண் டும் என்றும் வலியுறுத்துகின்றது. இதுபோன்று மக்கள் வாழ்க்கையில் பின்பற்றக்கூடிய ஒழுகலாறுகள் பல சுட்டப்பெறுகின்றன. இந்நூலை இன்னும் ஊன்றிப் படித்து அகழ்ந்து காணின் இதன் இலக்கிய இன்ப மும், மக்கள் வழக்குப் பண்பாடுகளும், புலப்படாத அரிய உண்மை களும் அறியக் கிடைக்கும் என்று கூறலாம்.

# புதுவூர்ச் சக்கரவர்த்தி அம்மானை

## காப்பு

அம்மானை பாட அருள்கொடுப்பாய் நாயகனே
பெம்மான் சிவனே பெரிய பெருமாளே
அடியார்க் கெளியானே ஆதிபர மேசுரனே
வடகயிலை வீற்றிருக்கும் மானேந்தி முன்னடவாய்
நான்முகனே அந்தணனே நாதனே முன்னடவாய்
தேனருளு மிந்திரனே தேவர்கள் நாயகனே
முப்பத்து முக்கோடி தேவர் முனிவர்களும்
நாற்பத்து நாற்கோடி நல்ல ரிஷிகளும்
கற்பகநாட் டிந்திரனுங் காரணவ ரெல்லோரும்
விற்பிடித்த காரணனார் வேதநா ராயணனும்
ஆனை முகத்தோனு மாறுமுக வேலவனும்
பானுமுதல் நவக்கிரகம் பன்னிரெண்டு ராசிகளும்
நாலாறு மூன்றுடைய நற்சேத்தி ராதிகளும்
பாலா றுடையானாள் சரசோதி பாக்கியத்தால்
வடநூலி லேபயின்ற மன்னன் புதுவூரான்
அடவுடனே அவர்கதையை யம்மானை பாடுதற்கு
வெள்ளைப் பணிபூண்ட வேதியே முன்னடைவாய்
வள்ளல் வினாயகனே மயிலேறி முன்னடவாய்

## அவையடக்கம்

அத்தாணி நல்லூ ரழகா புரிதனிலே
மத்த கெசத்தைக் காத்தருளும் மாயவனார்
ஆதிமூ லப்பொருளுக் கடியேன் அடிமைகண்டீர்
நீதியுடன் தமிழை நேரே யுரைக்கறியேன்
ஆனைகாத்த பெருமாள் அடியேன் திருநாமம்
கானகத்தில் வாழுங் கார்கோ டகனோடே
மானிலத்தில் மண்ணூழியன் படமெடுக்கு மவாறதுபோல்
கான மயிலோடே காகமுரை செய்வதுபோல்
உரைக்கி றேன்அடியேன் ஓதும் புலவோரே
சரியோயி தல்லவென்று தள்ளாமல் காத்தருள்வீர்

நல்லமொழி யென்றாலும் நல்லதல்ல வென்றாலும்
அல்லாத திந்தமொழி யென்றாலும் ஆதரிப்பீர்

புலவர் திருப்பாதம் போற்றி மிகவணங்கி
தலைமேலே கொண்டருள்வேன் தமிழோர் திருப்பாதம்
குற்ற மிருந்தாலுங் குறையென்று தள்ளாமல்
சித்தமுட னம்மானை சிறப்புடனே கொண்டருள்வீர்

## நுவல்பொருள்

ராசாதி ராசன் ராச குலப்பெருமாள்

தேசம் புகழ்புதுவூர் சீமைக்கு மன்னவனார்
சந்திரகுல வங்கிஷத்தான் புதுவூரில் சக்கரவர்த்தி
சிந்தை மகிழ்ந்து செகதலத்தில் வீற்றிருந்து
நீதி யுடனரசு நெறிமுறைமை தப்பாமல்
ஆதி மனுநீதி தவறாமலர சாளுமன்னன்

கலியன வட்சையினால் நாடிழந்து காடதுபோய்
சிலநா ளலைந்துதுயர் தேறாம லப்பாலும்
வேறு கூறாக வெகுநாள் பிரிந்தகதை
கூறுகிறே னானடியேன் குமரனே முன்னடவாய்
பத்தியுட னிக்கதையைப் பலபேருங் கேட்டருள்வீர்

சித்த மகிழ்ந்து சிறப்பாகக் கொண்டருள்வீர்
புதுவூர் வளநாட்டுப் புதுமையுரைக் கக்கேளீர்
திருவூரு நாட்டுவளஞ் செப்புகிறே னம்மானை

## புதுவூர் நாட்டுச் சிறப்பு

நாடு புதுவூரு நன்னகரம் பொன்னாட்டில்
ஓடி வருமேக முள்ளதெல் லாந்திரண்டு

## விருத்தம்

நன்னகர மாம்புதுவூர்
நாட்டில்புதுமை உரைக்கக்கேள்
அந்நகரில் மாரிபொழிந்
தாறுவெள்ளந் தான்ஓடி

வன்னமுள்ள ஏரிகுளம்
வாய்க்கா லணைகளெல்லாம்
பொன்னுலகில் வெள்ளம்வந்த
புதுமைகளைக் கேட்டருள்வீர்

## நடை

வெள்ளி நிறமாக் மேகமெல்லாந் தான்திரண்டு
பள்ளிகொள்ளும் மாயனந்தப் பாற்கடலி னடுவோடி
வாரியுண்டு நீரையெல்லாம் வான்மேகம் தானெழும்பி
காரி நிறமாய்க் கரியசெம்மல் தன்னிறமாய்
நீல நிறமாய் நெடுவரையைத் தான்தேடி
வால யிளங்கன்னி மணம்புணர்ந்த வந்நாளில்

ஆர முடன்குழவி யவதரிக்கும் அப்போது
சீருடை யாள்மேனி திரண்டுருவம் வேறாகி
கொங்கை முகங்கறுத்துக் கொவ்வை யிதழ்சிவந்து
தங்கை யுடமேனி தளதளென்ற வாறதுபோல்
மலைகள் தனைநாடி வான்மேகந் தான்சூழ்ந்து

உலகந் தழைக்கவென்று ஒருமித்தே தான்பொழிந்து
காடு மலையுங் கனக்கவே தான்பொழிந்து
நாடெல்லாம் வெள்ளம் நாடிப் பரந்ததுவே
வெள்ளஞ் சினந்தெழும்பி மிகவே வரும்போது
பள்ளமும் மேடும் பலநிலமும் ஒன்றாக

மாணிக்கம் பச்சை வயிரமுடன் நல்ல
ஆணிப் பொன்றங்கம் அம்மலையி லுள்ளதெல்லாம்
வாரி யெடுத்துவெள்ளம் மலைவிட்டுத் தானிறக்கி
பாரில் மனிதர் பலபேருந் தான்பிழைக்க
ஓடிப் பரந்துவெள்ளம் உலகமெல்லாம் பாய்ந்ததுவே

நாடு தழைக்கவென்று நல்லபுது வூரரசன்
ஆறுங் குளமும் அணைகளும் ஏரிகளும்
பேறுபெற நன்றாய்ப் பெருகிப் பாய்ந்ததுவே
வாழை கரும்பிடுவார் வாய்த்தசெந்நெல் தானிடுவார்
வேளை யறிந்துமங்கே வேண்டும் பயிரிடுவார்

கதலிக் குலைபழுக்கக் கரும்புமுத்துத் தானீன
மதகரியின் கொம்புதனில் வகையுடனே முத்தீன
கன்னல் சென்னெல்முத்துக் கலந்துமிகத் தான்பொறுக்கி
மன்னர்வள நாட்டிலுள்ளோர் மங்கை யிடஞ்சேர்ப்பார்
தங்கப் பணிதனிலே தானேமிகப் பதிப்பார்

கொங்கைக் கிசைய யிடுவார் குயில்மொழியார்
சாந்து புனுகுஞ் சவ்வாது மிகவணிவார்
ஏந்து தனத்துக் கிசையப் பணியிடுவார்
நாட்டு வளமுழுதும் நானுரைக்க வல்லவனோ
வாட்ட மில்லாத வளமைதனை யுரைப்பேன்

**விருத்தம்**

மனுநீதி தவறாத மன்னன் புதுவூரில்
அனுதினமுஞ் சிவபூசை யாகமங்கள் நிறைவேற
கனமுடையா னாறிலொரு கடமைகளும் நீதிகளும்
தினமுமொரு குறையறவே செல்வமதைச் செப்புவேனே

## ஆட்சி முறை

**நடை**

வளரும் புதுவூரான் மன்னனுட நீதியெல்லாம்
களப முடனிதனைக் கட்டுரைப்பே னம்மானை
மனுநீதி தவறாத மன்னன்புது வூரரசன்
அணுவாகி லும்நீதி யகலநட வாதமன்னன்
ஆறி லொருகடமை யசையா மணிபூட்டி
மாறா தவர்கதை வளமைசெய்யு மன்னவனார்

தேவசி வாலயங்கள் சிறப்பாக வேநடந்தும்
ஆவலொன்று மில்லாத வந்தணற்கு மாரியொன்று
சாதி யினமறிந்து சங்கையுட னேநடந்து
வேதகுல சாத்திரங்கள் விதம்விதமாய்த் தான்விளங்கும்
நித்தியமு மாகமங்கள் நிமலனார் தன்பூசை

சத்தியமாய்த் தப்பாமல் தானே நடந்துவரும்
திங்கள் மும்மாரி சிறப்பாய் நடந்துவரும்

## மகளிர் நிலை

மங்கையிளங் கன்னியர்கள் மதகரிகள் தான்பூண்டு
தங்கப் பணியணிவார் சாந்துபுனு கணிவார்
காதுக் கிசையக் கனத்தபணி தானிடுவார்
கோதைக் குழலார் மாணிக்கக் கொப்பிடுவார்
தங்க வளையணிவார் சவரங்கள் தான்முடிப்பார்
மங்கக் கிசைய வகையாய்ப் ,பணியிடுவார்
பாடகங்கள் தண்டை பலவகையுந் தானிடுவார்
ஆடை யுடுப்பார் அரைஞாணுந் தானிடுவார்
கொங்கைக் கிசைந்த தங்கப் பணியிடுவார்
மங்கையர்க்குக் காமன் மடலெடுப்பா னம்மானை
மத்த கெசத்துடனே வாதாட வாருமென்பார்
குத்துவேன் அந்தக் கொம்பாலே யென்றுரைப்பார்
ஆடவரைக் கண்டால் ஆவலுடன் தான்தொடர்வார்
பாடவரைக் கண்டால் பார்த்து மயங்கிடுவார்
தந்தைதாய் மெத்தச் சகோதரங்க ளுள்ளவர்கள்
கந்த மலர்க்குழலே காரிகையே பெண்கொடியே
கண்டவர்கள் தன்னுடனே கலவிக் கிசைவார்களோ
வண்டணியும் பூங்கூந்தல் மயிலேநீர் வாருமென்பார்
என்ற மொழிப்படியே யில்லிடங்கள் சேர்ந்திடுவார்
நன்றெனவே யின்னம் நகரச் சிறப்புரைப்பேன்

## நகரச் சிறப்பு

இல்லடங்கள் தோறும் ஈசனார் தன்பூசை
சொல்லொன்றுந் தப்பாமல் சோர்வொன்றும் வாராமல்
அஞ்செழுத்து மெட்டெழுத்து மன்பத்தோ ரட்சரமும்
பஞ்சாட் சரமுறையும் பாங்குடனே தானடக்கும்
பருவமுட னெல்லோரும் பாக்கியத்தில் கொஞ்சமில்லை
மருவு குழலாரும் மங்கையரு மப்படியே
எல்லோருஞ் செல்வம் இருப்பார் குபேரனைப்போல்
அல்லல் படுவார்கள் ஆருமில்லை அந்நாட்டில்
அய்யமென்று சொல்லிடுவார் ஆருமில்லை அந்நாட்டில்
பொய்யொன் றறியார் புவியில் களவறியார்
அந்நாட்டி லுள்ளவள மானதுவை நானுரைத்தேன்
மன்னர் கொலுவிருக்கும் வளமைதனை நானுரைப்பேன்

## அரண்மனைச் சிறப்பு

இன்ன முரைக்கிறேன் இன்பமுடன் நீர்கேளீர்
மன்னருட கோலில்கால் வளமை யதுகேளீர்
வெள்ளித்தூ ணாட்டி வெங்கலத்தால் வாசலிட்டு
பள்ளி யறைதனக்கும் பவளத்தால் தூணிறுத்தி
தங்க வளைபரப்பித் தகடுவெள்ளி யால்பூட்டி
சங்கையுட னாற்றிங்கள் தானமுத்தி வேலையிட்டு

## மன்னன் கொலுவீற்றிருத்தல்

மங்கையுடன் சக்கரவர்த்தி மைந்த ரிருபேரும்
சங்கையுடன் கொலுவில் தானிருக்கும் அந்நாளில்
ஆனைத் திரள்கோடி யடல்பரிகள் தான்கோடி
சேனைத் திரள்கோடி தேரா யிரமுடனே
மாற்றரசர் மன்னவர்கள் வருவார்க ளாயிரம்பேர்
கொற்றமுள்ள மந்திரிமார் சூழ்ந்திருப்பா ராயிரம்பேர்
சந்திரகுல பதியான் சக்கரவர்த்தி ராசேந்திரன்
சிந்தை கலங்காமல் செகதலத்தில் வீற்றிருந்தான்
கொற்றக் குடைநிழற்ற கொடியிடைக்கந் தானாட
மத்தகத்தில் பேரிகைகள் வகையாக நின்றதிர
ஒட்டகையும் பேரிகையும் ஒருபுறத்தே தான்முழங்க
எட்டுப்பத்து வாத்தியங்கள் இன்பமுடன் தான்முழங்க
சங்கு முழங்குந் தமிழ்முழங்கு மவ்வாசல்
சிங்கேறு போலே கட்டியங்கள் தான்கூற
நாடக சாலை நடனமிட்டுத் தானாட
ஆடவர்கள் கூத்தும் ஆரியர்கள் தன்கூத்தும்
தேவ புராண சிவகதைகள் பாடல்களும்
பூவனங்கள் கொய்து புஷ்பவிதா னங்கள்செய்ய
ஆடவர்கள் நின்று யணியணியாய்த் தான்பாட
பாடவர்கள் சங்கீதம் பலநடன மும்புரிய
சந்திரகுல வங்கிஷபதி சக்கரவர்த்தி ராசேந்திரன்
சிந்தை பெறக்கொலுவில் சிறப்பிருக்கு மந்நாளில்
விதியின முற்படியே வேந்தர்க்குத் தான்கலியன்
பதியிழந்து நாடிழந்து பாலருடன் தேவியுமாய்
வனவாசம் போனகதை வகையுரைப்பே னம்மானை

## விருத்தம்

மன்னரும் மைந்த ரோடு மகிழ்ந்திருந் தரசை யாண்டோன்
தன்னிக ரில்லான் றன்னைக் காகவா கனனே தோன்றி
மன்னனுங் கன்னி யோடு மைந்தரும் பதியை விட்டு
வன்னக ரிழந்து காடு போனது வருள்செய் வேனே

## கலியின் வருகை

### நடை

இந்தப்படி யேயிருந்து அரசாளும் நாளையில்
வந்தான் கொடுங்கலியன் மாயமொடு தந்திரமதாய்
மாற்றரச னிரவிகுல வங்கிஷத்தா னங்கொருவன்
தோற்ற முடனணுகிச் சொல்லுவான் தன்கலியன்
படைசே கரித்துப் பலகோடி தான்கூட்டி
வடயேரு போலே புதுவூரை வளைந்தார்க ளம்மானை

உனக்கு யவன்கோட்டை உற்பனமாய் வாங்கிடுவேன்
வனத்தி லவன்றனைத்தான் வகையாய்த் துரத்திடுவேன்
என்ற மொழிகேட்டு யிரவி குலத்தரசன்
நன்றென்று சொல்லி நல்லபடை சேகரித்து
சிந்தையுடன் வந்து சேர யிறங்கினனே

வந்து வளைந்தான் மாயக் கடல்போலே
இருந்து சில்னா ளெதிராடிப் பார்க்கையிலே
கரிந்த கொடுங்கலியன் காலவினை தன்னாலே
சரிந்துதே தன்படைகள் சத்துருவைத் தான்தேடி

## மன்னன் காடேகுதல்

கண்டானே மன்னன் கலியனுட வல்லமையைத்
தண்டா மரையாள் நம்மைவிட்டுத் தானகன்றாள்
இருந்தால் இளப்பம்வரு மேகிடுவோ மென்றுசொல்லி
குருந்தோடு மங்கையருங் கூட்டியே சேகரித்து
பாதி யிரவு பதினாறு நாழிகையில்
நீதிமுறை மன்னன்சில நிச்சயமுந் தானெடுத்து

கையில் குழந்தைகட்குக் கட்டமுது முண்டுபண்ணி
வையகத்தை விட்டகன்று வனமீதி லேகினனே
மறுநா ளுதயம் வந்ததற்பின் மாற்றரசன்
எரிநாண் கட்டி யியல்பெறவே நால்முகமும்
மன்னவனு மில்லையென்று மாற்றரச னோடுரைத்தார்

அந்நகரில் தம்பியரை யரசுக்குத் தானிருத்தி
ஏகியே போனா னிருக்கும் வளநாட்டில்
தம்பி யரசாளத் தானே யிருந்தனனே

## துன்பம் தொடருதல்

வெம்பி மனதயர்ந்து வெங்கானக் காடுதன்னில்
கதிரோன் உதித்துக் காரிருளாய்ப் போனபின்பு

சதிராக நால்பேரும் தானேகிப் போகையிலே
முன்னமறித் தான்கலியன் மூதேவி வேடனைப்போல்
மன்னரிட முள்ளமுதல் வாங்கிக் கொண்டுபோனான்
அந்நேர மங்கை கதறி விழுந்தழுதாள்
மன்னவனு மெத்த மயங்கி யலறிடுவான்

கையில் பொருள்போச்சே கடியவனம் வந்தோமே
தையலே வையகத்தில் தாபரமுங் காணேனே
என்று சிலதூரம் இப்படியே போகையிலே
நன்றுபசி மெத்தவென்று நம்பிமார் தானழுதார்
தண்ணீர்க் கரைதேடித் தயவாய் மீகநடந்தார்

அந்நேர மங்கயொரு வாவியதைக் கண்டனரே
சட்டமுடன் நீரருகே தானே மிகயிருந்து
கட்டமுதைத் தானவிழ்த்தார் கண்டார் கிருமியதைக்
கொட்டினாள் கீழே கொங்கைதனி லேயிடித்தாள்
இட்டமுடன் தம்பியர்க்கு என்செய்வோம் என்றயர்வாள்

மன்னவனு மெத்த மயங்கி யலறிடுவான்
கன்னி முடிகுலையக் கதறுவா ளந்நேரம்
ஒருவர் முகம்பார்த்து ஒருவர் மயங்கிடுவார்
இருவர் முகந்தனையும் ஏந்திழையாள் பார்த்தழுவாள்
மைந்த ரிருபேரும் வயிறுபசி யாகுதென்பார்

அந்த மொழிகேட்டுக் கதறுவான் மன்னவனும்
ஊருமில்லை நாடுமில்லை ஒருமனிதர் தானுமில்லை
ஆருமற்ற காடுதன்னில் கதறினா லாவதுண்டோ
தம்பியரைத் தோளெடுத்துத் தள்ளி நடந்திடுவோம்
கொம்பனையீ ரங்கேயொரு குடியிருப்புக் காணாதோ
என்றுசொல்லித் தம்பியரை எடுத்து நடந்தனரே
சென்று நடந்து சிலதூரம் போம்பொழுது
அங்கே குடியிருப்பு மவ்வருகே கேணியுமாய்
சங்கையுட நீரங்கே தானேகு மென்றனரே
தம்பி பசிதீர்க்கத் தையலே என்செய்குவோம்
வம்பிலே பிள்ளை மயங்குதே யென்றயர்வாள்
அந்தப் படியே அங்கிருக்கு மந்நேரம்
சிந்தையுடன் வழிப்போவார் சிலபே ரமுதுகொண்டு
கட்டமுதைக் கொள்ளக் கரையருகே வந்திருந்தார்
வந்தவர்க ளெல்லாரும் இவர்மயக்கந் தனைப்பார்த்தார்
எந்தவிதம் நீங்க ளிருந்து புலம்புறது
வந்த வகையும் வரலாறும் சொல்லுமென்றார்
சிந்தை கலங்கிச் செயலழிந்து தான்மெலிந்து
அண்ணலே யெங்க ளவதிசொல்ல மெத்தவுண்டு
கண்ணனா ரிட்டெழுத்தைக் கடக்கவுந்தான் போகாது
கட்டமுது கொண்டுவந்து அங்கோர் கரையடியி லேயிருந்து
இட்டமுட னேஅவிழ்த்தோம் யெல்லாம் புழுவாகிக்
கண்டோ மதுவைக் களைந்துவிட்டு மிப்பாலே
சென்றுபுறப் பட்டுவந்தோம் சீமானே நீர்கேளீர்
நல்லதென்று சொல்லி நால்பேரும் தானிறுத்திக்
கொண்டுவந்த கட்டமுதை நால்வருக்கும் கூடநிரத்தினரே
நன்றியுள்ளார் தானேகி நடந்தார் வழிநோக்கி
மன்னவரும் மங்கையரும் வயிறுபசி தீர்ந்தபின்பு
அன்ன நடையாளு மரசர் குழவியரும்
சத்தே யிருந்து சரிந்துகொண்டா ரம்மானை
மெத்த மயங்கி நித்திரையும் கொண்டனரே
அன்று தரித்திடுவோம் அவ்வனத்தி லென்றிருந்தான்
வண்டார் குழலாளு மன்னரிள மைந்தர்களும்
மெத்த மயக்கமதாய் விதனங்க ளானதெல்லாம்
பத்தி யுடன்கண்டார் பாற்கரனு மப்பொழுது

கண்டாலும் பாவமென்று கடலோடித் தான்புகுந்தான்
கன்ம யிருள்தீர்க்க வந்தனர்காண் சந்திரனார்

## அருளாளன் ஆதரவு

இருள்நீங்கித் தான்வெளியி லிருந்து மயங்கையிலே
அருளுடையா னவ்வூரி லானகுடி மன்னவனார்
அன்புடையான் கண்டு அவர்கள் முகம்நோக்கி
இன்பமுடன் கேட்டா னிருதயத்தி லுள்ளதெல்லாம்
உள்ளபடி செய்தியெல்லா முரைத்தனர்கா ணம்மானை
வள்ள லதுகேட்டு வாய்திறந்தங் கேதுரைப்பான்
அண்ணலே யுங்கள்பசி யாற்றுவிக்க வேணுமென்று
சொன்னபடியே அவனுஞ் சுயமாகக் காய்கறிகள்
பாலோடு நெய்யும் பருப்புமிள குள்ளதெல்லாம்
சீலமுடன் பாத்திரமுஞ் சிறப்பாகத் தான்கொடுத்து
பக்கத்தி லேயிருந்து பருவமிட்டா னம்மானை
ஒக்கச் சமைத்தா ளொருநொடியில் பெண்ணரசி
இட்டமுடன் பசிதீர்ந்தா ரின்பமுடன் நால்பேரும்
சட்டமுடன் வெள்ளிலையு மடைக்காயுந் தான்கொடுத்தான்
சயனயிடம் அமர்த்திச் சரிந்தனர்கா ணம்மானை
வயணமுடன் சிலநா ளங்கிருந்தார் மன்னவனார்
மெத்த யிருந்தாலும் வேம்பாமே யென்றுசொல்லி
புத்தி யுடையானே போய்வாறோம் என்றுசொல்லி
சிறப்பாய்ப் புறப்பட்டார் மற்றோர் திசைநோக்கி

### காட்டில் துன்புறுதல்

குறப்பாலர் சஞ்சரிக்குங் கொடிய வனந்தனிலே
தப்பி வழிப்பிசகித் தடம்விட்டுத் தட்டழிந்தார்
சர்ப்பத்தின் வாயில் தவகளைபோல் தட்டழிந்தார்
பாதங்க ளெல்லாம் படர்ந்தமுள்ளுப் பாய்ந்திடவே
காதவழி தூரவழி கடுங்கானல் நீருமில்லை
கன்றிழந்த மாடதுபோல் கதறவே தம்பியர்கள்
தண்ணீரிழந்த பயிர்போல் தட்டழிந்தார் நால்பேரும்
பிள்ளை முகம்பார்த்துப் பேதலித்து நின்றயர்வார்
வள்ள லிளவரசே வளர்ந்த வள்மையெல்லாம்

கான மிருகங் கடுவாய்க்கோ நான்வளர்த்தேன்
ஆனை கரடிபுலி சஞ்சரிக்கு மக்காட்டில்
நீரற்ற காடுதன்னில் நின்று மயங்குவனோ
ஆரற்றார் சீரற்றார் ராருமற்றா ரானோமே
மனுநீதி தப்பி வன்கொடுமை செய்ததுண்டோ
இனமா யிருந்தோரை யிடுக்கங்கள் செய்ததுண்டோ
கொள்ளா யிறைகூட்டிக் கொடும்பாவஞ் செய்ததுண்டோ
வள்ளலே யிந்தவிதி வந்ததென்ன என்றயர்வாள்
அப்போது மன்னவனும் கதறி மிகவயர்வார்
செப்பமுடன் மனதறியச் செய்தபிழை யொன்றுமில்லை

முன்செய்த கற்பினையோ மூதாக்கள் செய்வினையோ
பின்புள்ளார் முன்புள்ளார் பெருக்கவினை செய்ததுண்டோ
எந்த விதமோ யியலறியே னென்றயர்வார்
மைந்தர் முகங்கண்டு மெத்த மயங்கிடுவார்
குழவிக ளில்லையென்று கோவில்மடங் கட்டினதும்

அளவில்லாக் கோதான மாகமங்கள் செய்ததுவும்
தேவசி வாலயங்கள் சிறப்பாய் நடத்தினதும்
மூவ ரடிதொழுது முகமிரங்கித் தந்ததுவும்
கன்னிகா தானங் கருத்தாய்க் கொடுத்ததுவும்
நன்னகரம் பங்குமனை நட்பாய்க் கொடுத்ததுவும்
மெத்தத் தவம்புரிந்து விமலனார் தன்னருளால்
சித்த முடன்தந்தார் சிறப்பாய் வளர்த்தோமே
பாலு மணந்தாரைச் சிறப்பாய் வளர்த்தோமே
ஆலமுண் டரர்கால மமுர்தங் கடைந்ததுவும்
மாங்கனியுந் தேங்கனியும் வரிக்கைப் பலாச்சுளையும்
பாங்குடனே தான்கொடுத்துப் பரிவாய் வளர்த்தோமே
பூமி தனில்நடந்தால் பொற்பாதம் நோகுமென்று
ஆமென்ற பொற்சிவிகை யதிலே வளர்த்தோமே
மானிடவர் சஞ்சார மில்லா வனந்தனிலே
தானே நடந்துவரத் தள்ளாடி முள்ளடிக்க

பாதஞ் சிவந்துவரப் பலமுள்ளுத் தானடிக்க
ஆதார மின்றி யருநிழலுங் காணாமல்
தண்ணீர்த் துறையுந் தாவரமு மில்லாமல்
கண்ணெதிரே மானிடவர் கண்டுமனந் தேராமல்
நின்று மயங்கி நெடுமூச்சுத் தானெறிந்து

கண்ணு நீரோடக் கதறினார் நால்பேரும்
அரனே சிவனே அருகுபர மேசுரனே
பரனே சிவகதியே பஞ்சாட் சரமுடையீர்
கயிலைக் கரசனே கர்த்தனே போற்றியென்பார்
அயனே திருமாலே யந்தணனே போற்றியென்பார்

வையகமெல் லாமுண்ட மாயோனே போற்றியென்பார்
செய்ய கமலத் திருமகளே போற்றியென்பார்
இந்திரனே சந்திரனே யிறையோனே போற்றியென்பார்
சுந்தரனே தேவர்களே சூரியனே போற்றியென்பார்
நகரி பதியிழந்தோம் நாடுவிட்டுக் காடுறைந்தோம்

நிகரற்ற பொல்லாத நெட்டூரக் காடுதன்னில்
நால்பே ருயிர்தனையும் நமனாருங் கொண்டேக
காலக் கொடுங்கலியன் கற்பித்த வாறிதுவோ
என்று மயங்கி யிருக்குமந்த வேளையிலே

## வேடன் வருகை

குன்றுதனி லேயிருந்து கொடும்பாவி வேடனவன்
கச்சைக்கட்டி வில்லெடுத்துக் கையம்பும் வேல்மழுவும்
அச்சமற வேயெழுந்து ஆர்ப்பரித்துக் காடுதனில்
கண்டவரைக் கொன்றிடுவான் கைமுதலைத் தான்பறிப்பான்
கொன்றிடு வான்மிருகந் தின்றிடுவான் பச்சையதாய்
சண்டாளன் பொல்லான் சற்று மிரக்கமில்லான்

இன்றைவரை கொன்ற கொலையெவ்வளவோ திட்டமில்லை
காட்டு மிருகமதைக் கண்டதுவைத் தப்பவொட்டான்
ஆட்டைப் புலியொடுக்கு மவ்வாறு போல்திரிவான்
வாரானே வேடன் வயிறுபசி வேகமதாய்
தேறாமல் கண்டு திடுக்கமுற்றார் நால்பேரும்

கண்டார்கள் வேடன் கடுவேகம் வாறதுவை
இன்றிறந்தோம் நால்பேரு மென்று மயங்கிடுவார்
காலயர்ந்து மெய்சோர்ந்து கண்மயங்கி நின்றிடுவார்
வேலெடுத்த கையுடையான் வேடவைன் கிட்டவந்தான்
நால்பேரும் நின்று நடுங்கிறதைத் தாம்(கண்டு)

கோலமுட நாமவரைக் கொள்ளையிட்டோ மானாலும்
நாலிரண்டு காசுபணம் நற்புடவை கிட்டாது
பால னிவர்களைத்தான் பதைத்தால் கதையுமில்லை
என்று மனதிறங்கி யின்பமுள்ள வேடனவன்
நன்றுதான் மானிடரே சென்றுமிங்கே ஏதுவந்தீர்

மானிடவர் சஞ்சார மில்லா வனந்தனிலே
ஏனய்யா வந்தவகை யின்பமுடன் சொல்லுமென்றான்
அப்போது மன்னவனார் அவன்முகத்தைத் தானோக்கி
தப்பாமல் நீயெனக்குத் தாயகமாய் வந்தீரே
செப்புகிறே னென்னுடைய செய்திகளைக் கேளுமென்றார்

அப்படியே சொல்லுமென்று ஆதரவாய்த் தானிருந்தான்
நாட்டி லிருந்தோம் நாமுமொரு கூட்டுறவாய்
வாட்டமுட னானிருந்த வளர்பதியைத் தானிழக்க
ஓட்டிவிட் டான்கலிய னொருபொழுது தங்காமல்
காட்டிலே வந்தேன் கடுந்தூ ரம் வந்தபின்பு

நீரருகே கட்டமுதை நின்றவிழ்த்துப் பார்க்கையிலே
ஆர முடன்கிருமி யாவதினால் தானெறிந்தேன்
சிந்தை கலங்கித் தியங்கிவரும் வேளையிலே
வந்தனைப்போல் கண்டமன்ன னூரருகே கூட்டிவந்தான்
ஆதரித் தான்சிலநா ளங்கே யிருப்பார்களோ

போதுமென்று சொல்லிப் புறப்பட்டோ மிப்பாலே
வந்தோம் நெடுந்தூரம் வழிதடமுந் தப்பவிட்டோம்
எந்தவிதம் நாமறிவோம் இடம்வலமுங் காணாமல்
நின்று மயங்கையிலே நீயொருவன் கண்டோயே
என்றுசொல்லி மன்னவனு மின்பமுள்ள வேடனுடன்

மாதாவா யிங்கே வந்தனையே வேடனண்ணே
ஆதரவு சொல்லி யப்பாலோர் பட்டணத்தே
சேகரித்து விட்டாயால் திருவளமாய் நாம்பிழைப்போம்
ஆகமுடன் சொன்னதற்கு அவ்வேட னேதுரைப்பான்

## வேடன் ஆதரவு

பட்டணமுங் கிட்டயில்லை பாரவழி தூரமென்பான்
தட்டழிந்த நால்பேரும் தாங்கி நடப்பீரோ
மன்னவனே யென்வலசை தூரவழி தானுமில்லை
தென்னவனே யென்மனையாள் பெண்துணையு மங்கேயுண்டு
நல்லதுதான் மன்னவனே நாம்வாறோ மென்றுரைத்தார்
வல்லவரே வாருமென்று வழிமுன்னே தான்நடந்தான்

இன்றிருந்து நாளையும்மை யேகிடுவோம் பட்டணத்தே
நன்றென்று கூட நடந்தனர்கா ணம்மானை
கூட்டி நடந்தான் குன்றருகே வாடியிலே
வாட்டமில் லான்சென்று மனையாகுக் குரைத்தனனே
அப்பா லொருகுச் சதுதனையுந் தானளித்து

செப்பமுடன் பாத்திரமுஞ் சிறப்பாகத் தான்கொடுத்து
தேனுந் தினைமாவுஞ் சேகரமாய்க் காய்கறியும்
கானகத்தி லுள்ள சனிபல மாங்கனியும்
வேண வகையெல்லாம் விபரமாய்த் தான்கொடுத்தான்
காண வினிய கனிகளெல்லாங் கண்டோமே

வேடனுட பெண்கொடியு மெத்த யிரக்கமுள்ளாள்
கூட இருந்துபின்பு கூடிப் பிரிந்தவர்போல்
மன்னனுட தேவியர்க்கு வாய்த்த துணையானாள்
தன்னுடனே தான்பிறந்த தங்கை தமக்கைகள்போல்
குழவிகளுக் கேத்தகனி கொண்டுவந்து தான்கொடுப்பாள்

அளவில்லா வன்னகர மாண்டிருக்கும் நாளையிலே
பாலும் பழமும பலகனியுந் தேன்பாகும்
கோலமுட னிதுக்கு வாரா ததுகுறையும்
வண்டார் குழலாரும் மன்னவரும் தம்பியரும்
கண்டிருந்தார் எல்லாங் கண்கள் பூரித்திடவே

அங்குஞ் சிலநா ளப்படியே தானிருந்தார்
சங்கையல்ல யிங்கிருக்கத் தரணியிலே போகவென்று
பார வுனத்தரசே பட்டணத்தில் சேருமென்றார்
சீருடைய மன்னவனே தேவியரு மைந்தருமாய்
இன்னஞ் சிலநா ளிருமென் றுபசரித்தான்

நன்னகரஞ் சேராமல் நாமிருக்க நீதியல்ல
என்ற மொழிகேட்டு யியல்புடைய வேடனவன்
நன்றென்று கூட்டி நடந்தானே பட்டணத்தே
பட்டணமுங் காட்டிப் பரமனார் கோபுரமும்
திட்டமுடன் கண்டபின்பு திரும்பிவிட்டான் வேடனவன்

அப்போது மன்னவனு மவ்வூர ருகேசென்று
செப்பமுட னூரருகே சத்திரமுங் கண்டனரே

## செட்டி வருகை

சத்திரத்தின் தன்னருகே வீற்றிருந்தார் நால்பேரும்
சித்திரமாய்ச் சத்திரத்தின் செட்டியவன் வந்தனனே
செட்டி நவகோடி சிறப்புடைய மன்னவன்காண்

கட்டித் திரவியத்தான் கப்பல்வியா பாரமுள்ளான்
மட்டுயர்ந்த சேவை மகராசன் செட்டியவன்
அட்டதிக்குஞ் செல்லு மவனுடைய வியாபாரம்
சேவிப்பா ராயிரம்பேர் சிறுவ்வணிக ராயிரம்பேர்
பாவனையாய் வேண்டும் பலபேரைக் கொண்டணைப்பான்

மன்னவனு மந்த வணிகனிடஞ் சென்றனனே
தென்னவனைக் கண்டு திரும்பினார் செட்டியவர்
எவ்வூர்கா ணுங்களுக்கு எங்கேவந்தீ ரென்றுரைத்தார்
அவ்வூரைக் கேழ்ப்பதேன் அரவணைத்தோ ரிடமிருப்போம்
வணிக னதுகேட்டு மங்கைமுகங் கண்டனனே

## செட்டி அரசியின்பால் காமுறுதல்

பணிகளொன்று மில்லாத பரதேசி மங்கையரைச்
சிறப்பாகக் கண்டபின்பு தேவகன்னி யென்றிருப்பான்
வறப்போக்கி தன்னுடனே மங்கையிவள் வந்ததென்ன
ராச்குல மங்கையரோ யிந்திரநாட் டேந்திழையோ
வாசவனா ரிந்திரனார் வளநாட்டுப் பெண்ணரசோ

அயனா ருருப்பிடிக்க வறிந்தானோ வென்றயர்வான்
மயிலா யுருவெடுத்து மன்மதனைச் சீர்கழிக்க
மின்னை யொருவடிவாய் வேண்டிச் சமைத்தானோ
பொன்னாரும் பொன்னாட்டில் போய்விடுவா
[ளென்றுசொல்லித்]
தங்கக் குடங்கள்ரெண்டு தானுருட்டிச் சேர்த்தானோ

திங்கள் தனையெடுத்து மங்கைமுகஞ் சேர்த்தானோ
இல்லையோ வுண்டோ யிடையறிவா ரிங்கிலையோ
வில்லாளி மன்மதனை வெல்லவென்று வந்தாளோ
மகரங்கள் போல் வகித்த விழியிரண்டும்
சிகரங்கள் போலே திரண்ட குரும்பைகளும்

வாழையிளந் தண்டதுபோல் வகித்த தொடையழகும்
வீழிக் கனிபோல் மெல்லிநல்லார் தந்நுதலும்
கோதை மயிர்வகிப்புங் கொண்டைச் சொருக்கழகும்
மாது திருவடிவை வணிகன் மிகநோக்கி
வன்னித்த மார்பில் வளர்கிரியோ டொத்ததனம்

இன்னம் பிறந்தார்க்கும் இனிப்பிறப்போர் தங்களுக்கும்
சதுர்முகனிவ் வுருப்போலச் சமைக்க வறிவானோ
மதியு மிவள்முகத்தைக் கண்டால் மயங்கிடுமே
என்று வணிக னின்பமுட னேநினைந்து
விண்டு யிதுவெல்லாம் வெளிதனிலே விள்ளாமல்

நெருப்பைப் புழுவரிக்க நினைத்த கதையதுபோல்
இருப்புத்தூ ணைக்கறையா னரிக்க நினைப்பதுபோல்
ஆலகால விஷமென் றறியாம லேவணிகன்
மாலையிட வேணுமென்று மனதில் நினைந்துகொண்டு
ஒன்றுமற்றா னிம்மனித னொருபொருளு மில்லாதான்
விண்டபடி கேழ்ப்பான் வேறுரைக்க மாட்டானே
என்று வணிக னியல்பாய் மனதிலெண்ணி

## செட்டி ஆதரவு

நன்று நன்று மன்னவனே நானுரைக்கக் கேளுமென்றார்
ஊருவிட்டு நாடுவிட்டு வலைந்து மெலிந்துவந்தீர்
ஆராரு முங்களுக்கு அறிந்தாரு மிங்கிலையோ

இல்லிடமும் வீடுகளு மின்பமுடன் நாம்தருவோம்
அல்லல் தனைத்தவிர்த்து அமுதுக் கிடம்வகுப்போம்
என்றுசொல்ல வணிக னின்பமுடன் தான்கேட்டு
நன்று பெரியோனே நாங்கள்செய்த பாக்கியமே
தட்டமிழ்ந்து மெத்தத் தடுமாறி வந்திடத்தே

இட்டமுட னிருப்பு மியல்புகளுந் தந்தீரால்
அடைக்கலமே யுந்தனுக்கு ஆதரித்துக் கொள்வீரே
திடத்துடனே நாமிருப்போம் செய்ந்நன்றி நாமறவோம்
என்றுரைக்க மன்னன் இன்பமுள்ள செட்டியவன்
நன்றென்று கட்டி நடந்தனனே தன்மனையில்

வன்ம மறியாமல் மாலையிட லாகுமென்று
தன்மனையி லில்விடமுந் தனியே மிகவகுத்து
பாண்ட முடன்விறகு பலவகையுந் தானமர்த்தி
வேண்டும் பலசரக்கு மீன்கொடியாற் கீந்தனனே
திங்களொன்று தனக்குச் செல்லு மரிசிகளும்

சங்கையுடன் கொடுத்தான் தானதன்மக் கொடைவணிகன்
கவ்வை யொழிந்தார் கருணை மிகப்பொழிந்தார்
அவ்வாறு கொண்டு யதிலே குடியிருந்தார்

## விறகு கட்டியின் அறிவுரை

இந்தப்படி யேயிவர்கள் இருக்குஞ் சிலநாளில்
விந்தையுட னசலகத்து விறகுகட்டி தானொருவன்

வந்து பழக்கமுமாய் மன்னவனோ டேயிருந்து
தந்த படிபோனால் தட்டழிவீர் கண்டீரே
பிழைக்க வகையறியீர் போதையீர் நான்சொலக்கேள்
இளப்பமில்லை பாடுபட்டால் ஏசுவார் தானுமில்லை
மைந்த ரிருபேரு மன்னவரே நீர்தாமும்

விந்தை மலைதனிலே விறகுகட்ட வந்தீரால்
அன்றாகுஞ் செலவுக் கமையுங்காண் கண்டீரே
வண்டாடும் பூங்கூந்தல் மைவிழியா ளுக்குரைகேள்
எந்த னுடவீட்டா ளியல்பா யகரமதில்
விந்தை யுடன்சென்று விதமாக நெல்லமர்த்தி

அரிசிபண்ணக் கூலி யளந்திடுவார் கண்டீரே
வரிசையுட நாள்தோறும் வயிறுபசி தீர்ந்துவரும்
பெண்கொடியுங் கூடப் புறப்பட்டா ளாமாகில்
வண்ணமுட னரிசிகொண்டு வருவா ளெனவுரைத்தான்
அண்ணலே புத்தியிது வாகுமென்று தானுரைத்தார்

வண்ண முலையார் மங்கையுடன் மன்னவனார்
சொன்னார் விறகுகட்டி சொன்னபடி யுள்ளதெல்லாம்
அன்ன நடையா ளயர்ந்தா ளதுகேட்டு

## விருத்தம்

மன்னவன் வணிகன் வீட்டில் வந்துட னிருக்கும் நாளில்
தென்னவன் விறகு கட்டி சிறப்புடன் பிழைப்பே சொல்ல
அன்னது மங்கை கேட்டா ளரசனன் முடியின் மீதே
இன்னகர் விறகுகூற வெழுதினா யையனோ வென்றாள்

## நடை

மன்னவரே விறகுதலை வைக்கவிதி யாச்சோ
தென்னவ னேவிறகு திருமுடியி லேறிடுமோ
தங்க முடியணியுந் தலைமீதி லிப்போது
பங்கப் படவிறகுப் பாரஞ் சுமப்பீரோ
நாலுதிசை வேந்தர் கண்டால் நகைப்பார் பழிப்பாரே
பாலகனுங் கூடப் பலவிறகு தானெடுத்து
கட்டிச் சுமப்பாரோ கண்ணாரக் காண்பாரோ
எட்டி நடப்பார்களோ யிவர்விறகு கூறுவரோ
சட்டமுடன் சிவனார் நான்முகற்குச் சம்மதியோ
நட்டமுடன் கலியன் மைந்தனுக்குச் சம்மதியோ
நாரா யணற்கும் நமனார்க்கு மிந்திரர்க்கும்
பூரா யணமான புண்ணியர்க்குஞ் சம்மதியோ
என்று புலம்பி ஏங்கி யிருந்தயர்வார்
கண்ணுமணி துஞ்சாமல் கவ்வைத் துயராவாள்
உலக்கை பிடிக்க வகையொன்று மறியேனே
வலக்கை யிடக்கையினால் மாற்ற வகையறியேன்
ஈரல முறமெடுத்து எம்ப வகையறியேன்
வேறாய்த் தவிடரிசி வேறுபட நானறியேன்
செய்தவர்க்கல் லோகூலி தீர்க்கமுடனே கொடுப்பார்
வையகத்தில் சும்மா வழங்குவரோ தான்கூலி
என்று புலம்பி யிருந்து மயங்கிடுவார்
கன்றிழந்த மானதுபோல் கத்துவாள் பெண்கொடியாள்
மன்னர் முகம்பார்த்து மங்கை மயங்கிடவும்

கன்னி முகம்நோக்கி மன்னர் கலங்கிடவும்
மைந்தர் முகம்பார்த்து மங்கை புலம்பிடவும்
தந்தை முகம்நோக்கித் தம்பி கலங்கிடவும்
இந்த விதமா யிருந்து மிகச்சோர்ந்தார்
அந்தப் பொழுதனிலே யரசன் மிகத்தேறி

மைந்தர்க்கும் மங்கையர்க்கும் மனது திடப்படுத்தி
வந்தவிதி வந்ததென்றால் வாய்திறக்க நீதி(யுண்டோ)
கந்த மலரான கடவுளா னிட்டபடி
அந்தப் படியே யனுபவிக்க வேணுமல்லால்
மலைத்தா விதிவிடுமோ மங்கையரே யென்றுரைத்தான்

தலத்தால ருடன்கடித் தான்வேலை செய்துவந்தால்
உண்ணும் பொருளுக் கொருமலைவும் வாராதே
என்றைக்கு மித்தொழிலே யின்பமுடன் செய்திடலாம்
கன்ன மிடுவார் களவுசெய்வார் தன்னுடனே
மண்ணு பறித்துண்பார் வழக்கோரஞ் சொல்லிடுவார்

கன்னி யிருக்கமறு கன்னியர்க்கும் ஆசைகொள்வார்
இன்னிவர் களோடே யிணங்கினா லாகாதே
என்றுசொல்லி மன்னனிருக்கு மறுநாளில்

## மன்னன் விறகு விற்றுப் பிழைத்தல்

குன்றில் விறகெடுக்கக் கூப்பிட்டா னண்ணனவன்
நன்றென்று சொல்லி நாயகனு மைந்தர்களும்

வண்டார் குழலாள் மங்கை யமுதுகட்டிக்
கொடுத்தாள் கைவாங்கிக் கோமானுந் தோளிலிட்டு
திடத்தால் நடந்தனனே செய்திசொன்னா னதன்பிறகே
சென்றார் மலையருகில் சிறப்புடைய காடுதன்னில்
கன்றாங் குழவிகளைக் கையோ டழைத்தருகே

பட்ட விறகு பருவிறகு கொம்புகளும்
வட்டவட்ட மாய்ப்பொறுக்கி வகையாயடுக்கிவைத்து
மதலை விறகெடுக்க வகையறிய மாட்டாமல்
விதனமாய் நிற்கிறதை வேறுபடச் சொல்லாமல்
பிள்ளைகளை நிழலருகே வேறுபடத் தானிருத்தி

வள்ளல் கொடியெடுத்து மன்னவனைத் தானழைத்து
தனக்கு ஒருகட்டுந் தம்பியர்க்கு ரெண்டுதுண்டும்
கணக்கு முறையாகக் கட்டிக் கொடுத்தனனே
விறகுகட்டி கட்டித் தலைமேல் விறகெடுத்தான்
பிறகேதான் மன்னவனும் பிள்ளைகளுந் தானெடுத்தார்

தள்ளாடி மெத்தத் தடுமாறி வந்தனரே
பள்ளம் தலைகாந்த மைந்தர்தலை நோகுதென்பார்
சுமைதாங்கி கண்டிடத்தே சுமைதா னிறக்கிடுவார்
சிமையாறிச் சுமையெடுத்துச் சீக்கிரமே தானடப்பார்
தண்ணீர்ச் சுனையுந் தாவரமுங் கண்டபின்பு

அண்ணலார் தம்பியோடு நால்வர் சுமையிறக்கி
நீரருகே நின்று நெடுமூச்சுத் தானெறிந்து
பாரஞ் சுமந்திறக்கப் பரமன் விதித்தானோ
என்று மெலிந்து யிருந்தார் கரையருகே
கட்டமுதைத் தானெடுத்துக் கையினா லுண்டைசெய்து
இட்டமுடன் தம்பியர்க்கு இன்பமாகக் கொடுத்தார்
தாமும் அமுதுகொண்டு தம்பியருங் கொண்டபின்பு
உண்டு யிளைப்பாற யொருமித்தார் நால்பேரும்
நாமுந் தவசிருந்து நற்குழவி யுண்டாகி
செல்வத்தி னாலே சிறப்பாய் வளர்த்தமைந்தர்

நல்வித்தை கற்று நாதனார் தன்னருளால்
வாகுபெற நன்னாடு மைந்த ரரசுவைக்க
நாகரத் தினம்பொதிந்த நல்ல முடிசாற்றும்
தங்க முடிசாற்று மைந்தர் தலைமீதில்
பங்கப்பழிப் பாய்விறகுப் பாரமதை வைத்தோமே
என்று புலம்பி யிருந்து மயங்கியபின்
நின்ற விறகுகட்டி நெடுநேர மாகுதென்ன
கட்டெடுத்து நால்பேருங் கடிய வழிநடந்தார்
மட்டமர்ந்த தோளார் வழியே நடக்கையிலே
தம்பிமார் பாதந் தடுமாறு தென்றுரைப்பார்

வெம்பி மனந்தளர்ந்து மெல்ல நடவுமென்பார்
இங்கிதமாய்க் கூட்டி யிருந்த யிடஞ்சேர்ந்தார்
மங்கை விறகுக்கட்டை வந்துமிகக் கண்டனளே
தங்கமுடி சாற்றுந் தலைமீதில் கட்டெடுக்க
சங்கேந்துங் கையான் சம்மதித்து நின்றானோ

பொன்னின் முடிசார்த்திப் புவியாண் டிருக்கையிலே
மன்னவனும் பிள்ளைகளும் மலைவிறகு தானெடுத்து
வீதித் தெருதோறும் விலைகூற விட்டானோ
ஆதி பரமனுக்கு அநியாயஞ் செய்ததுண்டோ
சிவனே சிவனென்று சீருடையாள் நின்றயர்வாள்

பவனே சிவலோகப் பரஞ்சோதியே என்றயர்வாள்
இடிப்பான் அயர்வாள் இருந்தேங்கி நின்றயர்வான்
அடிப்பாள் தனத்திடிப்பாள் கதறுவாள் மெய்சோர்வாள்
மன்னவனு மப்போது வாய்திறந்தங் கென்சொலுவான்
பெண்ணரசே யுந்தனுக்கும் புத்தி மடிந்ததுவோ

விதியை யொருவரால் வெல்ல வழியுண்டோ
மதியினால் விதிவெல்ல வசமுண்டோ மங்கையரே
என்றமர்த்தி மங்கையரை யிங்கிதமாய் வார்த்தைசொல்லி
ஒன்று மலையாதே யுத்தமனார் காத்தருள்வார்
என்று சொல்லக்கேட்டு யிருந்தாளே யுத்தமியார்

அன்று விறகுதனை யவ்வீதி தானெடுத்துக்
கூறி விறகுவிற்றுக் கொடுத்தநெல்லுந் தோளிலிட்டு
தேறி மனந்தேற்றிச் சீருடையாள் கைக்கொடுத்தார்
அந்தப் படிசிலநா ளதுதொழிலாய்த் தாடைந்தார்

## அரசி நெல் குற்றச் செல்லுதல்

வந்தாள் விறகுகட்டி மங்கையிவள் தன்னருகே
தங்கையரே நகரமதில் கூலிகுற்ற வாரீரோ
மங்கையரே கூட வருகிறே னென்றுரைத்தாள்
கூடிப் புறப்பட்டாள் கொடுங்கலியன் தன்னாலே
தேடி நகரமதில் சிறப்புடையாள் தன்மனையில்
கூடி யிருபேரும் நெல்லுண்டோ குத்தவென்றார்

நாடிப் பிராமணத்தி நம்மகத்தில் வாருமென்றார்
வந்த யிருபேர்க்கும் வகையாய் நெல்லளந்தாள்
எந்த விதமு மிதுகுத்த வேணுமென்று

## விருத்தம்

சந்தனம் புனுகு சாந்து சவ்வாதுட னணியுங் கொங்கை
விந்தையாய் முல்லை பிச்சி சுகந்தமு மேவுங் கூந்தல்

தந்தமும் முகமும் மூக்கும் மையிடும் கண்கள் தானுஞ்
செந்தவி டுமியும் நொய்யும் சிறந்ததை யுரைசெய் வேனே.

## நடை

இருவர் கருங்காலி யுலக்கை யெடுத்தனரே
மருவுகுழல் பெண்ணரசி மயங்கியே கைசோர்ந்து
அந்தப் பிராமணத்தி யவள்முகத்தைத் தானோக்கி

சிந்தை கலங்கினையே சேயிழையே பெண்கொடியே
எந்தவிதங் குத்திடுவா யேற்பாய்தன் கூலியென்றாள்
அந்த மொழிகேட்டாள் விறகுகட்டி (காரிகையாள்)
சிந்தை கலங்காமல் சீரழிஞ்சு போகாமல்
தந்த நெல்லுக்குத்தித் தருவே னரிசியென்றாள்

நல்லது தானென்றாள் நகரத்தில் பிராமணியும்
வல்லமையாய் நோசமுமாய் மங்கை யுலக்கையேந்தி
சினந்து மிகவிடித்தாள் சீரழிந்தாள் மெய்சோர்ந்தாள்
கனத்த தனத்தோடுங் கண்ணோடும் நீரோட
உலக்கை பிடித்தகையா லுதிரங்கள் தானோட

கலக்கமாய் நின்றவளை விறகுகட்டி காரிகையாள்
மங்கையரே யுலக்கை யறிய மாட்டாயோ
செங்கை சிவப்பானேன் சீரழிந்து நிற்பானேன்
தங்கப்பெண் ணாரமுதே சஞ்சலங்க ளெண்ணாதே
மங்கையரே யுலக்கை பலநாள் வருந்தயிலே

தேறி யுலக்கைபற்றத் திடமுண்டாங் கண்டீரே
ஆறிப் பிடியுலக்கை யஞ்சாதே யென்றுரைத்தாள்
எனக்குநீ தங்கைகண்டாய் எந்தவித மானாலும்
உனக்குநான் கூலி யுள்ளபடி தான்தருவேன்
ஆனமட்டுஞ் செய்வதல்லா லதிகமாய் வருத்தாதே

நானுனக்குத் தோள்துணையாய் நடத்துவே னென்றனளே
அப்போது பெண்ணரசி யவ்வார்த்தை கேட்டபின்பு
செப்போ டினமுலையாள் சீருடையாள் நல்லதென்றாள்
அப்போது பெண்கொடியை யந்தணத்தி தான்பார்த்து
கற்புடைய மங்கையிவள் ராசகுல கன்னிகண்டாய்

செப்பமுடன் சீரழிந்து சீமைவிட்டு வந்தாளோ
தப்பாத வுத்தமியாரிவர் சங்கைகண்டு சொல்லுகிறேன்
என்ற மொழிகேட்டு யியல்புடையா ளென்சொல்லுவாள்
விண்டதினா லாவதென்ன வேதகுல மங்கையரே.
தலையில் விதிகளொன்றுந் தப்பாதே தாயாரே
மலைவினால் விதிபோமா மதியினா லாவதுண்டோ
அந்நியுட னேரமுமா யரசிகுத்தி யானபின்பு
சிந்தையுட னிருபேர்க்குஞ் சிறப்புடனே யன்னமிட்டாள்
அன்னம் பகுந்து அவர்கள்பசி தீர்ந்தளவில்
இன்னமும் நாளை யிருபேரும் வாருமென்றாள்
கூலி யரிசி குறுணைதவி டுள்ளதெல்லாம்
மாட்சிமையாய்த் தானே வகையாய்க் கொடுத்தனளே
முந்திதனில் வாங்கி முழுது மதைப்பகுந்து
தந்திரமா யிருபேரும் தானடந்தா(ரவ்) விடத்தே
மங்கை வருங்கோலம் மன்னவனார் கண்டுரைத்தார்
தங்கப்பெண் ணாரமுதே தையலே யுன்னுடைய
கைசிவந்து மெய்தளர்ந்து காலயர்ந்தும் வந்தனையோ
தையலே யுன்மேனி தவிடார்க்கக் கண்டோமே
சுகந்தாதி பூமுடிக்குஞ் சொருகுகொண்டைக் கூந்தலிலே
புகுந்தோடிக் குத்துமிகள் பொதிந்திருகக் கண்டோமே
மையெழுதுங் கண்களெல்லாம் நொய்யடையக் கண்டோமே
தையல் செவிமடலில் சவ்வாதொழுகு மவ்விடத்தில்
குத்துமியுஞ் செந்தவிடுங் குழைந்திருக்கக் கண்டோமே
முத்துப்போல் தந்தமெல்லாங் குத்துமியுங் கண்டோமே
சாந்து புனுகு சவ்வாதணியுங் கொங்கையெல்லாம்
செந்தவிடுங் குத்துமியுஞ் செந்தூளுங் கண்டோமே
ஆவிலை போல்வயிறு மழகுரோ மங்களெல்லாம்
சாலித் தவிடடைய சங்கரனார் கற்பினையோ
என்றுசொல்லி மன்னவனா ரேங்கி மிக்மெலிந்தார்
கண்டோமே யிந்தக் காரணங்க ளென்றயார்வார்
நின்று மயங்கிடுவார் நெடுமூச் செறிந்திடுவார்
கண்டதுண்டோ கேட்டதுண்டோ காரணங்க ளென்றுரைப்பார்
அப்போது பெண்கொடியா ளரசர் முகம்நோக்கி
தப்பாது நம்முடைய தலையில் விதிப்படிதான்
மெத்த மலைப்பார்களோ விண்ணாளும் மன்னவனே

அத்தனா ரிட்டபடி யாருக்குந் தப்பாதே
என்று சிலநா ளிப்படியே வாழ்ந்திருப்பார்
கன்று கலியன் கபடொன்று தானினைந்து

## விருத்தம்

அந்தணர் வீதி தோறு மரசியர் கூலி மேவ
விந்தமா பர்வ தத்தில் மன்னவன் விறகு கட்ட
தந்திரக் கலியன் கண்டு தனித்தனி வகுப்பே னென்று
சிந்தையாய்க் கோலஞ் செய்த சிறப்பினை யுரைசெய் வேனே

## கலி நால்வரையும் பிரித்தல்

### நடை

நால்வ ரொருதலத்தில் நாடி யிராதபடி
பாலகனும் மன்னவனும் பகிர வகைகொடுத்தான்
மைந்தர்களும் மன்னவனும் மலையில் விறகெடுத்து
இந்த விதமாக இருக்குமந்த நாளையிலே
மன்னவனும் பிள்ளைகளும் மலையில் விறகுகட்டி
தன்னடை யாய்க்கொண்டு தானே வருகையிலே
மலைதனி லேமாரி வருஷ மிகப்பொழிந்து
தலைமலையுங் காடுகளும் தட்டழிந்து வெள்ளமுமாய்
பசுநிரைகள் போலே பரந்துவெள்ளம் வந்ததுவே
கசைகொண் டிழுப்பதுபோல் கரைபுரண்ட வெள்ளமுமாய்
மன்னவற்கு முன்னே வளைந்துமிக வோடியதே
தென்னவனா ராற்றுவெள்ளங் கண்டார் திகைத்துநின்றார்
ஆற்றங் கரையருகே மூன்றுகட்டு மங்கிறக்கி
நிலையளப்புத் தோன்றாமல் நின்றார் கரையருகே
அப்போது கலிய னவனுமொரு வேற்றுருவாய்
செப்ப முடன்கரைக்குச் சேரவென்று வந்துநின்றார்
அண்ணலே யெங்களைநீ யக்கரையைச் சேர்த்தாயால்
புண்ணியங்கள் மெத்தப் பொருந்துமென்று தானுரைத்தார்
நல்லதென்று சர்ப்பனையாய் நானுமொன்று சொல்லுகிறேன்
வல்லவரே யென்பிறகே நீயுமொரு தம்பி(யும)ாய்
சேர்ந்த பிறகிவனைத் திரும்பிவந்து கூட்டிடலாம்
அந்த மொழிகேட்டு அரசர்மைந்தர் தன்னோடே
தம்பியரே யிங்கொருத்தர் தானிருக்க வேணுமென்றார்

வம்பரொரு வற்கொருவர் மாட்டோ மெனவுரைத்தார்
அப்பொழுதி லேகலிய னதுக்கொன்று சொல்லிடுவான்
இப்படிநீ சொன்னா லேழையே கேட்பார்களோ
கயிற்றா லொருமகனைக் கையிரண்டுங் கட்டுவித்து
மயிலைமரத் தோடே வாகுடனே தானணைத்து

சிறுவன் றனைக்கூட்டிச் சேருவோ மக்கரைக்கே
உறுதியுள்ள வார்த்தையென்று உற்பனமாய்த் தான்கேட்டு
சிறுவ னொருவன் றனைச் சிக்கனவே கட்டுவித்து
மறுத்து மொருவனையும் வகையாகக் கைபிடித்து
கற்பினையான் றன்பிறகே தானே யிறங்கிவிட்டான்

தெற்பமதாய் மேடுபள்ளம் நீர்பாயத் திரளாகி
நிலையா விடந்தனிலும் நிலைப்பாகத் தானுசத்தி
கொலைகார னக்கரைக்கே கொண்டுபோய் விட்டனனே
அந்த மகன்றனையு மழைத்துவர வேணுமென்றான்
வந்த தடமறிவாய் மார்பளவு தண்ணீர்காண்

உந்தன் மகன்றனைநீ யோடியே கூட்டிவராய்
தந்திரங்கள் சொல்லி நடந்தானே சர்ப்பனையாய்
இந்த மகன்றனையு மிங்கேயிரு மென்றுசொல்ல
அந்த மொழிக்கு மவன்மாட்டோ மென்றழுதான்
அப்போ மவன்றனையு மங்கோர் கயிறெடுத்து

செப்ப முடன்கட்டிச் சேர்த்தான் மரத்தோடே

## விருத்தம்

மைந்தரி லொருவன் தன்னை வடகரை மரத்தே கட்டி
சிந்தையா யொருவன் தன்னைத் தென்கரை விருட்சஞ் சேர்த்து
அந்தமா மகனை நோக்கி யவன்கதிப் ... பாதில்
தந்திரக் கலியன் தண்ணீர் நிலைகொள்ளாத் தள்ளி னானே.

# ஆற்று வெள்ளத்தில் அரசன்

## நடை

இங்கே யிவன்கதற இருநிலமுந் தான்பிளக்க
அங்கோர் மகன்கிடந்து அய்யாவென் றேகதற
வந்த தடம்நோக்கி மாபாவி சொற்படியே
சிந்தை யுடனிரங்கிச் சோர்ந்து நடக்கையிலே
நிலைப்பில்லா வெள்ளமது நிலைதரிக்க வொட்டாமல்

மலைப்பாய் நிலையுமில்லா வெள்ளமது தள்ளியதே
பிள்ளை முகம்பார்த்துப் பேசமொழி யில்லாமல்
வள்ளல் முகம்பார்த்து மக்களுரை செய்யாமல்
அங்கொருவ னிங்கொருவ னாற்றுநடு வேயொருவன்
சங்கையுடன் வெள்ளமது தள்ளி நடந்ததுவே

எட்டிஎட்டிப் பார்த்தார் இருகரையுஞ் சேரவென்றே
தட்டி வெகுதூரம் தான்கொண்டு போனதுவே
தள்ளாடி வெள்ளமதில் தட்டழிந்து போகையிலே
கள்ளக் கொடுங்கலியன் கட்டையென்று தோன்றினனே
கட்டை தனைமெள்ளக் கட்டி யணைத்தபின்பு

திட்டமுடன் வெள்ளமது சீக்கிரங்கொண் டேகியதே
அருக்கனு மிந்த அவதிகளைக் கண்டவுடன்
உரைக்கொண் ணாதென்று கடலோடிப் புகுந்தானே
அக்கரையு மிக்கரையு மானமக்கள் கட்டோடே
துக்கப் படுவதைச் சொல்லுகிறே னம்மானை

## மைந்தர்கள் துயரம்

மைந்த ரிருபேரும் மன்னவனைத் தானோக்கி
எந்தன் பிரானே எங்களைநீர் கட்டுவித்து
எங்கே பறந்துவிட்டீர் எப்போது வந்திடுவீர்
சங்கையுட னெங்களைநீர் தானே வளர்த்திரே
பாதங்கள் நோகுதென்று பரிவாய் வளர்த்தீரே

ஆதரவா யெங்களையு மன்பாய் வளர்த்தீரே
மாங்கனியுந் தேங்கனியும் வரிக்கைப் பலாச்சுளையும்
பாங்காய்க கொடுத்துப் பரிவாய் வளர்த்தீரே
காடு மலைசெடியுங் கண்காணாச் சீமைகளும்
வாடாமல் கோணாமல் வளர்த்தணைத்துக் கொண்டீரே

வெள்ளத்தில் போனவரே மீண்டுவர மாட்டீரோ
பிள்ளைகளைக் கட்டுவித்துப் பேசாமல் போனீரே
அய்யரே நாங்க ளாரிடத்தே சேர்ந்திருப்போம்
பொய்யன்றோ வாழ்க்கை போயகன்றீ ரய்யாவே
கட்டவிழ்த்து விட்டீரோ காரியங்கள் சொன்னீரோ

விட்டால் தொடர்ந்திடுவா ரென்று வெறுத்தீரோ
மாதா விருப்பிடத்தை வகைதா னுரைத்தீரோ
ஆதரவா யெங்களையும் மாதரிடஞ் சேராமல்

தாயார்க்கு மாதரவு தானு முரையாமல்
போயகன்றீ ரெங்களுக்குப் புத்தியொன்றுஞ் சொல்லாமல்

என்று மயங்கி யிருபேருங் கட்டோடே
கன்றிழந்த ஆவதுபோல் கதறிக் கிடந்தாரே
அன்றிரவு சென்று அருக்க னுதித்தபின்பு
கண்ணுமுழியோ யழுகக் கதறயிட மில்லாமல்
மயக்கமுடன் கட்டோடே மயங்கிக் கிடக்கையிலே

## ஆயர்கள் மைந்தர்களை ஆதரித்தல்

கையில் கடையாலுங் கம்புஞ்சில வாடுகளும்
கண்டா ரிருபேருங் கட்டோடே நிற்கிறதை
சண்டாளன் மாபாவி கட்டினதார் தம்பியரே
கட்டை யவிழ்த்துக் கைமுறுக்கச் செய்தனரே
எட்டி யெடுத்து யியல்பாகத் தானணைத்து

வாரி யெடுத்து மார்புமுகந் தான்தடவி
ஆரிவ ரோஎன்று அலைமலைச்சுந் தான்தேறி
முந்திகொண்டு வீசி முகத்தில்நீர் தான்தெளித்து
அந்த யிருபேரு மப்பொழுதுகண் முழித்தார்
தம்பியரே நீங்கள் தட்டழிந்த வாறேது

எம்பியரே நீங்க ளிருபேரை மரத்தோடே
கட்டுவித்துப் போன்வனார் கருத்தா யுரையுமென்றார்
திட்டமுட னப்போது செப்பினார் தம்பியர்கள்
அண்ணலே கேளும் அடியேன்கள் பட்டதுயர்
கண்ணனே மெத்தக் கடுந்தூரத் தேயிருந்து

மாதா பிதாவு மைந்த ரிருபேரும்
ஆதர வில்லம லனேக வழிநடந்து
காடுஞ் செடியுங் கருமலையுந் தானலைந்து
நாடி யொருநகரம் நற்பதியில் தான்சேர்ந்தோம்
செட்டியொரு புண்ணியவான் சிறப்பா யிடங்கொடுத்து

தட்டழிவு தீர்த்துத் தானணைத்துக் கொண்டிருந்தான்
விந்தை மலைதனிலே விறகுகட்டி விற்றிருப்போம்
அந்தப் படியே அய்யாவும் நாங்களுமாய்
நேற்று விறகெடுத்து நெடுக நடந்துவந்தோம்
ஆற்று வெள்ளம்பெருகி யலைமலைச்சு நிற்கையிலே

அங்கே யொருபாவி யப்போது வந்தனனே
சங்கையுட னுங்களைத்தான் தடத்துவழியே கூட்டி
அழைத்து நான்போறே னண்ணலே யென்றுரைத்தான்
சலத்தை யறியாமல் சம்மதிச்சா ரெங்களய்யா
அப்போ தொருகபடு செப்பினான் கண்டீரே

இப்போது தம்பி இருபேரிது தனிலே
இருவர் தனிலொருத்த ரிங்கே நிறுத்திவிட்டு
ஒருவர் தனைக்கூட்டிப் போவோமென் றுண்மைசொன்னார்
நல்லதென் றாரய்யா நாயமிது வென்றுசொல்லி
வல்லவரே தம்பியரே வகையுரைக்கக் கேளுமென்றார்

தம்பியரே யிங்கொருவர் தானிருக்க வேணுமென்றார்
தம்பி முகம்வாடிச் சம்மதிக்க யில்லையென்றார்
அந்த மொழிகேட்டு அரும்பாவி யென்சொலுவார்
இந்த மரத்தோடே இங்கொருத்தன் கட்டிவைத்து
மற்றொருத் தனைக்கூட்டி வழியிறங்கிப் போவோமென்றார்
அந்தப் படியே அக்கரைக்கும் பே(ாய்விட்டு)
தம்பியரை யிங்கிருத்தித் தானழைக்க வா(ரேனென்)றார்
வம்பனவன் சம்மதிக்க மாட்டோ மெனவுரைத்தான்
அங்கு மவன்பாவி அம்மரத்தில் கட்டுமென்றான்
கட்டி யிறங்கையிலே பாவி காணாமல் போய்விட்டான்

அந்தத் தடம்வழியே அய்யா இறங்கினரே
சிந்தை யுடன்செல்வா ரத்தடத்தே வருகையிலே
வெள்ள மதுதள்ளி மீளாமல் போயகன்றார்
வள்ளலே நாங்கள் கட்டிய மரத்தோடே
கட்டோடே நின்று கதறினோம் அண்ணாவே

திட்டமுடன் கேட்டான் செய்திவகை யுள்ளதெல்லாம்
அப்போ திடைய னவர்கள் முகம்பார்த்து
தப்பாம லன்னையிடந் தான்போக மாட்டீரோ
என்ற மொழிகேட்டு யிருவருமங் கேதுரைப்பார்
கன்றிழந்த மான்போல் கதறி யலைவதல்லால்
மாதா விருப்பிடத்தை வகையறிய மாட்டோமே
தாயும்நீ தந்தையும்நீ பிறப்புச் சகோதரரும்நீ
எந்தவித மெங்களைத்தா னேற்றுக்கொ ளென்றுரைத்தார்
சிந்தையுட னேயிடையன் செப்பினா னப்பொழுது
குட்டிதனை மேச்சுக் கூடத் திரிந்தீரால்

திட்டமுடன் பாலமுது செலுத்துவே னென்றுரைத்தான்
அண்ணலே நல்லதென்று அவன்பின்னே தாடைந்தார்
பெண்ணரசு தன்துயரம் பேசுவே னம்மானை.

## விருத்தம்

மன்னனை வெள்ளங் கொண்டு வாகுடன் போன பின்பு
சின்னவ னிருவர் தன்னை ஆயனுஞ் சேர்த்துக் கொண்டான்
கன்னிய ரிவர்கள் தன்னைக் கருத்துடன் வரவுங் காணாள்
இன்னிசை மயக்கத் தாலே யியம்புவ துரைசெய் வோமே

## அரசியின் துயரம்

### நடை

மன்னவருந் தம்பியரும் மலையில் விறகுகொண்டு
எந்நேரம் வர்றபடி யின்னுவரக் காணாமல்
மாலை யிருட்டியுந்தான் வரவழியுங் காணாமல்
பாலகனு மன்னவனும் பாரவழி போனவரை
எப்போதும் வர்றபடி யின்னுவரக் காண்கிலனே
செப்பமுடன் தம்பியரே சீக்கிரத்தில் வாரீரோ
மன்னவரே நீரும் வழிதப்பி நின்றீரோ
தென்னவரே காட்டில் திசைதப்பி நின்றீரோ
என்னை மறந்தீரோ என்னைவிட்டு நின்றீரோ
கன்னிநான் பாவியென்று கைவிட்டு நின்றீரோ
தம்பியரைச் சேகரித்துத் தான்பிரிந்து (போனீ)ரோ
வம்பிலே யென்னைவிட்டு மறந்து மிருந்தீரோ
காட்டில் மயங்கினீரோ கரடிபுலி கண்டதுண்டோ
வீட்டி லெனைமறந்து வேகமுடன் போனீரோ
ஆற்றுவெள்ளம் சேர்த்தியுமாய் அலைமலைவு வந்ததுண்டோ
காற்றுவெயில் வேனலிலே களைப்பா யிருந்ததுண்டோ
கரடிபுலி சிங்கமதைக் கண்டு பயந்தீரோ
அறிவுடைய தம்பியரை யங்கிருத்திக் கொண்டீரோ
கல்லோ மனது கலங்காதோ யென்னைவிட்டால்
வல்லவரே தம்பியுட னெப்பவரக் காண்பேன்நான்
உற்றாரு முறையா ரொருவரிங்கு தானிலையே
பெற்றார் பிறந்தோர்க ளுற்றாரு மிங்கிலையே
முட்டுவாள் மோதிடுவாள் முகத்தோ டறைந்திடுவாள்

இட்டமுடன் தம்பியரே யென்று மயங்கிடுவாள்
ஆரிடத்தில் சேர்ந்திடுவே னணைப்பவரா ரென்றயர்வாள்
வீரமுள்ள மன்னவரே மறந்தீரோ யென்றயர்வாள்
தலையில் முடிகுலைத்து சவுரி பறித்தழுவாள்
உலையிலிடு மெழுகதுபோ லுலைந்து மெலிந்திடுவாள்

அழுவாள் மயங்கிடுவாள் கதறிடுவாள் மெய்சோர்வாள்
விழுவாள் மயங்கிடுவாள் வேதியரைத் தானினைப்பாள்
அந்தணரே நாங்க ளரும்பாவஞ் செய்ததுண்டோ
கந்த மலருதித்த காரணனே நாரணனே
வெள்ளி மலையானே விமலனே போற்றியென்பாள்

துள்ளுமா னேந்துகின்ற சோதியே போற்றியென்பாள்
அத்தனே யுத்தமனே யரனே பரஞ்சோதி
கர்த்தனே ருத்திரனே கயிலைக் கபய(மென்றா)ள்
ஆதிநா ராயணனே அச்சுததே(ன போற்றியெ)ன்பாள்
பார்வதியே லட்சுமியே பார்வதியே போற்றியென்பாள்

என்று மயங்கி யிருந்துவிழி சற்றயர்வாள்
அன்றுதான் லட்சுமியார் ரூபமதாய்த் தான்தோன்றி
மாதே மயங்காதே மைந்தனுட தந்திரமாய்
கோதே பிரித்தெறிந்தான் குலைமயக்கஞ் செய்யாமல்
ஈரேழு வாண்டு மியல்பாய் முடிந்தவுடன்

பாராளு மன்னவரு மைந்தர்களு மொன்றாக
சேகரித்து மொன்றாய்ச் சீமை தனையாள்வீர்
தோகையரே மலைவு தோற்றாதே யென்றகன்றாள்
அப்போ முழித்தா ளருந்ததியாள் பெண்கொடியாள்
சொப்பனத் தினாலே தோகை ம(னந்தெளி)ந்து

மலைவு மிகத்தீர்ந்து மனதுதிட மா(கிட)வே
கொலைகள் செய்தவர்போல் குன்றி மிகவொடுங்கி
மங்கை யுடைய மனக்கவலை தீர்க்கவென்று
செங்கதிரோன் வந்துதயஞ் சென்றனர்கா ணம்மானை
இரையொன்றுங் கொள்ளாம லினத்தோடும் பேசாமல்

சுரபியுண்டோர் தான்போலே சுழன்று மயங்கினளே
மயங்கிக் கிடக்கையிலே வணிகனங்கே வந்தனனே

## செட்டியின் சூழ்ச்சி

அயர்ந்து கிடந்தவளோ டவ்வணிக னென்சொலுவான்
மன்னவனும் பிள்ளைகளும் மலையில் விறகெடுத்து
இன்னம்வர கண்டிலையே யேந்திழையே யென்றுரைப்பான்
காட்டில் கரடிபுலி கண்டதுண்டோ கொன்றதுண்டோ
வேட்டைப் பலபடைகள் வெட்டிப் பறித்ததுண்டோ
மலைப்பளிப்பர் வேடர்கண்டு கொலைகளவு செய்ததுண்டோ
அலையடிக்கும் வெள்ளமதில் அமர்ந்தோடிப் போனதுண்டோ
எந்தவிதம் வந்திலையோ ஏந்திழையீ ரெண்றுரைப்பான்
விந்தையுடன் மூவர்தன்னில் வேறுபட்டார் வாராரோ
தப்பினதே யுண்டானால் தானோடி வாராரோ
எப்படியும் போனவர்க ளிறந்தனர்கா ணென்றனனே
காமக் குழளாள் கற்புடைய மங்கையிவள்
ஆமென்று மல்லவென்றும் மறுவார்த்தை சொல்லாமல்
பேசா திருந்தாள் பெண்கொடியாள் மங்கையிவள்
கூசாமல் செட்டியவன் கூறினான் வெவ்வேறாய்
வார்த்தை யுரையீரோ மறுவார்த்தை சொல்லீரோ
பார்த்ததினா லாவதுண்டோ பாறினார் வாரதுண்டோ
ஏற்றபடி யுந்தனுக்கு எல்லா மிகத்தருவேன்
காத்திருப்பேன் நீயுரைத்த காரியங்கள் கேட்டிருப்பேன்
வீட்டிலுள்ளார் நம்முடைய மிக ... களெல்லாம்
கேட்டபடி யூழியங்கள் கிருபையுடன் செய்திருப்பார்
என்மனையா ளுந்தனக்கு ஏவல்பணி கள்செய்வாள்
பொன்பணமுந் திரவியமும் பூஷண முந்தனக்கே
மாடமுடன் வீடுகளு மாளிகையு முன்றனக்கே
ஓடிவருங் கப்பலுள்ளா ரொன்வார்த்தை கேட்டிருப்பார்
வார்த்தைசொன்னால் தட்டாமல் வணங்கி மிகநடப்பேன்
காத்திருப்பேன் கைகட்டிக் காரியங்கள் கேட்டிருப்பேன்
இத்தனைநான் சொல்லிடிலும் எதிர்வார்த்தை பேசலையே
சித்தமி ரங்கலையோ திருவாக்கு விள்ளீரோ
பத்தியுட னென்னாவி பதைக்குமெ ....
சத்தியமே யிவ்வார்த்தை தப்பாது செ((ால்வ)தெல்லாம்
என்ற மொழிகேட்டா ளியல்புடையா ளென்சொலுவாள்

## அரசி விரதம் மேற்கொள்ளுதல்

நன்று நன்று செட்டீரே நாமுரைக்க கேளுமென்றாள்
அந்தரங்க முள்ளிருக்க அதற்குமறு வார்த்தைசொன்னாள்
மைந்தருடன் மன்னருமாய் வாழ்ந்திருந்தோ முன்மனையில்
மன்ன ரிழந்தேன் மைந்த(ர்) தனையிழந்தேன்
உன்னையல் லாலெனக்கு உயிதமுள்ளா ராருமில்லை
நன்றி மறப்பதில்லை நானுனக்குப் பொய்யுரையேன்

என்றுநகர் நாடுவிட்டு எழும்பின நாளையிலே
ஈரே ழாண்டு எனக்குமொரு விரதமுமாய்
ஆரு மறியார்க ளானசிவனுந் தானறிவார்
சிவனா ரறிவார் தீர்க்கவொரு விரதமுமாய்
இவைசொன்னேன் கேளீ ரின்பமுள்ள செட்டீரே

ஈரேழு வாண்டி லிதுவரையுஞ் சென்றதுபோய்
நேரே குறைநாளும் நிலவரமாய்ச் சென்றபின்பு
இந்நாளுக் குள்ளே என்கணவன் வாராரால்
மன்னா குலவணிகா மாலையிடச் சம்மதிப்பேன்
என்ற மொழிகேட்டா னியல்புடைய செட்டியவன்

நீன்று நன்று பெண்ணரசே நானுமொன்று சொல்லுகிறேன்
இப்புவியில் நீயிருந்தா லெல்லோருந் தான்தொடர்வார்
சர்ப்பனைகள் தானடக்குந் தரணியுள்ளார் காணாமல்
கப்பலிலே யுந்தனக்குக் கட்டுடனே யுள்ளறையில்
செப்பமுட னுள்ளிருத்திச் சிறப்பாய் அரிசிகறி

வேண்டும்வகை தட்டுமுட்டு வெள்ளாட்டி தானிருபேர்
ஆண்டவகைக் குள்ளதெல்லா மவ்வளவுந் தானமர்த்தி
வைத்துவைக்கச் சம்மதியோ மங்கை(கயரே) யென்றுரைத்தான்
குற்றமில்லா ளந்தமொழி கூறக் கேட்டபின்பு
கழுத்தளவு நஞ்சுதனில் திருக்கறவே நின்றாலும்

எழுத்தின்படி யல்லாம லிசைகேடு வாராதே
நல்லதென்று சம்மதித்தாள் நல்லதங்கை மங்கையிவள்
வல்லமையான் செட்டியவன் மகிழ்ச்சியுடன் சம்மதிச்சு
சிவிகைதனில் மீதேற்றிச் சிறப்புடனே தானனுப்பி
புவியிலுள்ள தட்டுமுட்டு போகவிட்டான் கப்பலிலே

அரிசிபல கறிகாயு மாழியிலே யேற்றிவிட்டு
பிரியமுட னேவல்செய்யப் பெண்ணிருவர் கூட்டிவிட்டான்
செப்பமுட னேவணிகன் சிறப்புடனே தாடைந்தான்
கப்பலிலே சென்றான்காரிகையு முள்ளறையில்
சென்றிருந்தா ளங்கே சிறப்பாக (வுவ்ளமெ)தல்லாம்

ஒன்றுகுறை வாராம லுள்ளறையில் தானமர்த்தி
ஏவல் பணிவிடைக்கு யிருபேருஞ் சேகரித்து
மேவனைய கப்பல் விசாரிப்பா னையழைத்து
மங்கையர்க்கு முட்டின்று வாங்கிக் கொடுத்திருப்பீர்
சங்கையுடன் மங்கையர்க்குத் தட்டழிவு தோணாமல்

திட்டப் படுத்திச் செல்லும்நா ளானபின்பு
விட்டிடுவே னாளோலை வேளையது தப்பாமல்
சிவிகை தனிலனுப்பாய் சீக்கிரமா யென்றுசொல்லி
நவகோடி செட்டியவன் நாடுதனில் போகினனே
மங்கையவ ளவ்வறையில் வாட்டமுடன் தானிருந்தாள்

தங்கைமுகம் வாட்டமென்று கெங்கையவள் சூழவந்து
மங்கையரே யுந்தனக்கு வாழ்துணைனா னென்றுரைத்தாள்
கெங்யுட தங்கையவள் சங்கையுட னங்கிருந்தாள்

## விருத்தம்

சிங்கம்போல் மைந்தர் தானுஞ் சேர்ந்தன ராயர் மீதில்
மங்கையுங் கெங்கை காவல் மரக்கலஞ் செட்டி சேர்த்தான்
சங்கையாய்க் கெங்கை மீதே தள்ளுண்டு போன மன்னன்
கெங்கையாங் கரையில் சேர்ந்த காரண முரைசெய் வேனே.

# மன்னன் கரை சேருதல்

## நடை

வெள்ளமது தள்ளி மிதந்துமூழ்கிப் போம்பொழுது
வள்ளல் மிகமயங்கி வயிறுகொள்ளா நீருமுண்டு
தள்ளாடி மெத்தத் தயங்குகின்ற வேளையிலே
கள்ளக் கலியனங்கோர் கட்டைபோலத் தான்மிதந்தான்
கட்டை மிதந்ததுவைக் கண்டானே மன்னவனும்
திட்டெனவே கட்டைதன்னைச் சேர்த்துப் பிடித்தானே.
கட்டையுட ஆதரவாயக் கடுந்தூரம் போகினனே
திட்டுத் திடர்களொன்றுஞ் சேரயிட மில்லாமல்

மெத்த நெடுந்தூ ரம் மிதந்தோடிப் போனபின்பு
அத்தனே யங்கோ ரணைகரையுந் தாழையுமாய்ச்
சேர்ந்தான் கரையருகே தியங்கி மிகநடந்தான்
அந்தக் கரையருகே நந்தவனப் பூச்செடியும்
சேர்ந்தான்காண் நந்தவனச் செடியருகே தான்கிடந்தான்

நந்தவனம் பூவெடுக்க நாதனார் பண்டாரம்
கூடைகொண்டு வந்துமலர் கொய்யுமந்த வேளையிலே
வாடைமலர்ச் செடியருகே மன்னவனைக் கண்டனனே
கண்டவுடன் பண்டாரங் கலங்கி மிகப்பதறி
நின்று முகம்பார்த்து நெடுமூச் செறிவுகண்டு

சீவ னிருக்குதென்று தப்பரமாய்த் தீ(யெரித்)துப்
பாவனையாய்ச் செடியருகே பட்ட விறகெடுத்து
தீயதனைத் தான்வளர்த்துச் சிறப்பாக வொற்றலிட்டு
காயமது வெம்பியதால் கண்முழித்தான் மன்னவனும்
நாயகனே நீயெனக்கு நற்றுணையாய் வந்தனையே

வாய்திறந்து பேசலுற்றான் மன்னவனும் ஆண்டியுடன்
பண்டார மப்போது வந்தவகை பகருமென்றார்
வண்டுண்ணா மலரெடுத்து மாயவர்க்கு மாலைகட்டும்
தொண்டனே பாவியும்நான் சொல்வதற்கு நாவுமுண்டோ
மண்டலத்தில் நானுமொரு மாபாவி கண்டீரோ

இறந்தழிந்து போகாம லிவ்வுடலைத் தெய்வமது
சிறந்தமலர்ச் செடியருகே சேர்க்க விதித்தய்யோ
இன்னமென்ன பாட்டுக் கெழுதினா னோபிரமன்
மன்னன் மொழிகேட்டு மாலைகட்டும் பண்டாரம்
அண்ணலே யெங்கும் அலைந்து திரியாமல்

மன்னவனே யுந்தனக்கு வயிறுபசி தீருதற்கு
நல்லதொழில் சொல்லுகிறேன் நாதனே நீகேளாய்
வல்லவனே யிந்த மலரெடுக்குஞ் செடிகளெல்லாம்
புல்லறவே கொத்திவெட்டித் தண்ணீரும் பாய்ச்சிவந்தால்
வல்லவனே யுந்தனக்கு வயிறுபசி மாற்றிடுவோம்

என்றுசொன்னான் பண்டார மின்பமுள்ளான் தான்கேட்டு
நன்றெனவே சம்மதித்து நல்லமொழி யென்றனனே.

### வெண்பா

விந்தைமலை தனிலே விறகெடுக்கப் போனமன்னன்
நந்த வனத்தருகே நண்ணினான் — சிந்தையுடன்
கெட்டிவைத்த பிள்ளைகளுங் கேடில்லா வாயர்மனை
திட்டமுடன் சேர்ந்தா ரிவர்.

## மன்னன் நந்தவனப் பணிசெய்தல்

### நடை

நந்த வனத்தருகே நானிருக்க வில்விடமாம்
அந்திசந்தி சாத மமர்த்திவந்து தந்தீரால்
நந்தவனப் பணிவிடைகள் நன்றாகச் செய்திடுவேன்
உந்தனுட புண்ணியமாய் நானு முயிர்பிழைப்பேன்

என்ற மொழிகேட்டு யியல்புடைய பண்டாரம்
அன்றுடனே யில்லிடமும் அமர்த்தினர்கா ணம்மானை
அந்திசந்தி கோவி லமுதுகளுந் தான்கொடுப்பார்
இந்தப் படியே யிருந்தான் சிலகாலம்
நந்த வனந்தனிலே நாள்தோறும் பணிவிடைகள்

சிந்தை யுடன்செய்து சிவனார்க்குத் தொண்டுபண்ணி
முன்னெடுக்கும் பூவும் விரட்டித் தானெடுக்க
மன்னன் பணிவிடைகள் வஞ்சமறச் செய்துவந்தான்
அங்கிருக்க வொட்டாம லதுவுங் கலைக்கவென்று
கங்கணங் கட்டித் தொடுத்தான் கலியனவன்

### விருத்தம்

நந்த வனத்தருகே நாள்தோறுந் தொண்டு பண்ணி
சிந்தை கலங்காமல் சிறப்பாய் நடக்கையிலே
அந்த நகரமன்னன் அரண்மனையைக் கொள்ளை யிட்டோர்
சொந்த மிவன் கள்ளன் எனக்கை துணித்தவகை
சொல்வேனே

## அரண்மனைக் களவு

### நடை

அந்த வளநாட் டரசாளும் மன்னவர்கோன்

சிந்தை களிகூர்ந்து சிறப்பா யரசாண்டு
வந்தோர் பசிதீர்த்து மனுநீதி தப்பாமல்
இந்தப் படியே யியல்பாகும் நாளையிலே
மன்னனுட கோட்டை மதிலேறி யுள்புகுந்து
கன்னமிட வேணுமென்று கள்ளர் மிகத்துணிந்து

பாதி யிரவுதன்னில் பட்டணத்தார் நித்திரையில்
சாதி முறைத்துணிவாய்த் தந்திரமா யுள்புகுந்து
ஆதி முதல்தேடி யங்குவைத்தார் தான்போலே
நீதிமுறை மன்னவனார் நிதியங்கள் கண்டதெல்லாம்
தேடி யெடுத்துத் திரட்டியொரு பொட்டணமாய்

வாடாமல் சேகரித்துக் கொண்டு வெளியில்வந்தான்
கூடவந்த பேருடனே கோட்டைமதில் தானேறி
நாடியே யிந்தமுதல் நமக்குநன்றாய் வாச்சுதென்று
தேடிவைத்த பொருள்போலே சேகரமாய் வாச்சுதென்று
ஓடி நடந்தா ருபாயமாய்த் தன்பதிக்கே

கன்ன மிட்டகள்வர் கோட்டை கடந்தபின்பு
மன்னவனார் காம மயக்க மிகவெழுந்து
கன்னி யவள்மீதில் கா(தல்) மயக்கமதாய்
பெண்ணரசி மீதே பொருந்த நெருங்கினனே
மங்கையரு மந்த மதனன் கணைத்துயரால்

கொங்கைத் துயர்தீர்க்கக் கோவையிதழ் தான்பருக
இங்கித மாய்த்தானே காம னிரதியும்போல்
கொங்கையால் மன்னவனைக் கொண்டணைக்க வேணுமென்று
சங்கையுடன் கண்முழித்தாள் தையலா ளந்நேரம்
எங்கும் கபாடந் திறந்து இயல்கேடாய்

வந்த வகையேதோ மன்னவரே யென்றுரைத்தாள்
அந்த மொழிகேட்டு வரசனும் ஆர்ப்பரித்து
கொல்லன் தனையழைத்து யுள்ளறையைப் பாருமென்றார்
வல்லவர்கள் பார்த்து வாய்மறந்து கைசோர்ந்து
மன்னவனே யுள்ளமுதல் கன்னமிட்டா ரென்றுரைத்தார்

அந்நேரம் வாசல் அசையா மணியடித்து
பட்டணத்துக் காவலரை திட்டமுடனே யழைத்து
கோட்டை மதிலேறிக் கொள்ளையிட்ட யிம்முதலைக்
கன்னமிட்ட கள்வரைத்தான் கண்டுகொண்டு வாரீரால்
வன்னக் கழுவேற்றி வாசலிலே போட்டிடுவோம்

என்ற மொழிகேட்டா ரிரக்கமற்ற காவலவர்
நன்றெனவே காவலவர் நகரத்தி லுள்ளோரைப்
பத்துத் திசையும் பறந்தோடித் தேடவிட்டான்
வத்தியுடன் மற்றாப்பு விளக்கினார் நால்புறமும்
பத்துத் திசைகளெல்லாம் வெட்டவெளி யானதுவே

மெத்த யிருள்நீங்கிப் போனவுடனெல் லோருந்தான்கூடி
ஒருவற் கொருவ ரோடினார் வாதுசொல்லி
விருது மிகச்சொல்லி வேகமுடன் தானடந்தார்
கண்டால் கழுவிருப்பான் காண்கிலென்றால் நாமிருப்போம்
என்றுசொல்லிக் காவலவர் நின்றுபறந் தோடினரே

சனத்திலே நால்புறமும் வெள்ளம்போல் தான்பறந்தார்
அணைத்தலையும் நந்தவன மந்தத் திசையருகே
கண்டா ரதுவழிக்கே கள்ள ருடதடத்தை
சண்டாளக் கள்ளருட தடங்கண்டோ மென்றுசொல்லி
மெத்த நடந்து விரண்டுமிகத் தானோடி

சுத்துநீர் வண்டதுபோல் தொடர்ந்தோடி வாரதுவை
கண்டார்கள் கள்ளர் கலங்கி மிகப்பதறி
இன்றுநம்மை விட்டுவிடா ரெப்படியுந் தான்பிடிப்பார்
பிடித்தால் தரித்திடுவர் பெரியகழு வேற்றிடுவார்
எடுத்தமுத லவ்வளவு மிவ்வழியில் விட்டெறிந்து

தொடுத்தோடிப் போய்விட்டால் தொடரார் திரும்பிடுவார்
அடுத்தோடிப் பார்ப்பார் அப்பால் திரும்பிடுவார்
இந்தமொழி நல்லதென்று எல்லோருந் தான்கூடி
நந்த வனத்தருகே நல்லதொரு யில்லிடத்தே
பணிவிடைகள் செய்தொருவ னங்கே படுத்திருப்பான்

கனவான் தலையருகே வைத்துக் கடந்திடுவோம்
என்று மொழிபேசி யெல்லோரு மப்படியே
கொண்டுவந்த அப்பொருளைக் கோமான் தலையருகே
வச்சு நடந்தார் வழிதூரம் போயகன்றார்

## மன்னன்மேல் பழிசேருதல்

அச்சமற வேபோனா ரவர்கள் வெகுதூரம்

பிறகே தடம்பார்த்துப் புறப்பட்ட காவலவர்
வாறார் தடத்தோடே வழிதப்பிப் போகாமல்
நடந்தார் தடத்துவழி நந்தவனத் தில்லிடத்தே
கிடந்தான் தலையருகே கிட்டவந்து நின்றபின்பு
கண்டாரே பொட்டணத்தை யெடுத்தார் கனம்பார்த்தார்

ஆண்டவனார் தன்முதலுங் கண்டோமே யென்றுசொல்லி
கொண்டுவந்த கள்ளருக்குக் கூடவந்த துப்பனிவன்
நன்றா யுறங்குகின்றான் ராமுழித்தான் கன்னமிட்டான்
பகலெல்லாம் நந்தவனப பணிவிடைகள் செய்துகொண்டு
வகையா யிரவானால் மன்னனுடை மாளிகையில்
கன்னமிட்ட கள்வருடன் கன்னமிடுஞ் சேவுகனோ
அந்நகரில் காவலவர் அங்குள்ளோ ரெல்லோரும்
கள்ள னிவனென்று கயிறெடுத்துக் கைபொருந்த
வள்ளல் தனைக்கட்டி மார்பிலே பொட்டணத்தைக்
கட்டி யடிப்பார் கசைகொண்டும் வீசிடுவார்

துட்டனிவன் கள்ளனென்பார் தூக்கி யடியுமென்பார்
அடிப்பார் மிதிப்பார் அநியாயஞ் செய்திடுவார்
இடிப்பார் பிடித்திருப்பா ரெல்லோருந் தானடிப்பார்
கட்டுங் கயிற்றோடே காவலவர் கொண்டுவந்தார்
திட்டமுடன் அந்நகரஞ் சேர்ந்தார் தலையாரி
மன்னவனார் முன்னேகள் ளன்வந்தா னென்றுரைத்தார்
பொன்கைரந் தானாளும் போரேறே யிந்திரரே
கள்ளனென்றும் என்னைக் கட்டிவந்தார் கண்டீரே
வெள்ளிமலை வீற்றிருக்கும் விமலனே போற்றியென்பான்
புள்ளேறும் நாரணனே கேசவனே போற்றியென்பான்

அன்னத்தின் மீதேறு மயனே சரணமென்பான்
வன்னக் கிடாவேறும் மறலியே போற்றியென்பான்
நந்த வனத்தருகே நான்கிடந்து தூங்கையிலே
இந்தவிதி வந்ததென்ன ஈசனே போற்றியென்பான்
கன்ன மிடவறியேன் களவறியேன் பொய்யறியேன்
முன்னாளில் செய்குறைகள் மீண்டதோ வென்றயர்வான்
மைந்த ரிழந்தேன் மனைவி தனையிழந்தேன்
சிந்தையுடன் நந்தவனச் செடியருகே வந்திருந்தேன்
ஆண்டிப் பரதேசி யாருமற்றான் ......
பண்டாரங் காப்பாற்றி யன்னம் பகுந்து தந்தார்

நந்த வனத்தொழில்கள் நான்செய் திருக்கையிலே
இந்தவிதி வந்ததென்ன ஈசுரனே யென்றயர்வான்
வம்பனிவன் பொல்லாத மாய்மாலக் கள்ளனிவன்
அம்புவியை யாளுகின்ற அரசர்முன்னே தள்ளுமென்றார்
தள்ளி யடித்தார் தார்வேந்தர் முன்புசென்றார்

பள்ளியறை தனிலே கன்னமிட்ட பாவியிவன்
துள்ளி விழவெட்டித் துண்டிக்க வேணுமென்பார்
கள்ளரிலுங் கள்ளனிவன் காருடக் கள்ளனிவன்
அணைக்கரையில் நந்தவனத் தாண்டியென்றும் பேரிடுவான்
இணக்கமுள்ள கள்ளர்வந்தா லிவன்முன்னே சென்றிடுவான்
ஆசாரக் கள்ளனுட பாசாங்கைக் கேளாமல்
நேசமுடன் வெட்டி நெடுங்கழுவி லேற்றுமென்பார்
பொக்கிஷத்தி லுள்புகுந்து பூஷணங்க ளுள்ளதெல்லாம்
சொக்குப் பொடிபோட்டுக் கத்தரித்த கள்ளனிவன்
இன்னஞ் சிலநேர மிங்குவிட்டு நாமிருந்தால்

அண்ணாக் கற்றோடே வானுலகம் போய்விடுவான்
கையுங் களவுமதாய்க் கண்டோ மிவனன்களவை
மெய்யார வெட்டி லேற்றிக் கழுவிடென்பார்
கைய்யாரக் கண்ட கள்ளனிவ னென்றுரைப்பார்
செய்யலா மென்று சிவந்தகண்ணால் தானோக்கி
மன்னருடன் மந்திரிமார் வல்லபேர் தான்கூட்டி
கள்ளன் முகம்பார்த்துக் கருதி மிகநோக்கி
வந்த வகையேது மாளிகையி லுள்புகுந்து
எந்த வகையெடுத்தாய் எத்தனைபேர் கூடவந்தார்
சிந்தை கலங்காமல் செய்தியெல்லா முள்ளபடி

வந்த வரலாறும் வகைதொகையுஞ் சொல்லுமென்றார்
அந்த மொழிகேட்டு ஆனகள்ள னென்சொல்லுவேன்
எந்தவிதஞ் சொன்னாலு மேற்குமோ மன்னவரே
கையார மெய்யாரக் கையில் களவோடே
அய்யா தலையாரி யன்பாகத் தான்பிடித்தான்

கட்டோடே விட்டிருக்கக் காரியம்நா னென்சொல்லுவேன்
வெட்டிவிடக் காரியமே வீணிலெ(ன்ன சொலுவதற்கு)
எத்தனைநான் சொன்னாலு மேற்குமோ ரா(சாவே)
உற்றாருங் கள்ளர்தனக் குண்டோ வுலகமதில்
பெற்றார் பிறந்தாருங் கள்ளனென்றால் பேசுவரோ

சித்தத்துக் கேற்றபடி சீக்கிரத்தி லேயறுப்பீர்
துண்டிச்சுப் போட்டீரால் துன்ப மொழிந்திடுவேன்
என்று சொல்லக் கேட்டா ரிறையோனும் மந்திரியும்
கள்ள னிவனுமல்ல கன்னமிட்டான் தானுமல்ல
கொள்ளையிட்ட கள்ளரிவன் குச்சருகே வைச்சுவிட்டு

ஓடிப் பிழைத்தா ருபாயமாய்க் கண்டீரோ
தேடிய காவலவர் திடமாய்த் தடத்துவழி
கூடியே யோடினார் குச்சருகே போனமுதல்
தேடி யெடுத்தார் திரவியத்தைப் பொட்டணமாய்
கன்னமிட்ட கள்ளனென்று கையோடே கையிறுக

மன்னவனே கட்டிவந்த வகையிதுவே யல்லாமல்
உள்ளபடி யென்றுரைத்தா ருண்மையுள்ள மந்திரிமார்
கள்ள முறைசெய்த காவலவ ரென்சொலுவார்
கைய்யாரக் கண்டகள்ளனைக் கழுவேற்றிப் போடாமல்
அய்யா நகர மடியேனுங் காவலில்லை
இன்றுநான் போறே னென்றே யெழுந்திருந்தான்
நன்றடா காவலரே நானுரைக்கக் கேளுமென்றான்
மந்திரிமார் சொன்னபுத்தி வாகுடனே கேழ்க்கலையே
எந்தவித மானாலுங் கள்ளனிவன் தானுமல்ல
வழிவிலகித் தூங்கையிலே பழிகள்வந்து சூழ்ந்ததுபோல்

களவுமிவன் வழியாய்க் காணுதில்லை தோணுதில்லை
வெட்டிக் கழுபோட்டால் சுற்றிவிடு ……
திட்டமுடன வர்க்காகச் செப்புவது மெ(த்தவுண்டோ)
காவலரே யுங்களுக்குக் காவல்கட்ட வேணுமென்றார்
பாவனையாய்க் கைகால் பறிப்பதுவும் போராது
அப்பாலு முன்மனதுக் கானபடி செய்திடுவீர்
செப்பினோம் நம்முடைய திருவுளத்துக் கேற்கவில்லை
என்ற மொழிகேட்டு யியல்புடைய காவலவர்
சென்றுதெரு வீதியிலே கொண்டுவந்தார் கள்ளனையும்
எருக்கிலை மாலை யிடுவார் கழுத்தினிலே

திருக்கையுள்ள வள்ளுவனைப் பெருக்கமுர சடியுமென்பார்
கட்டோடே வீதிக் கடைத்தெருவுங் கொண்டுவந்தார்
பட்டணத்தா ரெல்லோரும் பார்ப்(பார்கள் கள்ளனையும்)
துட்டனிவன் கள்ளனிவன் வெட்டிவிட வேணு(மென்றார்)
எட்டு மதில்கடந்து கொள்ளையிட்ட கள்ளனிவன்

சட்டையத்துக் கோவில்கால் பொக்கிஷத்தைத் தானெடுத்தான்
வெட்டிக் கழுவேற்ற வேணுமென்று தானுரைப்பார்
அதிலே சிலபே ரறிந்தோர்க ளென்சொலுவார்
மதிலேறிக் களவுசெய்ய வகையறிய மாட்டானே
அணைத்தலையில் நந்தவன மதிலிருந்த ஆண்டியவன்

இணக்கமுள்ளான் சிவனடியா னிவன்தலையி லிதுவிதியோ
தலையி லெழுத்துப்படி தப்பாதே (என்று)ரைப்பார்
கொலையிவனைச் செய்தாலுங் கொடும்பாவ மென்றுரைப்பார்
அரசருட நீதிகளு மநியாய மென்றுரைப்பார்
துரியமுடன் காவலர் துடுக்காய் நடந்தனரே

## மன்னன் கைகால் வெட்டப்படுதல்

கானகத்தில் கூட்டிப்போய்க் கைகாலும் வாங்கினரே
ஆன வனந்தனிலே யரசனையும் போட்டுவிட்டு
கைகாலும் வாங்கிக் கதறவே தான்கிடக்க
வையகத்துத் தலையாரி வழியே நடந்துவிட்டார்
கானகத்தி லேதனியே கதறுவான் மன்னவனும்

ஆனை யுரித்தோனே யருஞ்சுடரே யற்புதமே
இந்திரனே சந்திரனே ஈசனே போற்றியென்பான்
சுந்தரனே நான்முகனே சூரியனே போற்றியென்பான்
நாரணனே காரணனே நாயகமே போற்றியென்பான்
காரணனே மாயோனே கந்தனே போற்றியென்பான்

கன்ன மிடவறியேன் களவுசெய்ய நானறியேன்
இன்ன மொருபொய் யிதுவரையும் நானறியேன்
களவுநான் செய்யாமல் கட்டுண்டேன் க(ாவலரால்)
பழம்பகையோ நானறியேன் பரமனா ரிட்டெழுந்தோ
எந்தவிதங் கைகா லிழந்தேனோ நானறியேன்

நந்த வனத்தருகே நான்தூங்கும் வேளையிலே
கைகா லிரத்தமுமாய்க் கண்ணிருந் தானோட
அய்யோவென் றென்னை யணைப்பாரு மில்லாமல்
கைகா யிரத்தமுமாய்க் கண்ணிருந் தானோட
வெய்ய வனந்தனிலே வெதும்பி கிடக்கிறதை

மங்கைநல்லாள் கண்டாளால் மயங்கித் தவிப்பாளே
பெண்கொடியாள் கண்டால் (மனது பொ)றுப்பாளோ
கற்புடையா ளெந்தன் கைகால் துணித்ததுவை
செப்பமுடன் கண்டால் சீவ னிழப்பாளே
மங்கைக் கரசே மயிலே குயிலாரே

சங்கையற்ற காடுதன்னில் தனியே புலம்புவனோ
தம்பியரைக் கட்டோடே தள்ளிவிட்டும் வந்தேனே
இன்பமுள்ள தம்பியவர் எங்கே யிருப்பாரோ
தந்தை படுந்துயரந் தம்பிமார் தானறியார்
இந்த வகையறிந்தா லிங்கோடி வாராரோ

கற்புடையாள் கேட்டால் கருதிமிக வாராரோ
என்று மயங்கி யிருந்து புலம்(புகையி)ல்
கண்டா னொருமனிதன் கவ்வைப் படுகிறதை
ஏதடா வண்ணே யிந்தவிதி வந்ததென்ன
ஆதரவு மில்லாம லாருமற்ற பாவியுமாய்

கைகால் துணித்திடவுங் கண்ணாலே நீரோட
வையகத்தி லுந்தனக்கு மனிதரொன்றுந் தானிலையோ
என்றான் வழிபோக்க னின்பமுள்ளா னென்சொல்லுவான்
குன்றா மொழியுடையீர் கோமானே நான்சொலக்கேள்
ஆருமற்ற பாவியெனக் காதார மாருமில்லை

நீரெனக்குத் தாயகமாய் வந்தீர் நெடுவேந்தே
காட்டில் தனியே கதறிக் கிடவாமல்
நாட்டிலே சேர்த்தீரால் நான்பிழைப்பே னென்றுரைத்தான்

## விருத்தம்

அறுத்தகை ரத்த மோட வரசனு மலறி வீழ்ந்தான்
மறுத்தொரு மனித னெங்கே வழிதனில் தானே வந்தான்
கருத்தினா லவனை வேண்டக் கருணையான் றோளி லேற்றி
தெருதனில் கடையில் வீதி சேர்த்தவா நுரைசெய் வேனே.

## நடை

அந்த மனித னவன்றனையுந் தாமெடுத்து
சிந்தை யுடன்தெருவில் சேர்த்தான் தி... மா...
அய்யோ சிவனே யரனே யபயமென்றான்

கைகா லிரத்தமதைக் கண்டார்கள் நாலுபேரும்
காயங்கள் கட்டவென்று கண்டவர்கள் தானினைந்து
தாயகம்போல் நல்லெண்ணை தளபாடமும் வாங்கி
கட்டிமிக வொத்தலிட்டுக் கடுப்புமே யாத்திவிட்டார்
இட்ட முடனொண்டிக் கிடந்தா ணியல்புடனே

## செக்கான் ஆதரவு

செக்கா னொருவன் சிறப்பாக எண்ணைகொண்டு
விற்க விலைகூறி வீதிதனில் வந்தனனே
அப்போது செக்கா னறுபட்ட நொண்டிதன்னை
செப்பமுடன் கண்டான் செயலற்று நின்றானே
எங்களுட செக்கடி யின்பமுட னோ(ட்)டித் (தான்)

சங்கையுட னுந்தனுக்குச் சாப்பாடு தந்திடுவோம்
புண்ணாக்கு மெண்ணைகளும் போதரவாய் நாம்தருவோ(ம்)
எந்நாளு மங்கே யிருக்கலா மென்றுரைத்தார்
நல்லதென்று மன்னவனும் நாடியவன் சொற்படியே
மெல்லமெல்ல வேநடந்து செக்கடியில் வந்திருந்தான்

அந்தப் படியே யமர்ந்திருந்தான் மன்னவனும்
சொந்தத் தலமதுவாய் சுகமுடனே தானிருந்தான்
பலகை தனிலிருந்து வல(மாக வந்திடுவா)ன்
நலமுடையா னமுதுகறி நன்(றாக ஈந்)திடுவான்
எண்ணையுடன் பிண்ணாக்கு மின்பமுடன் தான்கொடுப்பான்

தின்று மிகவாய்ச் சிறப்புடனே தானிருந்தான்
வண்ணப் பரியேறி வீதிவட்டம் வந்ததுபோல்
எண்ணைப் பலகையிலே ஏறிவட்டம் வந்தானே
மன்னவனு மிங்கிருந்தான் மங்கையருங் கெங்கையுட(ன்)
தன்னுடைய காவலென்று மரக்கலத்தே தானிருந்தாள்

மைந்த ரிருபேரும் ஆயர் மனைசேர்ந்து
சொந்தமுடன் பாலமுது சுகமா யனுபவித்தார்
ஒருவ ரிருந்திடத்தை யொருவ ரறியாமல்
திருவுளத்தி னாலே திசைதோறுந் தானிருந்தார்
இந்தப் படியே யிருக்குமந்த நாளையிலே

மைந்தருடன் மன்னவரும் மங்கையருந் தட்டழிவை
மாயோன் சிவனார் மலரோனுந் தானறிந்து
துயர்மது தீர்க்கவென்று தோன்றுங் கதையுரைப்பேன்

## விருத்தம்

வெள்ளியங் கிரிதனில் விமலனு மயனு மாலும்
வள்ளலிந் திரனுந் தேவர் வானவர் முனிவோர் கூடி
உள்ளது விதியன் றன்னை மதியினா லுலைக்கப் போமோ
புள்ளுள்ளான் மதியி னாலே விதியினைப் போ(க்)கு மென்றார்

## தேவர்கள் விதியை ஆய்தல்

### நடை

சிவனு மயனுந் திருமாலு மிந்திரனும்
புவனமுள்ள தேவர் முனிவோர்க ளெல்லோரும்
சத்தரிஷி சித்தாதி சகலகுல தேவதைகள்
கர்த்தன் சிவனார் கயிலாசப் பொன்மலையில்
பத்தி யுடன்கூடிப் பரம ரகசியங்கள்
சித்த முடன்பேசிச் சிறப்பா யிருக்கையிலே
சிவனொரு மப்போதுத் திருமாலைத் தானோக்கி
சபதமொன்று கேழ்க்கிறேன் தானுரையும் நாரணரே

விதிபெரிதோ மதிபெரிதோ விதியைமதி வென்றிடுமோ
அறியேமிது வென்றுரையீ ராதி நாரா(யணரே)

## திருமால் மதியே பெரிது எனக் கூறுதல்

விதியினா லாவதில்லை வென்றிடலாம் மதியாலே
மதியினுட வலுக்கண்டால் விதிமயங்கிடுங் கண்டீரே
என்ற மொழிகேட்டு யிறையோன் பிரமா(னை)வ
சென்று முகம்நோக்கிப் பெருமாள் செப்பினது கேட்டீரே

## பிரமன் விதியே பெரிது எனக்கூறுதல்

கேட்டேன் சிவனே கிருபையுடனே சொல்லுகிறேன்
வட்ட மிடுங்கெருடன் வாகனத்தார் தானுரைத்தார்
துட்டப் பிரகிருதி சொன்னதே யல்லாமல்
சட்டமுட னவ்வார்த்தை சபைக்குநெறி நில்லாதே

விதியே விதிப்படியே பிரம(ன்முடி) யல்லாமல்
மதியினால் பலத்தினால் வல்லமையால் தள்ளாதே
என்று பிரமர் விவ்வார்த்தை தானுரைக்க
கண்டறிய வேணுமென்று கர்த்தனா ரென்சொல்லுவார்
சென்றழைத்து நாரதரைச் சீக்கிரத்தில் நாட்டினில்போய்
கண்டுநீர் வாருமெனக் கற்பித்தார் சங்கரனார்
பூலோகந் தன்னில் நடக்கும் புதுமைகளை
சீமானே பார்த்துவந்து செப்பிவிடு மென்றுரைத்தார்
நல்லதென்று நாரதரும் நாட்டினார் பூவுலகில்
வல்லபிரான் நாரதரு மாற்றுருவும் வேற்றுருவார்
பார்தனிலோர் வேந்தனுட பட்டணத்தில் வந்தனரே
வாரமுடன் நாரதரு மறுகோலங் கொண்டுநின்று
பட்டணத்தி லேயளப்புப் பலவகையுங் கேட்டதிலே
திட்டமுட னங்கொருவன் செப்பினா னுள்ளபடி
வண்ண மகள்தனக்கு மணமாலை செய்யவென்று
இந்நகரம் பட்டணங்க ளெங்கு முரசறைந்தார்
இன்றுமுதல் மூன்றுநா ளிட்டார் முகுர்த்தமது
அன்று முகுர்த்தமதி லானமணக் கோலமென்று
மன்னருடன் பிறந்தாள் மகனுக்கு மாலையிட
பொன்னகரம் பட்டணங்கள் புதுப்பிக்க வேணுமென்றார்
மன்னருட பெண்கொடியா ளண்ணருட மைந்தனுக்கு
அன்று முகுர்த்தமதில் வண்ண மணக்கோலம்
செய்யவே வேணுமென்று சீருடையாள் தானினைந்தாள்
அய்யன் பிரமலிபி யாருக்கோ நானறியேன்
என்றுரைத்தா னந்தமொழி யின்பமுடன் தான்கேட்டு
சென்று நடந்தார் திசைநோக்கி நாரதரும்
கண்டார் சிவனாரைக் காரணங்க ளுள்ளதெல்லாம்
விண்டார் படிப்படியே வி(பரங்கள் அனைத்தையுமே)
அப்பொழுது ஈசுரனா ரந்தணரைத் தானோக்கி
செப்பரிய நாரதனார் செய்திசொன்ன மங்கையர்க்கு

## ஆளையூர் மணச்சிக்கல்

மன்ன னுடன்பிறந்தான் மகனோ மணவாளன்
அந்நகரில் பெண்கொடியா ளண்ணன் மகனோதான்

இருவர்தனில் மணவாள னின்னதென்று சொல்லுமென்றார்
கருவில் விதித்தபடி காரணரே சொல்லுமென்றார்.
அப்பொழுதி லேபிரம னவள்கணக்குத் தான்பார்த்து
செப்புகிறேன் கேளுஞ் சிவனே திருமாலே
முப்பத்து முக்கோடி தேவர் முனிவர்களே
கற்பக நாடாளுங் காரணனே யிந்திரனே
எல்லோரும் நன்றா யியல்புடனே கேளுமென்றார்
வல்லவரே அந்நகர் மங்கையிளங் கன்னியர்க்கு
மன்னனு டன்பிறந்தாள் மகனாருந் தானுமல்ல
கன்னியுட னண்ணன்மகன் காவலனுந் தானுமல்ல
இருவர்களு மல்லாம லேந்திழைக்கு மாலையிட
திருமணக் கோலஞ் செய்வானைச் சொல்லுகிறேன்

## பிரமன் ம்னனே மணவாளன் எனக்கூறுதுல்

க்னிக்கு நாம்விதித்த கணவ னிருப்பிடந்தா்ன்
அந்நகருக் கப்பாலே யம்பத் தறுகாதம்
தூர வழிதனிலே தொல்புவியை யாண்டிருப்போன்
சீருடையான் பட்டணத்தே வாணியாதன் செக்கடியில்
கைகா லறுப்பட்ட கள்ள முடவனவன்
வையகத்தில் செக்கடித்து வயிறு பிழைத்திருப்பான்
திக்கற்ற பாவி திறமில்லான் மாமுடவன்
செக்கடித்துக் கூலிகொண்டு சீவன் பிழைத்திருப்பான்
அந்த முடவனுக்கு அந்நாள் விதித்தவிதி
சிந்தையுடன் மூன்றாம்நாள் செப்புவதே தன்முகுர்த்த(ம்)
என்று பிரமர் லியல்பா யுரைத்த பின்பு
நன்றியுள்ள ஈசுரனார் நாரதரைத் தான்பார்த்து
மூவருடன் தேவர் முனிவோரு மிந்திரரும்
பாவிகள் நன்றாய்ப் பலபயனுங் கேட்டீரோ
இந்த அதிசயங்க ளெல்லோருங் கேட்டீரோ
அந்தப் படிமுடவ னவனைமணஞ் செய்தானால்
பிரமன் விதித்தவிதி பேதலிக்கப் போகாதே
அயனாலு மரியாலு மயன்விதியைத் தள்ளாதே
சிந்தை யுடன்முடவன் சேர்ந்துமண(ஞ்) செய்யானால்
வந்த அரிநாரணனார் மதியே பெரி(தென்பார்
இந்த மொழிசொல்லி ஈசுரனார் தாமெ(னெழுந்து)

சிந்தையுட னவரவரே சிறப்பா யெழுத்த(ருள்வீர்)
வந்ததொரு மூன்றாம்நாள் வாருங்கோ விவ்விடத்தே
சோதனைகள் பார்க்கத் துலக்கமாய் வந்திடுவீர்
ஆதிமுதல் தேவரெல்லா மவரவர்கள் பதிசேர்ந்தார்
மாயோனுந் தானேகி வைகுண்டஞ் சேர்ந்தனரே
ஆயவனார் வைகுண்டத் தங்கே யிருந்தபின்பு
அன்று கழித்து அடுத்தநா ளானவுடனே
நன்றியுள்ள மாய வனார் நற்கெருட(னைப்) பார்த்து

## திருமால் கருடனை ஏவுதல்

மாயக்கெரு டனையுமவர் வரவழைத்தங் கேதுசொல்வார்
பாயங்கெரு டாழ்வாரே பட்டணத்துச் செக்கடியில்
மானிடவ னோர்முடவன் செக்கிருந்து மாடடிப்பான்
ஆன முடவனைத்தா னாகாசத் தேயெடுத்து
தேவர் மகாரிஷிகள் திசைமுகனுங் காணாமல்
மூவர் முதலான மூர்த்திகளுங் காணாமல்
சத்த சமுத்திரங்கள் தான்கடந்து மப்பாலே
மெத்த யிருளா யிருக்குமந்த வீணாட்டில்
ஒளித்து வரவேணு முண்மையுடன் சொல்லுகிறேன்
பழித்த முடவனுக்குப் பரவசமும் நான்சொல க்கெள்
அன்று கழித்தவுட னவனிருக்குஞ் செக்கடியில்
சென்றெடுத் துமங்கே திரும்பிடுவோ மென்றுசொல்லி
நல்லதென்று சொல்லி நடனமிட்டார் நற்கெருடன்

## கருடன் மன்னனை ஒளித்து வைத்தல்

வல்லவனு மன்றுவிட்டு மறுநா ளானபின்பு
பாதியிர வானபின்பு பதினாறாம் நாழிகையில்
ஆதி கெருடனவன் ஆர்ப்பரித்துக் கொக்கரித்(து)
சிறகுதட்டிப் பாய்ந்து செக்கடியில் (வீற்றிருக்கும்)
அறிவுடைய நொண்டிதனை யாகாசத் தேயெடுத்தார்
செக்குடையார் பெண்பலர்கள் திகைத்து மிகப்பார்த்து
பக்குவமாய் நாமும்நின்றால் பருந்துவந்து தூக்குமென்று
ஓடி மனைபுகுந்தா ருற்பனமாய்த் தாழுமிட்டார்
தேடி யெடுத்தபிரான் திரைகடலெல் லாங்கடந்து

சத்த சமுத்திரங்கள் தான்கடந்து மப்பாலே
சித்தாதி சஞ்சரியாத் திரண்ட யிருட்டறையில்
கொண்டங்கே வைத்தான் கும்பிட்டா னம்முடவன்
குன்றெடுக்குந் தோளானே கோமானே நானடியேன்
கன்றிழந்த மானதுபோல் கதறு(வான்) யிவ்வி(டத்தே)

உண்டிருக்கக் காணேன் ஒருவர் துணைகா(ணேன்)
செக்கடியில் பிச்சையினால் சீவன் பிழைத்திருந்(தேன்)
மிக்கதொரு செக்கடிக்கும் வினைவந்து சூழ்ந்ததய்யோ
அய்யா பெருமாளே அண்டமெல்லா முண்டவனே
வையகத்தை யோரடியா யளந்தார்க்கு வாகனமே.

அய்யமிட நாதியில்லா வறியகொடு வனந்தனிலே
வையகமெல் லாமிருக்க மாபாவிக் கிவ்விடமோ
செய்ய கமலத் திசைமுகவன் தான்விதித்தான்
அய்யாவே யிப்பொழுது யடி(யேன்) பசிதீர
செய்கை யுடன்தந்தீரால் சீவன் பிழைத்திடுவேன்

கைகால் முடவனவன் கதறுகின்ற சத்தமெல்லாம்
மெய்யாய் கெருடாழ்வார் விபரமாய்த் தான்கேட்டு
செய்கையுட னிரக்கம்வந்து திருவுளத்தில் தோன்றியதால்
நன்றடா வுன்பசிக்கு நாமுமிரை தந்திடுவோம்
சென்றுதான் நாளையுன்னைச் செக்கடியில் சேர்த்திடுவோம்

என்றுசொல்லி யேகருட னேகிப் பறந்தனனே
நன்றியுள்ள பூவுலகம் நாக லோகந்தீவில்
தேடி யிரைப்பார்த்துத் திசைநாலுந் தான்திரிந்தார்
நாடிமிக மன்னருடன் நாடுதன்னை நோக்கிவந்தார்
ஆளையூர் மன்னன்மக ளாயிழைக்கு மணக்கோலம்

வேளை நடந்த விபரமது செப்புவனே

## ஆளையூர் மணக்கோலம்

மன்னனுட மகளார் மங்கையிளங் கன்னியர்க்கு
அந்நகரில் மணக்கோல மாயிழைக்குச் செய்யவென்று
மன்ன னுடன்பிறந்தாள் மகனார்க்கு நேமமிட(வே)
அந்நகர மெல்லாம் அலங்காரஞ் செய்தது

பட்டணங்க ளெல்லாம் பாரமணக் கோலமிட்(டார்)
திட்டமுடன் தோரணமுந் தேரு மலங்கரித்து
வன்னமணிக் கோவில்கால் மாளிகையும் பந்தலிட்டார்
பொன்னகர மெல்லாம் பூசினார் வெள்ளையிட்டார்
கோலமு மிட்டுக் குறிச்சிநிலைத் தேருமிட்டார்
வேழையிட்ட சேலைகளும் மேல்கட்டி கட்டிவைத்தார்
வாழைக் குலைகரும்பு வகைவகையாய்த் தானணிவார்
வேளைக்கு வேளை விதானங்கள் கட்டுவித்தார்
அடுத்த நகரத் தரசாளு மன்னவர்க்கு
கொடுத்தனுப்பி னாரோலை கொங்கைமணக் கோல்மென்று
அந்தணர்க ளாசாரி புரோகிதரும் வந்தன(ரே)
சொந்தமில்லோர் தாம்பெரியோர் சேரமணக் காலில்வ(ர)
இந்தப் படியே யிவர்கள் சிறப்பானதுே(ம)

## ஆளையூர் அரசியின் சூழ்ச்சி

இப்படியே சோபனமாய் யிருக்குமந்த வேளையிலே
செப்போ டிளமுலையாள் செய்தகதை நானுரைப்பேன்
மங்கை யவளண்ணன் மகனுக்குப் பெண்கொடியைச்
சங்கையுடன் கபடமாய்த் தானனுப்ப வேணுமென்று
மன்ன ரறியாமல் மற்றுள்ளோர் காணாமல்
கன்ன மிடுவார்போல் கருத்திலே தானினைந்து
மங்கையர்க் கரசியவ ளண்ணன் மகன்றனக்கு
சங்கையுடன் செய்தபண்டத் தானனுப்ப வேணுமென்று
நாலாறு பெட்டகங்கள் நன்றாய்த் தெரிந்தெடுத்து
பாலும் பழமும் பலகனியுந் தேன்பாகும்
தேங்கனியும் மாங்கனியுந் சிறந்த பலாச்சுளையும்
வானுலகி லுள்ளகனி வகையாக வுள்ளதெல்லாம்
அதிரசமுந் தோசைவடை யப்ப மனோகரமும்
விதவிதமாய்ப் பெட்டகத்தில் விபர முடன்சேர்த்து
போதும் மிகவடைத்துப் பூட்டுக்களுந் தான்பூட்டி
அதிலே யொருபெரிய வானமணிப் பெட்டகத்தில்
தங்கைதனை யிருத்திச் சகல பூஷணமுமிட்டு
மங்கில்ய முண்டுபண்ணி மகளுடைய கைக்கொடுத்து
பட்டுடனே கட்டுவர்க்கம் பலவகையுந் தான்வைத்து

திட்டமுட னாபரணஞ் சிறப்புடனே யங்குவைத்து
மாப்பிள்ளைக் குமுள்ள வரிசைவகைக் கட்டுவர்க்கம்
கொப்புடனே ஆபரணஞ் சேர்த்தார்காண் பெட்ட(கத்தில்)

மாலையுடன் சந்தனமும் மங்கையர்கள் அங்குவைத்தா(ர்)
கோல முடனங்கே குறையறவே தானும்வைத்தா(ர்)
சாந்து புனுகு சவ்வாதுசுகந் தாதிகளு(ம்)
விந்தை விந்தையாக விபரமுட னங்குவைத்தார்
சங்கை யுடையாள் தங்கைநல்ல பெண்கொடிக்கு

அங்கத்துக் குள்ள ஆபரணஞ் சேகரித்தாள்
கட்டுவர்க்கம் பட்டாடை கட்டுமட்டா யங்குவைத்தாள்
மருகனார்க் குள்ளபடி வகைவகையா யாபரணம்
ஒருவர் விலைமதியாக் கட்டுவர்க்க முள்ளவைத்தார்
ஆயுதமுங் கேடகமு மதுக்கான தட்டுமுட்டும்

தேய்வுப் பிறைபோலே சேகரித்த வில்லுமம்பும்
உள்ளபடி யில்வகைக ளொன்றுகுறை வாராமல்
வள்ள லரசியவள் வகையுடனே யங்குவைத்தாள்
தங்கத்தாம் பாளத்தில் சாதம்பல வெஞ்சனமும்
இங்கிதமா யாலின்பா லினியபலாச் சுளைகளும்

சீனியுடன் சர்க்கரையுந் தேங்கனியு மாங்கனியும்
வானகத்தி லுள்ளகனி வகையுடனே யங்குவைத்தாள்
அடைக்காயும் வெள்ளிலையுந் சிறப்பாக அங்குவைத்தாள்
மடக்கொடியாள் தன்கையிலே மாலை. யிடவகைகள்
மாலை கொடுத்தாள் மங்கிலியந் தான்கொடுத்தாள்

சேலைக் குழலார்க்குச் செய்திவகை செப்பலுற்றார்
மாதா வுரைக்குமொழி வகையுடனே கேழ்க்கலுற்றாள்

## இளவரசிக்கு அரசியின் அறிவுரை

பேதை மயிலாரே பெண்கொடியே நீர்கேளீர்
பெட்டகத்தி னுள்ளிருத்திப் பூட்டி யனுப்பிடுவேன்
திட்டமுடன் பெட்டகத்தில் பூட்டுத் திறந்திடுவார்

அவரே மணவாளன் அவர்கழுத்தே மாலையிடும்
சிவனறிய மங்கிலிஞ் சிறப்புடனே கைகொடுத்து
மங்கிலியங் கட்டிடுவா ரவரே வாச்சமணவாளன்
தங்கக் கூழவமுதைப் பொங்கமுட நீரெடுத்து
செங்கையினால் மன்னர்முன்னே சிறப்பாக வைத்திடுவீர்

அங்கிருக்கும் பலாச்சுளை யதுவும் படைத்திடுவீர்
பன்னீரில் தண்ணீர் பரிவுடனே தான்கொடுப்பீர்
மன்னவர்க்குச் சந்தனமும் வாடைகளுந் தான்கொடுப்பீர்
அடைக்காயும் வெள்ளிலையு மன்புடனே தான்கொடுப்பீர்
திடமுடனே கட்டுவர்க்கஞ் சேகரத்தி லுள்ளதெல்லாம்
ஒன்றுகுறை வாராம லுள்ளதெல்லாந் தான்கொடுத்து
கண்ணுமணி துஞ்சாமல் கணவனுட னேயிருந்து
மதனக் கலவியுடன் வகைகள்செய்து தானிருப்பீர்

## பெட்டகத்துள் இளவரசி

இதமுடனே மங்கையர்க்கு எல்லாம் வகையுரைத்து
பெட்டகத்துக் குள்ளிருத்திப் பூட்டினாள் பெட்டகத்தை
திட்டமுடன் நாலாறு பெட்டகமுஞ் சேகரித்து
தங்கையுட பெட்டகத்தைச் சுமக்குமவன் றன்னுடனே
கொங்கைநல்லா ளந்தரங்கங் கூறி யனுப்பினளே
அண்ணன்மக னென்மருக னவர்முன்னே வைத்திடுவீர்
மன்னவனே பெட்டகங்கள் மாறாட்டம் வாராமல்
என்றுசொல்லித் தானே யியல்பாய் அனுப்பிவிட்டாள்
நன்றுடனே பெட்டகங்கள் நாலாறு தானெடுத்து
பெட்டகங்கள் கொண்டு புறப்பட்டார் வீதியிலே

## பெட்டகத்தைக் கருடன் தூக்கிச் செல்லுதல்

இட்டமுடன் பெட்டகத்து வாச மிகவெழும்பி
வட்டமிடுங் கெருடன் வாசமெல்லாந் தான்கேட்டு
பெட்டகத்தில் போசனம் போகுதென்று தானறிந்து
மின்னிருக்கும் பெட்டகத்தை வேகமுட னேபறித்து
தான்காத் துள்ளோர் தரணியுள்ளோர் பார்த்திருக்க
வேக முடன் பறந்தான் மேதினியெல் லாமதிர
தாக முடன்முடவன் தானிருக்கு மவ்விடத்தே
கொண்டுவந்து தான்கொடுத்தான் கோலக் கெருடனவன்
நன்றிது போசனம் நல்லபண்ட முள்ளதெல்லாம்
உண்டு பசியாறி யொருபொழுது நீயிருந்தால்
மண்டலத்தி லந்நகர் செக்கடியில் வைத்திடுவேன்
என்றுசொல்லி யேகெருடன் ஏகினார் மாயரிடம்

விண்டபடி செய்துவந்தேன் விண்ணப்ப மென்றுரைத்தான்
முடவன் பசியாலே பெட்டகத்தின் முன்புசென்று
திடமாகப் பெட்டகத்துப் பூட்டைத் திறக்கவிட்டு
பெட்டகத்து மூடிதனை யொத்தக்கை யால்திறந்தான்

## இளவரசி மன்னனுக்கு மாலையிடல்

திட்டமுடன் பெண்கொடியாள் சிறப்பா யெழுந்திருந்தாள்
கண்டான் முடவனவன் கன்னியிளம் பெண்கொடியை
அண்டாமல் தூர வகலப்போய்த் தானிருந்தான்
எந்தவிதிக் காரணமோ என்றுமிகத் தான்பதறி
நந்த வனத்தருகே நான்கிடந்து தூங்கையிலே
கன்னமிட்ட கள்ளனென்று கட்டி யிழுத்தடித்து
அந்நகரங் காவலவர் அறுத்தார்கள் கைகாலை
அந்தப் படியே ஆயர் மணிக்கெருடன்
எந்தன் தலைக்கு யிந்தவினை விட்டாரோ
இன்னங் கலிய னென்னைவிட்டு நீங்கலையோ
மன்ன னிதுசொல்லி மயங்கினா னப்பொழுது
மங்கை எழுந்திருந்து மாலைகையில் தானெடுத்து
சங்கையுடன் மன்னவனார் தன்கழுத்தி லேபோட்டாள்
அப்போது மன்னவனார் அறுபட்டேன் நான்முடவன்
செப்பிலிளங் கொங்கை மின்னாள் சிறப்புக்கு மோறாதே.
பார்த்தார் நகைப்பார்களே பலபேருங் கொஞ்சமென்பார்
அத்து மீறாதே யிணக்கமதாய்த் தோணாதே
என்று மொழிகேட்டு யியல்புடையா ளென்சொலுவாள்
நன்றிதுகாண் சொல்லுகிறேன் நாயகரே நீர்கேளீர்
மாதா வுரைத்தமொழி மாறுவனோ மங்கைநல்லாள்
ஆதரவாய் நீரெனக்கு யமைந்தமண வாளர்கண்டீர்
பேதலிக்க வேண்டாங்காண் பிரியா விடையாக
ஆதரவா யொன்றா யமர்ந்திருந்து வாழ்ந்திடலாம்
காலுமற்றார் கண்ணுமற்றார் கையுமற்றா ரானாலும்
மேலுடம்பு புண்புழுவாய் மிகநாற்ற மானாலும்
மலரோன் விதிமன் னவரே தப்பிடுமோ

தலையில் விதிமுறைகள் தப்பாது மன்னவரே
மாதாவின் வாக்கியங்கள் தப்புவரோ மன்னவரே
பேதலிக்க வேண்டாங்காண் பெருமாளே யென்றுசொல்லி
மங்கிலியந் தானெடுத்து மன்னவனார் கைக்கொடுத்தாள்
கெங்கையுடன் பூவுலக மாகாசஞ் சாட்சியுமாய்

கட்டுமென்று பெண்ணரசி கற்புடையாள் தானுரைத்தாள்
திட்டமுடன் மன்னவனுஞ் சேயிழையாள் தன்கழுத்தில்
ஒருகையால் மங்கிலியம் உண்மையுட னேகழுத்தில்
திருவுடையா ரங்குவைக்கச் சிறப்புடையாள் கட்டினளே
பட்டு மெடுத்துடுத்திப் பலபூஷ ணமுமிட்டாள்

திட்டமுடன் மன்னவரைச் சிறப்பா யலங்கரித்தாள்
சாந்து புனுகு சவ்வாது மெடுத்தணிந்தாள்
ஏந்து தனத்தா வியல்புடனே அன்னமிட்டாள்
வேண்டு மறுசுவையும் விபரமுடனே படைத்தாள்
நின்றா ளருகே நேமமுடன் பெண்கொடியாள்

பசிதீர்ந் தெழுந்திருந்தார் பார முடிவேந்தன்
ரசனையுடன் மீதியெல்லாம் நங்கையார் தானுமுண்டாள்
அன்னை சொல்லுமாறாம லடைக்காயும் வெள்ளிலையும்
சின்னஞ் சிறுநுதலாள் சிறப்பாய்க் கொடுத்திடுவாள்
மன்னவரும் மங்கையரும் மனசிரண்டு மொன்றாகி
அன்னை மொழிப்படியே யமர்ந்திருந்தாள் பெண்கொடியாள்
இந்தப் படியே யிருபேரு மங்கிருந்தார்
அந்தப் புரத்தே அரனார் கயிலையிலே
வெள்ளி மலைதனிலே விமலனார் தன்னருகே
வள்ளலார் சொன்ன(மொழி) வகையறிய வேணுமென்று
நாரணனா ரிந்திரனார் நான்முகத்தோன் யெல்லோரும்
வாரணனார் தேவர்முனி மகாரிஷி களுங்கூட
மறலி நவக்கிரகம் சத்த மகாரிஷிகள்
குறையறவே யெல்லோருங் கூடிக் கயிலையிலே
முந்த(ா)நாள் சொன்ன மொழியறிய வேணுமென்று

கந்தமலர்க் குழலாள் கன்னி மணக்கோலம்
எந்த விதமா யியல்பு நடந்ததென்று
வந்தமுனி நாரதரை மகாதேவர் தானழைத்து
அந்த நகர்தனில்போ யளப்பறிந்து வாருமென்றார்
சிந்தையுடன் நாரதருஞ் சீக்கிரத்தி லேயேகி

அந்நக ரஞ்சேர்ந்து அந்தமொழி முன்னுரைத்தோன்
மன்னனுட இல்லிடத்தில் வந்தாரொரு ஆண்டிகள்போல்
இல்லிடத்தில் மன்னவனை யியல்பாகத் தானழைத்து
வல்லவனே முன்னுரைத்த வகையறிய வந்தேன்காண்
மங்கை சிறப்புடையாள் மணக்கோலஞ் செய்தவகை

செங்கையுள்ள மன்னவனே அந்தவகை செப்புமென்றார்
சிந்தை மணக்கோலஞ் சிறப்பாய் நடந்தகதை
அந்தவகை சொல்லுகிறே னாண்டவரே கேளுமென்றார்
மன்னர் மருகனுக்கு மாலையிட வேணுமென்று
அந்நகர மெல்லாம் அலங்கரித்த வாதுகளும்

இன்றுதயந் தன்னி விவ்வரசன் பெண்கொடியாள்
வண்டார் குழலாள் மாதுநல்லாள் பெண்கொடியாள்
பெண்புத்தி யாலே பிழைகேடு செய்தகதை
கண்படைத்தார் காண்பார்களோ கன்னிசெய்த நெட்டூரம்
அந்த அதிசயத்தை அண்ணலே கேளுமென்றார்

இந்த அதிசயங்க ளில்வுலகில் கேட்டதில்லை
மங்கையுட அண்ணானார் மகனுக்குத் தன்மகளை
செங்கை மணக்கோலஞ் செய்யவே வேணுமென்று
மன்னவர்க்குப் பெண்கொடியாள் வஞ்சனைகள் தானினைந்து
கன்னி கொழுதனுக்குக் கத்த துரோகமுமாய்

கொண்டமான வாளனுக்கு ரண்டுசெய்த காரணங்கள்
என்று விடியுமந்தக் காரணத்தை யென்சொலுவேன்
மன்னுலகம் பூவுலகம் வானுலக முள்ளமட்டும்
கன்னிசெய்த நெட்டூரங் கல்வெட்டாய் நின்றிடுமே
பெட்டகங்க ளுண்டுபண்ணிப் பொற்கொடியை யுள்ளேவைத்து

திட்டமுட னண்ணன் மனைசேர அனுப்பிவித்தாள்
அண்ணர் மனைநோக்கி அவ்வீதி போகையிலே
வண்ண மணிக்கெருடன் வட்டமிடு மேலோடி
கன்னியுடன் பெட்டகத்தைக் காலால் மிகத்தூக்கி
இன்னிதிசை.யின்னதல மிவ்விடத்தில் போச்சுதென்று

## ஆளையூர் அரசன்-அரசி துயரம்

மன்னவனே யொன்றும் வகையறிய மாட்டாமல்
கன்னியுடன் மன்னவனும் கலங்கி மெலிந்துவிட்டார்
பெண்ணரசி கேட்டாள் பேதைமன்ம் பேதலித்தாள்

விண்ணதர மண்ணதிர விரித்தாள் முடியவிழ்த்தாள்
கொங்கை தனிலிடித்தாள் கோவென்றே கதறிடுவாள்
செங்கை வளைநெரிப்பாள் திசைநாலும் பார்த்தயர்வாள்
மங்கையரே யென்னைவிட்டு வானுலகஞ் சேர்ந்தாயோ
தங்கையரே யென்னைவிட்டுத் தனிவழியும் போனாயோ
என்னை மறந்தாயோ என்னாசை விட்டாயோ
இந்நகரம் விட்டனையோ அந்நகரஞ் சேர்ந்தனையோ
மணக்கோலஞ் செய்யவென்று மங்கையரே யுந்தனைநான்
இணக்கமுடன் பெட்டகத்தி லிருத்தி யனுப்பினனே
இடைவெளியில் மாய னெடுத்தோடிப் போனகதை
படைத்தவனே யெனக்குப் பலனிதுவோ யென்றயர்வான்
மன்னவர்க்கு ரண்டுபண்ணி வஞ்சகங்கள் செய்தேனே
தென்னவர்க்கு வஞ்சனைகள் செய்தபலன் கண்டேனே
கொண்டவர்க்கு ரண்டுபண்ணி குத்திரங்கள் செய்தபலன்
வண்டார் குழலாள் மங்கையரை நாவிழந்தேன்
காண்பேனோ யிப்பிறப்பில் கண்மணியை யென்றயர்வாள்
வீண்பாக போக்கடித்தேன் மெய்யநல்லாள் தங்கையரை
என்று மயங்கிவிட்டா ளேந்திழையுந் தானயர்ந்தாள்
நன்றியுள்ள மன்னவனும் நங்கையரைத் தான்தேடி
பெண்ணணங்கே யுன்னைப் பெற்று வளர்த்தேனே
வண்ணமணிப் பெண்கொடியை மணக்கோலஞ் செய்யவென்று
இந்நகரம் பட்டணங்க ளெல்லா மலங்கரித்தேன்
பொன்னகரக் காவனத்தே பூவே யுனையிருத்தி
மங்கையரே யுந்தனுட மாலையிடுங் கோலமதை
கண்களிரண் டுங்குளிரக் காண்பேனே யென்றிருந்தேன்
எங்கே பறந்துவிட்டா யென்மகளே யென்றுயர்வாள்
மங்கையரே யெநதனுட(ன்) வாய்திறந்தும் பேசாமல்
சங்கையுட னெங்கே தனித்தவழி போயகன்றாய்
முன்னறியோம் பின்னறியோம் முதுமையோர் சொல்லறியோம்
சொல்லறியோமனை நாமறியோம் துயர மறிந்ததிலைநான்
வண்ணமுடன் மானிடரை வட்டமிடுஞ் செம்பருந்து
கொண்டுதான் போனகதைக் கூறவுந்தான் கேளோமே

கண்டோமே நம்மளவுங் கன்னிசெய்த காரணத்தை
பெண்கொடியாள் செய்தசளம் பேசவுந்தான் நீதியுண்டோ
கண்படைத்தார் காண்பவர்களோ காரணமோ வென்றவர்வான்
மணக்கோலஞ் செய்ததெல்லாம் பிணக்கோல மானதுவே
குணக்கேடாய் பட்டணங்கள் கோவென்ற சத்த(மு)மாய்

இல்லிடங்கள் தோறு மியல்கேடுந் துக்கமுமாய்
அல்லல் துயரமுமா யழுதகுர லோசையுமாய்
மன்னவனார் நின்று மயங்குமந்த வேளையிலே
வின்னமணிப் பொசுத்தமு மார்பிலே முப்புரிநூல்
வந்துநின்று மன்னவர்முன் வாய்திறந்தங் கேதுசொல்வார்

சொந்த மலர்க்குழலாள் சிறப்புடையா ளுந்தன்மகள்
மண்டலத்தி லுந்தனைப்போல் மன்னன்மறு தேசமுள்ளான்
சென்று மணக்கோலஞ் சிறப்புடனே செய்திருப்பான்
இன்றுமுதல் நாளைவரை எழுதிவரு மாளோலை
சென்றுமொழி சொன்னவுடன் சிறப்பாய் வரிசைசெய்தார்

மறையோ னுரைத்தமொழி மன்னவனு முண்மைதாய்
இறையோர்க் கபயமென்று யிருந்தானே மன்னவனும்
இந்த மொழிகளெல்லா மின்பமுள்ள நாரதனார்
விந்தை சொன்னபின்பு மேலினார் நாரதரும்
கயிலை மலைசேர்ந்தார் காரணங்கள் தானுரைத்தார்

குயில்மொழியைத் தான்பருந்து கொண்டேகிப் போச்சுதென்றார்
நன்றி யுடன்சிவனார் நான்முகனைத் தான்பார்த்து
சென்றதிசை நான்முகரே மங்கையெங்கே செப்புமென்றார்
என்றவுடன் பிரமர் வின்பமுடன் தானெழுந்து
நொண்டி யிருப்பிடத்தே மங்கைசென்று தானிருப்பாள்

இருப்பாளே அங்கேயென்று யாகம் முடிந்துயிருப்பாள்
அந்தமொழி கேட்டவுடன் அரனாரும் நாரதரை
சிந்தை யுடன்முடவன் செக்கடியில் தானிருப்பான்
அந்த முடவனிட மாயிழையுந் தான்கூடி
சேர்ந்தது வைப்பார்த்து திரும்பிவர வேணுமென்பார்

நல்லதென்று நாரதரும் அந்நகரந் தான்சேர்ந்தார்
வல்லசெக்கர் செக்கடியில் வந்துதானின்று நாரதரும்

இவ்விடத்தி லேகிடந்த நொண்டிதா னெங்கேயென்பார்
அவ்விடத்தில் நொண்டிகதை அய்யரே கேளுமென்பார்
நேற்றிரவு தன்னில் நெடியமால் வாகனத்தான்

சேர்த்து மிகவெடுத்தான் சென்றதிசை நாமறியோம்
என்றமொழி கேட்டு யியல்புடைய நாரதரும்
சென்றோடி வந்தார் திருக்கயிலை தானோக்கி
அந்நகரில் செக்கடிக்கு மான முடவனெங்கே
வண்ண மணிக்கெருடன் வாரியெடுத் தோடினராம்

அப்போ சிவனா ரயனார் முகம்நோக்கி
செப்பியவா றேதென்பார் திசைமுகனா ரென்சொலுவார்
இத்தனையும் மாயவனா ரிட்டதிருக் கூட்டமென்றார்
கர்த்தனே நாரணரே காரியங்கள் கேளுமென்றார்
கேளுமென்று தானுரைத்த கிருபையுட னெல்லோரும்

சிவனாரு மப்போது திருமாலைத் தானோக்கி
சபதங்கள் சொன்னமொழி சற்பினைநீர் செய்தீரே
கெருடனார் தனையழைத்து முடவனெங்கே கேளுமென்றார்
அரிநாதர் கெருடனையு மப்போது தானழைத்து
முடவனெங்கே வைத்துவந்தாய் மூர்க்கனே சொல்லுமென்றார்

திடமுடனே கடல்கடந்து செங்கதிரோன் தோன்றுமிடம்
அப்பால் வெகுதூரம் அங்குவைத்தே னென்றுரைத்தான்
செப்பமுடன் பிரமாவுஞ் சிவனாரைத் தான்வணங்கி
கற்புடைய மங்கையரு மங்கே கலந்திருப்பாள்
செப்பமுள்ள மங்கையரைச் செய்வான் மணக்கோலம்

என்றவுட னேசிவனா ரிந்த வதிசயந்தான்
கண்டுவர வேணுமென்று காரணவர் தாமெழுந்தார்

## தேவர்கள் மன்னனின் இருப்பிடம் சேருதல்

தேவர்கள் மன்னனின் இருப்பிடம் சேருதல்

காரணரும் நாரணருங் கமலத் துதித்தோனும்
வாரணனு மிந்திரனும் வானவருந் தேவர்களும்
சந்திரருஞ் சூரியருஞ் சகலகுல தேவர்களும்

.நந்தியுடன் சேடன் நட்சத்தி ராதிகளும்
முப்பத்து முக்கோடி தேவர் முனிவர்களும்
நாற்பத்து நாற்கோடி நல்ல ரிஷிகளும்

நட்சத்திர ராதிகளும் நவக்கிரக தேவர்களும்
பச்சைமால் தங்கையவள் பார்வதியும் இலட்சுமியும்

எல்லோரும் கூடி யெழுந்தனர்கா ணம்மானை
அல்லல் தவிர்த்து அருண னுதிக்குமிடம்
செம்மை யுடன்கெருடன் சீக்கிரத்தே முன்புசென்றார்
கன்மத் துயர்தீர்க்க காரணவர் தானெழுந்தார்
எல்லோரு மங்கே யின்பமுடன் சேர்ந்தனரே

வல்லவனார் பிரமன் மகாதேவர் பாதமதில்
சிவனே முடவனுடன் சிறப்புடையாள் சேர்ந்தகதை
பவனே அதிசயங்கள் பலதேவர் கண்டீரோ
என்று பிரமன் யியல்பாகத் தானுரைத்தார்

## மன்னனும் - இளவரசியும் தேவரை வணங்குதல்

மன்றல் முடவனையும் மலரோனும் தான்பார்த்து

பரமனார் பாதம் பணியென்று தானுரைத்தார்
வரமுடைய மங்கையரும் வணங்கித் துதிகள்செய்தாள்
மன்னவனும் மங்கையரும் வணங்கினார் தேவர்களை
சங்கரனே சரணமென்றார் சதாசிவனே போற்றியென்றார்
கெங்கையைச் சடையில்வைத்த கிருபையே சரணமென்றார்

முக்கண்ணா சரணமென்பார் மூர்த்தியே போற்றியென்பார்
நக்கனே சரணமென்பார் நாதனே போற்றியென்பார்
பித்தனே போற்றியென்பார் பிஞ்ஞகா சரணமென்பார்
சித்தனே சரணமென்பார் தேவனே போற்றியென்பார்
நீல கண்டனே நிமலனே சரணமென்பார்

ஆல முண்டவனே சிவனே வரகரா போற்றியென்பார்
கொன்றை மலர்சூடுங் கோவே சரணமென்பார்
கண்டங் கறுத்தோனே காரணனே போற்றியென்பார்
கண்ணுதல் மூர்த்தியே கயிலையே சரணமென்பார்
மண்ணது தனையுமுண்ட மாயவனே சரணமென்பார்

நாரணனே கேசவனே நரசிங்கா போற்றியென்பார்
நீரினில் பள்ளிகொள்ளும் நிமலனே போற்றியென்பார்
சக்கிரா யுதனே போற்றி சாரங்க பாணி போற்றி
திக்கெல் லாமோர டியாய்த் திருவடி யளந்தாய் போற்றி
பிரமனே சரணமென்பார் பிதாமகன் போற்றியென்பார்

கரகமே கையில்தூ க்குங் கமலனே போற்றியென்பார்
அந்தணா போற்றிபோற்றி அயன்திரு வடியேபோற்றி
செந்தமிழ் வேதநாதா திசைமுகா போற்றியென்பார்
வானவர் தேவே போற்றி மலர்தனி லுதித்தாய் போற்றி
மானகர் விதித்தாய் போற்றி மால்மக னயனே போற்றி

கற்பக நாடா போற்றி காமதே னுடையாய் போற்றி
உற்பன மான லோக முலகினை யாள்வாய் போற்றி
வச்சிரா யுதனே போற்றி வானவர் தேவே போற்றி
அச்சமற்றிருக்கும் வீதி அய்ங்கரா போற்றி போற்றி
பச்சைமால் மருகா போற்றி வினாயக பரனே போற்றி
உச்சித மயிலில் ஏறும் ஓராறு முகங்கள் போற்றி
முருகனே குகனே போற்றி மூர்த்தியே சரண மென்பார்
இருவினை யறுப்பாய் போற்றி ஈராறு தோளே போற்றி
தேவர்கள் தானவர்கள் திருவடி சரண மென்பான்
நவக்கிர காதி போற்றி நட்சத்திர பதியே போற்றி

அந்தகா மறலி போற்றி கூத்தனே அய்யா போற்றி
சிந்தையே மகிழ்ந்து கூறித் தேவரைச் சரணஞ் செய்தாள்
மங்கையும் பார்வதியை வணங்கியே சரணஞ் செய்தாள்
செங்கமலப் பார்வதியாள் சேயிழையைத் தான்பார்த்து
சங்கையுள்ள பெண்கொடியே தரணியிலே யுந்தனைப்போல்

அங்கங் குறையறவே யந்தணருந் தான்வகுத்தார்
செந்தா மரைமுகமுந் திரண்ட குரும்பைகளும்
தந்த வரிசைகளுஞ் சாய்ந்த குழல்முடியும்
வேல்போல் விழியும் வீழிக் கனியிதழும்
ஆலிலை போல்வயிறும் அழகுடைய பெண்கொடியீர்
மன்னன் முடவனுக்கு மணம்புணரச் சம்மதிச்சீர்
என்னவென்று சம்மதிச்சீர் இயல்புடைய மங்கையரே
கண்டார் நகைப்பார்கள் கணவனென்று சொன்னீரால்
கொண்டுதோ வுன்மனசு கொங்கையிளங்கன்னியரே
பார்த்தார் முடவனுக்குப் பாரியோ வென்றுரைப்பார்

தேகமுள்ளாள் நொண்டிதனை சேர்வாளோ வென்றுரைப்பார்
என்ற மொழிகேட்டு யின்பமுள்ள பெண்கொடியும்
நன்றியுள்ள பார்வதியை நன்றாகத் தெண்டனிட்டுத்
தாயே சற்சோதியே சகலருக்குந் தாயகமே
மாயோ ருடன்பிறந்த மாதாவே நீர்கேளிர்

ஆதி பிரமன் அயனார் விதித்தவிதி
பேதிக்கப் போகாதே பிரமர் விதித்தபடி
செம்பவள நாயகமே சிங்கத்தில் ஊனமுண்டோ
சம்புவளோ கற்புடையாள் தள்ளுவளோ கோமாவை
கால்முடவன் கைமுடவன் கண்குருட னானாலும்
மேலுடம்பு புண்ணாய் வியாதியுள்ளான் ஆனாலும்
ஊமை செவிடனுமாய் ஒப்பனைக்குஞ் சீர்கேடாய்
ஆண்மைக்கு மோராமல் அழகில் பழிப்பனுமாய்
சீர்கேட னானாலுந் திசைமுகவன் கட்டளையைப்
பாருலகில் கற்புடையாள் பழிப்பாளோ தாயாரே.

மனதில் குறைநினைத்தால் மங்கையர்க்குக் கற்பாமோ
கனமுடையாள் மன்னவனைக் கழித்தால் கெதிவருமோ
கொண்டவற்கு ரண்டுசெய்தால் கொவ்வைக்குக் கற்புமுண்டோ
கண்டார் குறையுரைத்தால் கற்புடையாள் கேழ்ப்பாளோ
நாடு தழைத்திடுமோ நல்லமழை பெய்திடுமோ

கேடும் வினைகளெல்லாம் கிளைகளுக்குஞ் சுத்தாதே
என்றுசொல்லி மங்கைவயிவ ளின்பமுள்ள பார்வதியை
தெண்டனிட்டுக் கைகட்டிச் சேவித்து நின்றனளே
தேவியார் மங்கையரைச் சிறக்க முகம்நோக்கி
பாவனையா யுன்மனதைப் பார்த்தோ மிருதயத்தைக்

கற்புக்கும் உன்றனைப்போல் காணோம் உலகுதன்னில்
செப்பமுள்ள தங்கையரே திருவே யினையுரைகேள்
சிவனார் திருவுளத்தால் சேயிழையீர் மன்னவர்க்கு
புவியாண் டிருந்திடவுங் கைகால் புகல்நீதிடுவார்
மன்னவனும் ஈசுரனைப் போற்றி வணங்கியபின்

## மன்னன் கைகால்கள் மீளப் பெறுதல்

தென்னவனார் மன்னவர்க்குத் திருவுளங்கள் தானுரைத்துக்
கைகொடுத்தார் கால்கொடுத்தார் கவலை தனைத்தீர்த்தார்
வையகத்தில் தன்நகரம் மனிமருடந் தான்சார்த்தி
மன்னர ரசான வரமும் மிகக்கொடுத்தார்
தென்னவனே யுன்னுடைய திருமடந்தை மைந்தர்களும்

இந்நகரில் மணக்கோலஞ் செய்த யினையாளும்
சேர்ந்து புதுவூர் சிறப்பாக வாண்டிருப்பீர்
ஈந்தார் வரங்க ளியல்பாகத் தான்கொடுத்தார்
கைகால் வளர்ந்தவுடன் கண்ணரைப்போய்த் தெண்டனிட்டான்
செய்கையுடன் தேவர்களைச் சிறப்பாகத் தெண்டனிட்டான்

மங்கை மனமகிழ்ந்து மாயவரைத் தெண்டனிட்டாள்
கங்கைதரிக் குஞ்சிவனார் கருடனார் தனைநோக்கி
மங்கையுடன் மன்னவனை வாரி மிகவெடுத்து
சங்கையுடன் புதுவூர் தரணியிலே தான்சேர்த்து
மாற்றரச னைத்துரத்தி மணிமகுடந் தான்சூட்டிச்

சேர்த்துவர வேணுமென்று திருவுளங்கள் செய்தனரே

## சிவனார் விதியே வெல்லும் எனக் கூறுதல்

அப்பால் சிவனா ரருளிப்ப.......
செப்பமுள்ள நாரணரே தேவர்களே யிந்திரரே
சத்த ரிஷிமுனிவர் சகலகுல தேவர்களே
சித்த முடன்பிரமன் திளைமுகவ னிட்டவிதி

விதியே விதித்தலல்லால் வேறொன்றுங் கண்டிலமே
மதியினால் தள்ளவென்று மாயோன் வேறுவிதமாய்
தந்திரங்கள் பண்ணிச் சமைந்தாரே வஞ்சகங்கள்
எந்தவிதம் வஞ்சகங்கள் செங்கருடன் செய்தாலும்
மதியினா லாவதில்லை வானவரே கண்டீரே

விதியே விதித்தபடி வேதனிட்ட கட்டளையே
அதுவே முடியுமல்லா லாகாது தன்மதியால்
விதியினால் பட்டகதை விளம்புகிறேன் கேளுமென்றார்
இந்திரனா ராயிரங்கண் ஏன்படைத்தார் கண்டீரோ
சந்திரனார் பூரணமுந் தானதுவுங் கண்டீரோ

மாயோனுஞ் சீதையுடன் வனமுறைந்தார் கண்டீரோ
கயிலை மலையிருந்து வயன்சிரசை கல்லுவதால்
இருந்தோஞ் சிலகால மிருந்தோஞ் சுடலையிலே
பரந்தோடுங் காகமொரு கண்மணியுந் தான்பறித்தார்
ஆதிமுதல் இக்கதைகள் அறிந்து தானிருந்தும்

நீதியுள்ள நாரணனார் நேமித்த யோசனைகள்
மதியினுட யோசனைகள் வலுமை நடவாமல்
விதியின் படிதானே நடந்ததைக் கண்டீரே
என்று வகைபேசி யின்பமுடன் தானெழுந்தார்
சென்றார் கயிலையிலே சிவனார் விடையேறி

பிரம புரஞ்சேர்த்தார் திசைமுகனா ரம்மானை
திருமாலும் வைகுண்டஞ் சேர்ந்தனர்கா ணம்மானை
கற்பகநாட் டிந்திரனுங் கருணை யுடன்சேர்ந்தான்
செப்பமுட னந்தகனுஞ் சேர்ந்தார் எமபுரத்து
வானவர்கள் தேவர்முனி மகாரிஷிக ளெல்லோரும்

தானவர்கள் எல்லோருஞ் சேர்ந்தார் தலந்தோறும்
எல்லோருந் தானே எழுந்தருளிப் போனபின்பு
வல்லபிரான் கருடன் வட்டமிட்டுக் கொக்கரித்து
மன்னவனுங் கற்புடைய மங்கை யிருபேரும்
தென்னவனார் வாரிச் சிறகா லெடுத்தணைத்தார்

மேனி கலையாமல் மெய்களெல்லாம் நோகாமல்
வானுலகில் மன்னனுட வன்னகரந் தான்சேர்ந்தார்
வைத்தா ரொருதலத்தே வட்டமிட்டார் கொக்கரித்தார்
சித்த மிகச்சீறிச் சினந்துவெகு கோபமுமாய்
குற்றமுள்ளான் மறுவரசன் முகந்தா னோக்கி

பித்தனோ நீயுமென்னப் பிறர்சீமை கேட்டுவந்தாய்
மாற்றரசே சொல்லுகிறேன் வகைகேளு மென்றுரைத்தார்
சூத்திரத்தான் கொடுங்கலியன் துன்பத்தால் நீயாண்டாய்
மன்னன் கலிநீங்கி மகாதேவர் தன்றுளால்
இந்நகரம் ஆண்டிருக்க வந்தா னியல்வேந்தன்

தென்னவனே யுன்னுடைய சீமைக்குப் போகுமென்றார்
அந்நேர மன்னவனு மவர்சொன்ன சொல்படியே
தன்னுடைய சேகரங்கள் சதுர்குல சேனைகளும்
மன்னவனுங் கூட வாங்கியே தான்போனான்
அப்போழுதி லேகெருட னார் பார்த்துடனே

செப்பமுடன் மந்திரியைச் சீக்கிரமே தானழைத்து
மன்னன் புதுவூரான் வந்திருக்கு மவ்விடத்தே
இந்நகரி லுள்ள வரிசையுடன் பேரிகையும்

தந்தச் சிவிகை தவில்முரசு வாத்தியங்கள்
விந்தையுடன் பேரிகைகள் வெண்சா மரையுடனே
நாடக சாலையுடன் நகரிலுள்ள வரிசையெல்லாம்
சேகரித்துக் கொண்டு சீக்கிரத்தே தானெழும்பி
பாகுடனே மன்னவனும் பைங்கொடியுஞ் சேகரமாய்
(கூட்)டி வரச்சொல்லி (கொக்கரித்தார் கருடன்)
(இட்ட)முட னப்படியே நல்லமைச்சர் சேகரமாய்
(தந்தச் சிவிகை)கயிலே வந்தனர்காண் பட்டணத்தே

## மன்னன் புதுவூர் அரசை மீளப்பெறுதல்

(அந்தச்)சிவிகை கோவில்கால் மாளிகையில் தானிருத்தி
சிந்தையுடன் மணிமகுடஞ் சிறப்பாகத் தான்சாற்றி
இந்த மலர்க்குழலாள் காரிகையுங் கூடவைத்து
பட்டாபி ஷேகம் பரிவுடனே தான்சூட்டி
வட்ட்டமிடுங் கெருடன் வைகுண்டஞ் சேர்ந்தனரே
மன்னன் புதுவூரான் மாளிகையில் கொலுவிருக்க
வன்ன முடியமைச்சர் மந்திரிமார் சூழ்ந்திருக்க
ஆனைபடை சேனைபரி யன்பாய் நிறைந்திருக்க
சேனைத் திரளோடே சிறப்பாக வீற்றிருந்தார்

மன்னருடன் பெண்கொடியாள் வாய்திறந்து யேதுசொல்வாள்
தென்னவனே தாய்தந்தை தேடி மெலிந்திடுவார்
அன்னைய வளென்னை யண்ணன்மகன் மருகனுக்கு
மன்னவர்க்கு வஞ்சனையாய் வன்னமணிப் பெட்டகத்தில்
கபடாய் அனுப்பினதைக் கெருட னெடுத்துவந்தான்

அபய மென்றுதந்தை தாயலறி மெலிந்திடுவார்
இன்னதிசை போனதென்று யாவ ரறியார்கள்
அந்நகரஞ் சேரயிப்போ தாளோலை சேருமென்றார்
ஒட்டன்வச மாளோலை நீட்டனுப்ப வேணுமென்று
வாட்டமில்லா மன்னவனார் வகையா யெழுதினரே

## விருத்தம்.

மன்னன் புதுவூரான் வரவிட்ட வாசகங்கள்
நன்னகரப் பெண்கொடியை யாசாகத்தே கெருடன்
என்னிடமாய்ச் சேர்த்தா னியல்பாய் மணக்கோலம்
...... நிறவெறி மங்கையுடன் தாமும் வந்தாம்.
...... கற்புடையாள் மாதா பிதாக்களையுஞ்

செங்கையுடன் காணவென்று செப்பினாள் கண்டீரோ
கொங்கையிளங் கன்னியரைக் கோவேநீர் தான்காண
சங்கையுடன் தானுமிங்கே சாரிவர வேணுமென்றே. 2

## நடை

இந்தப் படியே யியல்புடனே யாளோலை
விந்தையுட னொட்டன்வசம் விட்டனரே சீக்கிரமாய்
கொண்டுவந்து மன்னர்வசங் கொடுத்தானே யாளோலை
கண்டவுட னாளோலை கருத்துடனே தான்பார்த்தான்
சங்கையுடன் வாசகங்கள் கண்டவுடன் சந்தோஷம்
மங்கையர்க்கு மந்த வாசகங்கள் செப்பினரே
ஒட்ட னவன்றனக்கு ஒன்பதுவகை ரத்தினமும்
வாட்ட மறவாரித் தலையில் வழங்கினரே
கொத்துச் சரப்பணியுங் கொலுசு மிகக்கொடுத்தார்
கர்த்தனவன் விலைமதியாக் கட்டுவர்க்கந் தான்கொடுத்தான்
ஆனை யலங்கரித்து அதன்மேலே தானிருத்தி
சேனையுடன் பேரிகையுஞ் சிறப்பாய் முழக்கமிட்டு
பதினெட்டு வாத்தியங்கள் பலவகையுந் தான்முழக்கி
பதிகள் தெருக்களுடன் பலவீதி தானடத்தி
வருகிறோ மென்றுசொல்லி மறுஓலை தானெழுதி
விருது கொடுத்தனுப்ப மீண்டானே ஒட்டனவன்
தேறினான் மன்னவனு மங்கேசிறப் பாயிருந்தான்
ஓடிவந்தா னொட்டனவன் மறுஉத்தரமுந் தான்கொடுத்தான்
வாழ யிருந்தயிள மங்கை முகமலர்ந்தாள்
அந்தப் படியே யரசாளும் நாளையிலே
மைந்தர் வருங்கதையை வகையுரைப்பே னம்மானை

## மைந்தர்கள் புதுவூர் சேருதல்

ஆய ரிடந்தனிலே யமர்ந்திருந்த தம்பியர்கள்
பாயும் புலிபோலப் பருவங்க ளானபின்பு
பணிக்க ரிடஞ்சென்று பலதொழிலுந் தான்மேவி
வணக்கமுடன் தொழில்கள் வாகுடனே தான்படித்தார்
தனக்கென்று புத்தியெல்லாந் தானே சமைந்தபின்பு
இணக்கமுடன் சேவுகத்துக் கேகுவோ மென்றிருந்தார்

அப்போது மன்னவனா மங்கொருத்தன் வந்துநின்றான்
செப்பமுடன் தம்பியரே சேவிக்கச் சொல்லுகிறேன்
உரிமையுடன் சொல்லுகிறே னுண்மையுடன் நீர்கேளீர்
புதுவூரில் மன்னவனார் புதிசாய் முடிசூடி
வருவார்க ளெல்லாம் வைக்கிறார் சேவுகங்கள்

பருவமது சொன்னேன் பாலகரே யென்றுரைத்தான்
அந்த மொழிப்படியே அவ்வூர்த் திசைநோக்கி
சிந்தையுடன் மன்னவனார் சென்றா ரிருபேரும்
வந்தார் புதுவூரில் மன்ன ரிடஞ்சேர்ந்தார்
சிந்தை களிகூர்ந்து தெண்டனிட்டா ரம்மானை

அப்போது மன்னவனா ரவர்கள் முகம்பார்த்து
செப்பமுள்ள் தம்பியரே வந்தவகை செப்புமென்றார்
வந்ததென்ன செய்தியென்ன வகைக ளுரையுமென்றார்
சிந்தையுள்ள மன்னவரே சேவிக்க வந்தோங்காண்
எல்லார்க்கும் சம்பளங்க ளாட்டிதந்து சேர்த்தீரால்

வல்லமையாக் கோவில்கால் வாசலிலே காத்திருப்போம்
(இந்த மொழி கே)ட்டு யின்பமுள்ள மன்னவனார்
(வந்த)வரை யல்லவென்று செப்பமனங் கூடாமல்
(தம்பியி) ருவர்முகந் தன்வடிவுந் தன்னழகும்
இன்பமுடன் கண்டமன்ன னிகழமனந் தோணாமல்

கேட்ட சம்பளங்கள் கிருபையுடன் நாம்தருவோம்
நாட்டமுட னிங்கே நம்பியிரு மென்றுரைத்தார்
அந்தப் படியே யமர்ந்திருந்தார் தானிருவர்

## விருத்தம்

வணிகனுங் கெடுநாள் பார்த்து மங்கையை மணமே செய்யக்
சனுக்கினில் கப்ப லிங்கே சாரவே யோலை விட்டான்
குணமுடன் மீகா மன்றான் கொம்பிலே பாயுங் கட்டி
வணிகனார் நக்ரின் நோக்கி மயங்கின வரது சொல்வேன். 1

வணிகனார் திசையை நோக்கி மரக்கல மோடும் போது
குணமுள்ளாள் கற்புத் தீயால் வாயுவுங் கோபங் கொண்டு
சனமுடன் புயலுங் காற்றுஞ் சண்டமா ருதம்போல் கூடி
வினையினால் கப்பல் தப்பி மீண்டது புதுவூர்ச் சாகை. 1

# அரசி புதுவூர் சேருதல்

## நடை

செட்டியவன் மங்கைநல்லாள் செப்பியநா ளாச்சுதென்று
வாட்டமுடன் கப்பல்தனை வரவழைக்க வேணுமென்று
விட்டானே யாளோலை மீகாம னுள்ளவர்க்கு
செட்டியவன் விட்டோலை திட்டமுடன் மீகாமன்

வாசித்துப் பார்த்து மரக்கலத்தில் பாய்வகுத்து
தேசந் திசைநோக்கி விட்டான் மரக்கலத்தை
கெங்கை துணையுடையாள் மங்கையவள் கற்பதனால்
மங்கையுடையாள் ஓலை வாசகத்தைத் தானறிந்து
வணிகன்மணஞ் செய்யவென்றோ மரக்கலமும் போகுதென்று

குணமுடையாள் கற்புடையாள் கொடுமை நினைத்ததினால்
.....டன் வாதாடிச் சினத்தடித்த காற்றதுபோல்
..... தோணியெல்லா மொதுங்கப் பதுங்கடித்து
மங்கைநல்லாள் தானிருக்கும் மரக்கலமுந் தட்டழிந்து
நங்கூரம் போட்டு நாலுவிதம் பார்த்திடத்தில்

ஓடவர்கள் கைக்கு ளொருவகைக்கும் நில்லாமல்
தேடிப் புதுவூர்த் திசைநோக்கி மீண்டதுவே
வந்து திசைதப்பிப் புதுவூர் மன்னனுட எல்லையிலே
சேர்ந்து கரையருகே சென்றதுவே கப்பலுந்தான்
கப்பல்வந்து சேர்ந்ததென்று காரியப்பேர் மன்னனுடன்

செப்பமுடன் முன்னாள் சிறப்புடைய மன்னவனும்
தப்பாமல் காவலரை விட்டுத் தகைந்துகொண்டான்
..... முதல் தப்பாமல் காருமென்றார்
..... ரூட்டதிலே யதுக்கான சேவுகரை
.....ராயப் போகவென்று மன்னவனார் தானுரைத்தார்.

.....தமைய னிருவர்தா னதிகச் சம்பளத்தாள்
கொம்புமரங் காப்பார்க ளென்று மற்றோர் கூறினரே
நல்லதென்று தானிருவர் நடந்தார் கடலருகே
அல்ல விருட்டதினர்ல் அடுத்திருந்தார் கப்பலிலே
தம்பியரே யிரவில் தான்தூங்கி விட்டோமால்.

வம்பிலே கொள்கைகள்போம் மன்னவனுங் கையறுப்பான்
இரவுறக்க மில்லாம லிங்கிருப்போ மென்றுரைத்தார்

## அரசியும் மைந்தரும் ஒன்று சேருதல்

மறைவுடைய மங்கையவள் மரக்கலத்தி லுள்ளிருந்தாள்
அண்ணலே கண்மயக்கம் அனந்தல் வருகிறதுகாண்
கண்ணரே எனக்குமொரு கதையுரைக்க வேணுமென்றார்

தம்பியரே பட்டகதை சாற்றுகிறேன் கேளுமென்றார்
எம்பியே நம்முடைய யய்யரிருந்தா ராசாண்டார்
சீமைதனை யாண்டு சிறப்பாய் நடக்கையிலே
கோமான் றனக்குக் கொடிய கலிதொடர்ந்து
சீமைவிட்டு காடுவிட்டுத் தேசம்விட்டுக் காடுறைந்து

தாமரையாள் நாமிருவ ரய்யருட(ன்) நால்பேரும்
காடுமலை செடிகள் கரடிசிங்கம்நின்று மேயுமிடம்
தேடித் திசைதப்பித் திக்கற்று நிற்கையிலே
அங்கேயொரு நீரருவி கண்டோ மதனருகே
சங்கையுட னங்கிறங்கி கட்டமுது தானவிழ்த்தோம்

அன்னமதில் கிருமியா யந்ததுவைக் கண்டபின்பு
த....க் கரையருகே தானெறிந்து மீண்டாமே
(அருகி)லொரு நகர மவ்வூரில் தான்போனோம்
..... கட்டமுது கொண்டுவந் தார்சிலபேர்
அன்னம் பகுந்தா ரதுபசிகள் தீர்ந்தபின்பு

அந்நகர மன்னவன்தா னாதரித் தான்சிலநாள்
அப்பால் திசைநோக்கி யானவழி போகையிலே
தப்பி வழிநடந்து தட்டழிந்து நிற்கையிலே
நாடியொரு வேடன்வந்து நால்வர் முகம்பார்த்து
காடுதனில் நீங்கள் கருத்தழிந்து நின்றதென்ன

பாதை தடந்தப்பிப் பரிதவித்து நின்றோங்காண்
ஆதரவு (காணாமல்) நால்பேரு மென்றுரைத்தார்
வாடி யலைவானே வாருமென்று தான்கூட்டி
......வல் வேடன் நாட்டமுடன் தானழைத்து
..... சிலநா ளாதரித்தான் நாமிருந்தோம்

(திட்டமு)டன் வேடனவன் பட்டணத்தில் தான்சேர்த்தான்
பட்டணத்தில் செட்டியுட வில்லிடத்தில் நாமிருந்தோம்
கட்டி விறகெடுத்தோங் காரிகையுங் கூலிகுத்த
விறகெடுத்து வரும்போது வெள்ளம் பெருகியதில்
அறிவுடை யய்யர்நம்மை யங்குமிங்கு கட்டிவைத்தார்

அய்யாவை யுப்போது ஆற்றுவெள்ளந் தள்ளியதே
வணக்கமுடன் தாயாருஞ் செட்டி மனையிருந்தாள்
இணக்கமுள்ள யுய்யரையும் வெள்ளிமிழுத் தோடியதே
அடுத்த மறுநாள் ஆயன்வந்து கட்டவிழ்த்து
கொடுத்தானே பூாலுமன்னங் கூறாய் வளர்த்தானே

என்றுசொன்ன மொழிகளெல்லா மின்பமுள்ளாள் தான்கேட்டு
நன்றியுள்ள தம்பியரே நானுனக்குத் தாய(ா)ரென்றாள்
தம்பியரே யுங்களிடந் தான்வரவே வேணுமென்றாள்
செம்பவள வாயாரைச் சிறப்பாகத் தானழைத்தார்
மைந்தரிரு பேர்தனையும் யார்போ டணைத்தனளே

எந்தன் மக்காள் தம்பியரே எனக்கதறித் தானழுவாள்
கொங்கைதனில் பால்சொரியக் கண்களினால் நீரோட
அங்க மெலிந்திடவே கதறி விழுந்தழுவாள்
மலையில் விறகெடுக்க மன்னவரும் மைந்தருமாய்
தொலைதூ ரம்போனவரைத் தொடர்ந்துவரக் கண்டிலனே

அய்யரெங்கே தம்பியரே கதறுவாள் மங்கைநல்லாள்
தையலரே நம்மய்யர் தள்ளினது வெள்ளமென்றார்
கொங்கையிடஞ் சேர்த்தாள் கோவென்ற சத்தமிட்டு
..... கதறி வாய்புலம்பி நின்றபின்பு
..... ராடே வணிகன் தானடத்து செய்தியெல்லாம்

இன்பமுடன் சொல்லி இருந்தேன் மரக்கலத்தில்
சொன்னகெடு வந்ததென்று தூதோலை தானெழுதி
மன்ன(ன்) வணிகன் வரவிட்டான் கண்டீரோ
கப்பல் வரச்சொல்லிக் கடுகவே யோலைவிட்டான்
செப்பமுடன் கப்பலது சிறப்பாய் நடத்தையிலே

காற்றும் புயலுங் கடிதாகத் தானெழும்பி
சேர்த்திது காணிந்த திசையருகே யென்றுரைத்தாள்
என்றுசொலத் தாயாள் இயல்பாகத் தானழுதாள்
அன்றிரவு தான்போ யருண னுதித்தபின்பு
..... ........ நகைக்குமந்த வேளையிலே

..... ..... வகையறிய வேணுமென்று
..... சிவிகையிலே புறப்பட்டா ரம்மானை

## மன்னன் மனைவி மக்களுடன் ஒன்று சேருதல்

..... சூழந்துவர மதகரிகள் தான்சூழ
..... காரியப்பே ரறுவர் தான்சூழ
.....ராண் மன்னவனார் மரக்கலத்தைத் தான்தேடி

........து மைந்தர்களு மரண்மணிச் செட்டியுமாய்
.....மொழி யேதென்று சிறப்பாகத் தான்கேட்டான்
நல்ல மொழிகளெல்லாம் நணுகினார் தம்பியர்கள்
திடந்தீரத் தம்பிமார் திருமுகத்தைத் தான்பார்த்து
மைந்தரென்று தானே மனதிலே யுள்நினைத்து

கந்தமலர்ப் பூங்குழலாள் காரிகையாள் தன்மொழியும்
கேட்டு மனமகிழ்ந்து கிருபை களிகூர்ந்து
வாட்டமில்லார் மன்னவன் வணிகன் றனைநோக்கி
நன்றுசெய்தாய் நீவணிகா நாமுனக்குக் கேடுசெய்வோம்
அன்றுமென்னைக் காப்பாற்றி யரிசி கறிகொடுத்தாய்
...... திசைதப்பிக் கேடுகப்ப லானபின்பு
...... பேரோடி வணிகனுக்குத் தானுரைத்தார்
...... ழுதிலே வணிக னலைமலைந்து தள்ளாடி
...... டன் கப்பல் திரவியமும் போச்சுதென்று
...... ராக்குக் களமுதலும் போனாலும்

...... ள் மங்கையரைத் திருப்பவே வேணுமென்று
...... செட்டி வழிநோக்கித் தானடந்தான்
...... (க)டல் கரையி லின்பமுடன் வந்தனளே
கப்பல் கெடுதிவந்து கரையருகே சேர்ந்துதென்றால்
உற்புனமா யெந்தனுக்கு வொருபொருளுங் கிட்டாதே

கன்னிகையா ளிங்கிருந்தாள் காரிகையைத் தான்விடேன்
மன்னவனே என்தாயார் வகையறிய மாட்டாயோ
தென்னவனே உன்மனையில் சிறப்பாய்க் குடியிருந்தோம்
அன்னங் கொடுத்தா யாதரித்தாய் வீடுதந்தாய்
சொன்னா லறியீரோ துன்பமில்லாச் செட்டீரே.

மன்னவனே தாயாரை மறைவாக ஆதரித்தீர்
என்றுசொல்லச் செட்டி இதெல்லாங் கபடமென்று
.....டமுந் தந்தா யிருப்பு மிகக்கொடுத்தாய்
(மல்ல)வனே கட்சி மறையோ ரிடமிருந்து
கல்லு மலையடியில் கட்டி விறகெடுத்து

ஆறு பெருகி அலையலையாய்ப் போகவிட்டோர்
கூறுகெட்டு நாமலைந்தோம் கோமான் திருவுளத்தால்
நாடு தனில்வந்தோம் நகரமது வாழுகிறோம்
சுடலை தனிலாடுஞ் சுந்தரனார் சொல்படிக்கு
நாமிருக்கு மத்தலத்தில் நங்கையுடன் மைந்தர்களும்

கோமா னுரைத்தபடி கொண்டுவந்து சேர்த்தனரே
என்றுசொல்லி மன்னவனா ரின்பமுள்ள மங்கையரை
தனது மொழியாளைத் தானனுப்பி மாளிகையில்
வணிகன் றணையழைத்து மன்னவனே நீகேளாய்
பணிகள் பலசரக்குப் பலவகைக ளுள்ளதெல்லாம்

கொத்தாவாய்க் கப்பலுடன் கொண்டுபோ .வுந்தனக்கே
சித்தமுடன் நாமுனக்குச் சிறப்பாகத் தந்துவிட்டோம்
என்றுசொல்லி மன்னவனு மின்பமுள்ள தம்பியுடன்
சென்றார் நகரமதில் கோவில்கால் சேர்ந்தனரே
கோவில்கால் தன்னில் குழாங்கூட்டந் தன்னுடனே

சேவித்தார் தன்னுடனே சேர்ந்தனர்கா ணம்மானை
மன்னவரும் மைந்தர்களும் மாளிகையி னுள்புகுந்து
சின்னவர்க ளிருபேருங் கோவில்கால் சேர்ந்தபின்பு
மைந்த ரிருபேரும் வாகுடனே சேர்ந்தபின்பு
தந்தையுட பாதஞ் சரணமென்று தான்பணிந்தான்

மாதாவின் பாதம் வரிசையுடன் தெண்டனிட்டான்
(கோதை)சிறு மாதாவைக் கும்பிட்டுத் தெண்டனிட்டான்
.....தமக்கையுமாய்த் தம்பி யிருபேரும்
செங்கோல் தரித்துஞ் செகவீர மன்னவனும்
அய்வரொரு பேரா யன்புடனே தானிருந்து

சொல்ல வகைகள் சிறப்புடனே தான்மொழிந்து
தங்களிலே கலியனுட சாபமுறை யுள்ளதெல்லாம்
அங்கங்கே தான்போ யவதி நடந்ததெல்லாம்
வகைக ளுடன்பேசி மயக்கந் தெளிந்திருந்தார்
வகையுடனே மும்மூர்த்தி வானிலுள்ள தேவரெல்லாம்

தேவர் பலபேருஞ் சிறப்பாக வந்தெழுந்து
(பாவ)னைகள் கலிதோஷம் பரமே சுரன்தீர்த்து
செங்கெருடன் பட்டணத்தில் சேர்த்த வகைகளெல்லாம்
தங்கையுடன் மன்னவனார் தான்மொழிந்தா ரம்மானை
எல்லோரும் கூடி யிருந்தனர்கா ணம்மானை

அல்லல் துயர்தீர்ந்து அரனார் சரணமென்று
கும்பிட்டார் தெண்டனிட்டார் கொள்ளை யிட்டார்
தம்பிரா னேயுனக்குச் சரணமென்று தானிருந்தார்.

## வாழ்த்து

சங்கரனா ரிந்திரனார் சந்திரனார் வாழியதே
செங்கதிரோன் மாயவனா ரிந்திரனார் வாழியதே
அந்தணனார் தேவரிஷி கள்பெருமை வாழியதே
ஆனைக் கருள்செய்தோ னடிகையூர் வாழியதே
சேனைக் கருள்புரிந்த திருமாலும் வாழியதே
ஆனை யுரித்தோனு மைங்கரனும் வாழியதே
சேனைப் படைக்கையான் திருக்கைவேல் வாழியதே
அரிகர·புத்திரனார் அமலனார் வாழியதே
படித்தோர்கள் கேட்டோர்கள் பலபேரும் வாழியதே
எடுத்துப் படித்தோர்க ளெல்லோரும் வாழியதே
இன்பமாய்க் கேட்டவர் களெல்லாரும் வாழியதே
அன்பா தரவாய் அனைவோரும் வாழியதே.
நல்லோர் பெரியோர்கள் நலமுடனே வாழியதே
இல்லோ ரெளியோர்க ளெல்லோரும் வாழியதே.

## நூற்பயன்

தேடிய பொருள்கைக் கூடுஞ் சிவகதி பலனு முண்டாம்
நாடிய புதுவூ ராச னற்கதை கேட்டோர்க் கெல்லாம்
ஓடியே பாவம் போகும் உண்மையாய்க் கலியும் வாங்கும்
பாடினோர் கேட்டோர்க் கெல்லாம் பலனிது கொடுக்கும் வாறே

## பின்னிணைப்புகள்

# சொல்லடைவு

### 1. அணிகலன் பெயர்கள்

| | |
|---|---|
| அரைஞாண் | 119 |
| ஆடை | 119 |
| ஆபரணம் | 1512 |
| கொப்பு | 115 |
| சவரம் | 116 |
| தண்டை | 118 |
| பட்டு | 1511 |
| பாடகம் | 118 |
| புடவை | 361 |
| மாங்கல்யம் | 1510 |
| வளையல் | 116 |

### 2. அளவைப் பெயர்கள்

| | |
|---|---|
| காதம் | 290 |
| நாழிகை | 198 |

### 3. ஆயுதப் பெயர்கள்

| | |
|---|---|
| அம்பு | 345 |
| கடையால் | 800 |
| கம்பு | 800 |
| கேடயம் | 1524 |
| மழுவு | 345 |
| வில் | 345 |
| வேல் | 345 |

### 4. இடப்பெயர்கள்

| | |
|---|---|
| அக்கரை | 773 |
| அணைகரை | 1016 |
| அரண்மனை | 1067 |
| இக்கரை | 773 |
| இல்லி ம் | 130 |
| உலகம் | 70 |
| காடு | 45 |
| கானகம் | 28 |
| குன்று | 344 |
| கோட்டை மதில் | 1073 |
| செகதலம் | 42 |
| செக்கடி | 1309 |
| தரணி | 416 |
| தலம் | 1316 |
| தெரு | 1296 |
| தென்கரை | 752 |
| தேசம் | 40 |
| நந்தவனம் | 1018 |
| நாடு | 45 |
| பட்டணம் | 386 |
| பள்ளியறை | 1175 |
| பாரில் | 78 |
| புலி | 141 |
| மலை | 71 |
| மாடம் | 945 |
| மாளிகை | 945 |
| மானிலம் | 29 |
| வடகரை | 751 |
| வனம் | 186 |
| வாசல் | 1100 |
| விந்தமாபர்வதம் | 704 |
| வீடு | 945 |
| வீதி | 1296 |
| வையகம் | 2011 |

## 5. இயற்கைப் பெயர்கள்

மலை 69
மாரி 56
மேகம் 54
வான் 61

## 6. இறைத்தலப் பெயர்கள்

கற்பகநாடு 13
வடகயிலை 8
வெள்ளியங்கிரி 1333
பாற்கடல் 60

## 7. இறைப் பெயர்கள்

அச்சுதன் 903
அத்தனார் 700
அந்தகன் 1903
அயன் 334
அய்ங்கரன் 1808
அரன் 331
ஆதிநாராயணன் 903
ஆறுமுகம் 15
ஆனைமுகத்தோன் 15
இரதி 1091
இலட்சுமி 904
கந்தன் 1259
கலியன் 45
கண்ணனார் 249
காகவாகனன் 176
காமன் 1091
காரணன் 1258
குகன் 1811
குபேரன் 138
குமரன் 48
கேசவன் 1159
சங்கேந்துங்கையான் 604
சந்திரன் 337
திருமகள் 336
திருமால் 334
தேவர் 11
நமன் 341
நாரதர் 1359
பரன் 332
பார்வதி 904
மதன் 1089
மறலி 1161
மானேந்தி 8
முருகன் 1811
முனிவர் 1334
வாரணன் 1763
விநாயகன் 22
வேலவன் 15

## 8. உணவுப்பொருட் பெயர்கள்

அதிரசம் 1505
அப்பம் 1505
அமுது 1057
அரிசி 489
அன்னம் 2143
கரும்பு 1486
காய்கறி 274
கூழ் 1543
சர்க்கரை 1530
சாதம் 1528
சீனி 1530
சுரபி 920
தினைமாவு 401
தேன் 401
தேங்கனி 319

தோசை 1505
நெய் 275
பருப்பு 275
பலாச்சுளை 401
மாங்கனி 319
மிளகு 275
வடை 1505
வாழைப்பழம் 1486
வெஞ்சனம் 1528


## 9. உறவு முறைப்பெயர்கள்


அண்ணன் 1558
அன்னை 1947
கணவன் 867
குழந்தை 200
குழவி 309
கொழுநன் 1657
சகோதரன் 126
தங்கை 408
தந்தை 126
தமக்கை 408
தமபி 239
தாய் 126
தமக்கை 408
தம்பி 239
தாய் 126
பாலகன் 708
பிதா 1959
பிள்ளை 711
மகள் 1656
மணவாளன் 1540
மருகன் 1522
மாதா 1959
மாப்பிள்ளை 1513
மூதாக்கள் 305
மைந்தர் 175


## 10. ஊர்ப்பெயர்கள்


அத்தாணி நல்லூர் 23
அழகாபுரி 23
ஆளையூர் 1474
புதுவூர் 40
வீனோடு 1415


## 11. ஊர்வனவற்றின் பெயர்கள்


கார்கோடகன் 28
சர்ப்பம் 285
புழு 251
மண்ணுழியன் 29


## 12. எண்ணுப் பெயர்கள்


ஆயிரம் 153
ஈரேழு 961
ஈறாறு 1812
எட்டு 1239
எட்டுப்பத்து 161
ஓராறு 1810
கோடி 152
நாலாறு 17
நாலிரண்டு 361
நாற்கோடி 12
நாற்பத்து 12
பதினாறு 198
பதினெட்டு 1975
பன்னிரெண்டு 16
முக்கோடி 11
முப்பத்து 11
மூன்று 17

### 13. காலப்பெயர்கள்


| | |
|---|---|
| அநீதி | 671 |
| அன்று | 261 |
| ஆண்டு | 909 |
| இரவு | 198 |
| இன்று | 395 |
| திங்கள் | 111 |
| நாழிகை | 198 |
| நாளை | 395 |
| நாள் | 202 |
| நேற்று | 823 |
| நொடி | 278 |
| பகல் | 1143 |
| மாலை | 968 |
| வேளை | 996 |


### 14. கிரகப்பெயர்கள்


| | |
|---|---|
| அருக்கன் | 771 |
| அருந்ததி | 913 |
| சூரியன் | 338 |
| பானு | 16 |


### 15. சாதிப்பெயர்கள்


| | |
|---|---|
| அந்தணத்தி | 663 |
| அந்தணர் | 703 |
| ஆசாரி | 1490 |
| ஆயர் | 1325 |
| ஆரியர் | 165 |
| இடையன் | 851 |
| செட்டி | 428 |
| பண்டாரம் | 1020 |
| பிராமணத்தி | 630 |
| வள்ளுவன் | 1235 |
| வேடன் | 211 |
| வேதியர் | 896 |


### 16. தாவரப் பெயர்கள்


| | |
|---|---|
| கதலி | 85 |
| கரும்பு | 83 |
| செந்நெல் | 83 |
| வாழை | 83 |
| எருக்கு | 1234 |
| கருங்காலி | 637 |
| மயிலை மரம் | 734 |
| விருட்சம் | 752 |


### 17. தொழில்முறைப் பெயர்கள்


| | |
|---|---|
| ஓட்டன் | 1953 |
| ஓடவர் | 2035 |
| கள்ளன் | 1068 |
| கப்பல் விசாரிப்பான் | 992 |
| காரியப்பேர் | 2039 |
| காவலர் | 1101 |
| கொல்லன் | 1097 |
| சம்பளங்களாட்டி | 2004 |
| செக்கான் | 1305 |
| தலையாரி | 1119 |
| பணிக்கர் | 1986 |
| வணிகன் | 435 |
| விறகு கட்டி | 494 |


### 18. நறுமணப் பொருட்பெயர்கள்


| | |
|---|---|
| அடைக்காய் | 268 |
| இருவாட்சி | 634 |
| சந்தனம் | 633 |
| சவ்வாது | 91 |
| சுகந்தம் | 634 |
| சாந்து | 91 |
| புனுகு | 91 |
| மாலை | 1513 |

முல்லை 634
வெள்ளிலை 280

## 19. நிறப்பெயர்கள்

காரி நிறம் 62
நீல நிறம் 63
பச்சை நிறம் 75
வெள்ளி நிறம் 59

## 20. பறவைப் பெயர்கள்

கருடன் 1427
காகம் 30
மயில் 30

## 21. பொதுப் பெயர்கள்

அசையாமணி 1100
அய்யம் 1460
அலங்காரம் 1479
ஆண்டி 1244
ஆளோலை 996
உபாயம் 1084
எருக்கிலை 1234
ஓலை 1489
கட்டுவர்க்கம் 1511
கங்கை 1000
கழுவேற்று 1104
கன்னமிடல் 1074
சபதம் 1344
சாதி 1076
சிலிகை 1928
தோரணம் 1481
நொண்டி 1304
பொட்டணம் 1079
பூலோகம் 1361
மரக்கலம் 1324
முகுர்த்தம் 1371
முரசு 1235
வத்தி 1108
விதானம் 1487

## 22. பொருட் பெயர்கள்

அம்பு 345
கச்சை 345
கடையால் 800
கட்டை 1010
கம்பு 800
கசை 1149
கபாடம் 1496
காசு 361
கூடை 1021
தவில் 1928
திரவியம் 944
தோணி 2032
நங்கூரம் 2034
நிதியம் 1078
பணம் 361
பலகை 1317
பூட்டு 1507
பெட்டகம் 1501
பேரிகை 1927
பொன் 944
முரசு 1928
வெண்சாமரை 1929

## 23. மும்மூர்த்திகளின் பெயர்கள்

### 1. சிவன்

ஈசன் 132
கண்டங்கறுத்தோன் 1792
காரணன் 1792
கொன்றை மலரான் 1791

சங்கரன் 1783
சதாசிவன் 1783
நக்கன் 1786
நாதன் 590
நிமலன் 1789
நீலகண்டன் 1789
பரஞ்சோதி 610
பரமேஸ்வரன் 7
பிஞ்ஞகன் 1787
முக்கண்ணன் 1785

2. திருமால்

அயன் 334
அரி 1415
ஆதிமூலம் 25
கேசவன் 1795
சக்கிராயுதன் 1797
சாரங்கபாணி 1797
நரசிங்கன் 1795
நாரணன் 1795
பெருமாள் 6
மாயவன் 24
வேதநாராயணன் 14

3. பிரமன்

அந்தணன் 9
கமலன் 1800
சதுர்முகன் 461
செந்தமிழ்த் தேவன் 1802
திசைமுகவன் 1802
நான்முகன் 9
பரமன் 583
பிதாமகன் 1799


## 24. விலங்குப் பெயர்கள்


ஆனை 152
கரடி 296
சிங்கம் 1003
பரி 152
புலி 296
மதகரி 86
மத்தகெசம் 24
மான் 8

# துணை நூற்பட்டியல்

1. ஏட்டில் எழுதாக் கவிதைகள், செ. அன்னகாமு, சர்வோதயப் பிரசுராலயம், தஞ்சை 1960.
2. கதைப்பாடல், மு. அருணாசலம், காந்தி வித்யாலயம், திருச் சிற்றம்பலம், 1976.
3. கலைக்களஞ்சியம், தொகுதி-2, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1955
4. கலைக்களஞ்சியம், தொகுதி-4, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1956
5. சிலப்பதிகாரம் மூலமும் உரையும், டாக்டர் உ. வே. சாமிநாதையர், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், நிழற்படப் பதிப்பு, 1985.
6. தமிழில் அம்மானைப் பாடல்கள், த. இராசாராம், கேரளப் பல்கலைக் கழக வெளியீடு.
7. தமிழில் கதைப்பாடல்கள், டாக்டர் அ. நா. பெருமாள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1987
8. தமிழ் இலக்கிய வகையும் வடிவும், ச. வே. சுப்பிரமணியன், தமிழ்ப் பதிப்பகம், சென்னை, 1984.
9. தமிழ் நாட்டு மக்களின் மரபும் பண்பாடும், சோமலே, நேஷனல் புக் டிரஸ்ட், புது தில்லி, 1981.
10. தமிழர் நாட்டுப் பாடல்கள், நா. வானமாமலை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, 1977.
11. தமிழ்-தமிழ் அகரமுதலி, மு. சண்முகம் பிள்ளை (தொகுப் பாசிரியர்), தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1985.
12. தொல்காப்பியம், எஸ். ராஜம் பதிப்பின் மறுபதிப்பு, சர்வோதய இலக்கியப் பண்ணை, மதுரை, 1978.
13. நாட்டுப்புறவியல் — ஓர் அறிமுகம், மு. சண்முக சுந்தரம், இலக்கிய மாணவர் வெளியீடு, சென்னை, 1975.
14. மூலபாட ஆய்வியல், அ. விநாயகமூர்த்தி, பால்முருகன் பதிப் பகம், மதுரை, 1978.
15. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி-6, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், 1988.

# உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## சுவடி நூல்கள் வெளியீடு

| | | | |
|---|---|---|---|
| 1. | பணவிடு தூது, (பதி.) இரா. நிர்மலாதேவி | 6 | 00 |
| 2. | கூவநூல், (பதி.) ச.வே. சுப்பிரமணியன் | 7 | 50 |
| 3. | பிரபந்த தீபம், (பதி.) ச.வே. சுப்பிரமணியன் | 5 | 00 |
| 4. | பிரபந்தத், திரட்டு, (பதி,) அன்னிதாமசு | 16 | 00 |
| 5. | மனைநூல், (பதி.) பூ. சுப்பிரமணியம் | 15 | 00 |
| 6. | கருவூரார் பலதிரட்டு, (பதி.) இரா. நிர்மலாதேவி | 12 | 00 |
| 7. | சுவடியியல் பயிற்சி கையேடு, மு.கோ. ராமன் | 6 | 00 |
| 8. | கும்மிப் பாடல்கள், (பதி.) ஏ.என். பெருமாள் | 16 | 00 |
| 9. | பிரபந்த தீபிகை, (பதி.) ச.வே. சுப்பிரமணியன் & அன்னிதாமசு | 12 | 00 |
| 10. | கண்மருத்துவம், (பதி.) வே.இரா. மாதவன் | 50 | 00 |
| 11. | திருமயிலை, உலா, (பதி.) மு.கோ. ராமன் | 7 | 00 |
| 12. | திருக்குருகூர் திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ், (பதி.) ச. சிவகாமி | 10 | 00 |
| 13. | ஊஞ்சல் இலக்கியம், (பதி.) த. அழகப்பராசு | 10 | 00 |
| 14. | மீனாட்சியம்மன் பிள்ளைத்தமிழ், (பதி.) வே. இரா. மாதவன் | 7 | 00 |
| 15. | தமிழ்ச் சுவடிகள் அட்டவணை, இரா. நிர்மலாதேவி | 6 | 00 |
| 16. | Siddha Medical Manuscripts in Tamil, V.R. Madhavan | 8 | 00 |
| 17. | தன்வந்திரி குழந்தை வாகடம், (பதி.) க. லலிதாம்பிகை | 14 | 00 |
| 18. | வர்ம சூத்திரம், (பதி.) செ. ஜான் செல்வராஜ் | 10 | 00 |
| 19. | மருந்து செய்முறைகள், (பதி.) தி. லலிதா | 45 | 00 |
| 20. | வாத்தியமரபு, (பதி.) அ.நா. பெருமாள் | 20 | 00 |
| 21. | சுவடியியல், பூ. சுப்பிரமணியம் | 48 | 00 |
| 22. | தோட்டுக்காரி கதை, (பதி.) வ. அலமேலு | 28 | 00 |
| 23. | தேரையர் அந்தாதி, (பதி.) டாக்டர் மா. புனிதா | 33 | 00 |
| 24. | குணவாகடம், (பதி.) வே. நெடுஞ்செழியன் | 40 | 00 |
| 25. | குசலவர் சுவாமி கதை, (பதி.) இரா. வசுமதி | 36 | 00 |
| 26. | சிவகிரி குமர சதகம், (பதி.) மெய். சந்திரசேகரன் | | |